ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

    

# ஸ்ரீபா$_4$ஷ்யஸாரம்

ஸ்ரீ உ. வே. ந்யாய வேதாந்த வித்வான்

வேளுக்குடி

**K. வரதாசார்ய ஸ்வாமி**

1985

இப்புத்தகத்தை மிக நல்ல முறையில் அச்சிட்டு வெளியிட உதவிய ரத்னம் பிரஸ், உரிமையாளர் திரு. *M.* மோகன்ராம், போர்மன் திரு. *P. J.* சத்தியநாராயணு அவர்களுக்கும் அச்சகத் தொழிலாளர் களுக்கும் எமது நன்றியைத்தெரிவித்துக் கொள்கிறோம்.

இப்புத்தகம் கிடைக்குமிடம்:—

ஸ்ரீ உ. வே. K. வரதாச்சாரியார் ஸ்வாமி
15, தம்பு செட்டி தெரு, சென்னை-600 001

K. V. சிங்கராச்சாரி
10, தியாகராஜபுரம், சென்னை-600 004

விலை ரூபாய் பத்து

அச்சிட்டோர்
ரத்னம் பிரஸ், 41, பத்ரையன் தெரு, சென்னை-600 001

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ பாஷ்யஸாரம்

## முன்னுரை

*வேதாபஹாரிணம் தைத்யம் மீநரூபி நிராகரோத்*
*ததர்த்தாபஹாரிண: ஸர்வாந் வ்யாஸ ரூபி மஹேச்வர:*
*ஸம்யங்ந்யாய கலாபேந மஹதா பாரதேந ச*
*உபப்ரும்ஹிதவேதாய நமோ வ்யாஸாய விஷ்ணவே.*

பேரின்ப வாழ்வுபெற இன்றியமையாதது உண்மையுணர்வு, தத்வ ஜ்ஞானம். இது தன்னைப்பெற நமக்கு காருணிகனான ஸர்வேச்வரன் பற்பல சாஸ்த்ரங்களை உபகரித்துள்ளான். இது பற்றி இவனைப் பிரான் என்று பெரியோர் பாராட்டுகின்றனர். அவன் தந்தருளிய சாஸ்த்ரங்களுள் தலையானது சாரீரகம் என்பது. இது தன்னை ப்ரஹ்மமீமாம்ஸை என்றும் உத்தரமீமாம்ஸை என்றும் கூறுவர். ஸ்ரீமந் நாராயணனே வ்யாஸராக அவதரித்து ப்ரஹ்மஸூத்ர க்ரந்தத்தை அருளிச்செய்தார் என்று புராணம் கூறுகிறது. இதுவே சாரீரகம். ஜகத்தையே தனக்குச் சரீரமாகக் கொண்ட பகவான் சாரீரன். "தஸ்யைஷ ஏவசாரீர ஆத்மா" என்று உபநிஷத்து கூறுகிறது. சாரீரனைப்பற்றிக்கூறும் சாஸ்த்ரம் சாரீரகம் எனப்படுகிறது. "ஸம்ஹிதம் ஏதத் சாரீரகம்" என்று பகவத் போதாயனரும் அருளிச்செய்தார். ஸ்ரீவேதவ்யாஸர் உபநிஷத்துக்களாகிற திருபாற் கடலைக் கடைந்து சாரீரகமான அம்ருதத்தையெடுத்து அடியார்க்கு வழங்கியுள்ளார். இது ஆத்ம க்ஷேமங்கரமான அம்ருதமாகும். "பாராசர்ய வசஸ்ஸுதாம் உபநிஷத் துக்தாப்தி மத்யோத் த்ருதாம்" என்று ஸ்ரீபாஷ்யாரம்பத்தில் எம்பெருமானார் அருளிச்செய்தார்.

சாரீரகத்தில் ஸ்ரீவேதவ்யாஸர் சதுஸ்ஸூத்ரியான உபோத்காதத்துக்கநந்தரம், ஈக்ஷத்யதிகரணமான சாஸ்த்ராரம்பத்தில் பரமாத்மா ஜகத் காரண பூதன் அசித் விலக்ஷணன் என்றறுதியிட்டார். அவ்வதிகரணத்திலே "தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்" என்று "அவனே உபாயபூதன்" என அறுதியிட்டார். ஜகத் காரணத்தையிறே மோக்ஷோபாயமாக வேதாந்தம் அறுதியிட்டது. அடுத்து ஆநந்தமயாதிகரணத்தில் "அவனே பரமப்ராப்யபூதன்" என்பதனையும், அவன் ஸம்ஸாரி விலக்ஷணன் என்பதனையும், முக்த விலக்ஷணன் என்பதனையும் "ஆநந்தமய: அப்யாஸாத்" "காமாச்ச நாநுமாநாபேக்ஷா" "நேதரோऽநுபபத்தே:" "பேதவ்யபதேசாச்ச" என்று ஸூத்ரகாரர் அறுதியிட்டார். அடுத்து அந்த அதிகரணத்தில் அவன் திவ்யமங்கள விக்ரஹ விசிஷ்டன் என்று அறுதியிட்டார். இவற்றினுடைய விவரணமே மேல் 149 அதிகரணங்களாகும்.

ஆக ஜகத் காரணபூதன் உபாயோபேயபூதன் ப்ரக்ருதிபுருஷ விலக்ஷணன் திவ்யமங்கள விக்ரஹ விசிஷ்டன் பரமாத்மா என்று வ்யாஸ சித்தாந்தம் தேறுகிறது.

சாரீரகத்துக்கு ஸ்வாமி எம்பெருமானார் அருளிச்செய்த பாஷ்யம் ஸ்ரீபாஷ்யம் எனக் குலாவப்படுகிறது. ஸ்ரீபாஷ்யம் மஹாஸமுத்ரம். அதினுடைய ஸாரமாக "ஸ்ரீ பாஷ்யஸாரம்" என்று இந்த க்ரந்தம் எழுதப்படுகிறது. இது தன்னைக்குற்றம் களைந்து பெரியோர்கள் ஸஹஜ ஸௌஹார்தத்தாலே ஆதரிக்குமாறு பணிவன்புடன் வேண்டுகிறேன்.

இப்புத்தகம் ஸ்ரீபெரும்பூதூர் மஹாஸம்ப்ரோக்ஷண விழாவின் போது (7—2—1985) ஸ்ரீபெரும்பூதூர் எம்பெருமானார் அவதார மண்டபத்தில் ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ உ. வே. ஸ்ரீ வரத யதிராஜ ஜீயர் ஸ்வாமி திருக்கரங்களால் பற்பல மஹாவித்வான்கள் முன்னிலையில் வெளியிடப்படுகிறது.

தாஸன்,

கி. வரதாசாரியன்.



ஸ்ரீ

ஸ்ரீமேத ராமாநுஜாய நம:



நம்பெருமாள். திருவரங்கம் பெரியகோயில்

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



ஸ்ரீ. உ. வே. ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
காரப்பங்காடு, ஜீயர் ஸ்வாமி

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



ஸ்ரீ. உ. வே. ந்யாய வேதாந்த வித்வான்
காரப்பங்காடு. வேங்கடாசார்ய ஸ்வாமி

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



ஸ்ரீ. உ. வே. வேளுக்குடி K. வரதாசார்ய ஸ்வாமி

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீபா₄ஷ்ய ஸாரம்

## விஷய ஸூசிகை

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# "ஸ்ரீபா₄ஷ்ய ஸாரம்"

*[ஸ்ரீ உ. வே. ந்யாய வேதா₃ந்த வித்வான்*
*K. வரதா₃சார்ய ஸ்வாமி]*

पादुके यतिराजस्य कथयन्ति यदाख्यया।
तस्य दाशरथेः पादौ शिरसा धारयाम्यहम् ॥

ஸ்ரீ வேத₃ வ்யாஸ ப₄க₃வான் அருளிச்செய்த ப்₃ரஹ்ம ஸூத்ரங்களாகிற ஶாரீரகமீமாம்ஸா ஶாஸ்த்ரத்துக்கு நம் ஸ்வாமி எம்பெருமானார் அருளிச்செய்த விபுல வ்யாக்₂யாந மான ஸ்ரீ ப₄ாஷ்யத்தின் ஸாரார்த்த₂ங்களை ஸங்க்₃ரஹமாக கண்டு நாம் அநுப₄விட்போம்.

प्रपद्ये प्रणवाकारं भाष्यं रङ्गमिवापरं ।
परस्य ब्रह्मणो यत्र शेषित्वं स्फुटमीक्ष्यते ॥

அதாவது:—அபர ஸ்ரீரங்க₃விமாநம்போல் ப்ரணவாகார மாக ப்ரகாசிக்கிற ஸ்ரீப₄ாஷ்யத்தை ஶரணமாக வரிக்கிறேன்; எதில் ப்₃ரம்மத்தின் ஶேஷித்வமானது ஸ்பஷ்டமாகக் காணப் படுகிறதோ—என்றபடி, ப்ரணவமாகிற ஓங்காரத்திலும் ஸ்ரீப₄ாஷ்யத்திலும் ப்ரகாஶிக்கிற பரமாத்மாவினுடைய ஶேஷித் வம்—பிறரால் உண்டுபண்ணப்பட்டிருக்கிற அதிஶயத்தை (மேன்மையை)த் தாங்கியிருத்தல். ஸ்ரீரங்கத்தில் ப்ரகாஶிக்கிற ஶேஷித்வம் ஶேஷஶாயித்வம் என்று கண்டு கொள்வது.

ஸகல வேத₃ ஸங்க்₃ரஹமான திருமந்த்ரத்தில் பத₃த்ரயத் தால் ஜீவாத்மாக்களுடைய அநந்யார்ஹஶேஷத்வ அநந்ய ஶரணத்வ அநந்ய போ₄க்யத்வரூப ஆகாரத்ரயம் ஶாப்₃த₃மாகப்

ப்ரதிபாதி3தம். பரமாத்மாவினுடைய ஶேஷித்வ ஶரண்யத்வ ப்ராப்யத்வங்களாகிற ஆகாரத்ரயம் ஆர்த்த2மாகக் கிடைக்கும். ப4க3வானுடைய ஆவேஶாவதாரமான ஶ்ரீவேத3வ்யாஸர்—அத்4யாய சதுஷ்டயாத்மகமான ஶாரீரகமீமாம்ஸா ஶாஸ்த்ரத்திலே முதல் இரண்டு அத்4யாயங்களில் பரப்3ரஹ்மத்தை ஜக3தே3ககாரணமாயும் சேதநாசேதநவிலக்ஷணமாயும் ஸர்வஶேஷியாகவும் அறுதியிட்டார். இதுவே ப்ரணவார்த்த2 நிரூபணம். மூன்றாவது அத்4யாயத்தில் ப்3ரஹ்மம் உபாயம் என அறுதியிட்டார். இதுவே நம: ஶப்3தா3ர்த்த2 நிரூபணம். நான்காமத்4யாயத்தில் பரப்3ரஹ்மம் ப்ராப்யம் என அறுதியிட்டார். இதுவே த்ருதீய பதா3ர்த்த2 நிரூபணம். காரணத்வமும் அபா3த்4யத்வமும் உபாயத்வமும் உபேயத்வமுமிறே அத்4யாய சதுஷ்டயார்த்த2ம். இவ்வர்த்த2ங்களை ஸ்வாமி எம்பெருமானார் ஶ்ரீபாஷ்யத்தில் அருளிச்செய்துள்ளார். இதனை விவரிக்கிறேன்.

வேத3ாந்தங்களில்—ஜக3த்காரண வஸ்துவே த்4யேயம் ஶரண்யம் என்ற நியமம் காட்டப்பட்டுள்ளது ப4க்தியாகவுமாம் ப்ரபத்தியாகவுமாம் அவை ஜக3த்காரணத்தினிடத்திலேயே அனுஷ்டிக்கப்படவேண்டியவை என்றே வேத3ாந்த ஸித்3தா4ந்தம், ப்3ரஹ்மகார்யமான ஸம்ஸாரி ஜீவாத்மா தன்னோடொத்த மற்றொரு ஸம்ஸாரியைத் தஞ்சமாகப் பற்றுவது ஓட்டை ஓடத்தோடு ஒழுகலோடம் மாமித்தனை "தாபத்ரயாதுரை: அம்ருதத்வாய ஸ ஏவ ஜிஜ்ஞாஸ்ய:" என்கிறபடியே காரணப்3ரஹ்மமே ஸம்ஸாரி முமுக்ஷு ஜிஜ்ஞாஸ்யம் உபாஸ்யம் ஶரண்யம் என்று ஸித்3தா4ந்திதம். "காரணந்து த்4யேய:" [காரணவஸ்துவே தியானிக்கத்தக்கது.] "யோ ப்3ரஹ்மாணம் வித3தா4தி பூர்வம் முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்3யே" [பிரமனைப் படைத்த காரணப்பொருளை முமுக்ஷுவான யான் ஶரணமடைகிறேன்] என்றிறே வேதா3ந்த கோ4ஷமிருக்கும்படி. இந்த வேதா3ந்த ஸித்3தா4ந்

த்தை உலகில் ஸ்தாபிப்பதற்கென்றே ஸ்ரீவ்யாஸருடைய திருவவதாரம். இவ்விடத்திலே, "நாராயணனிடத்திலிருந்து உண்டான ஜ்ஞானம் க்ருதயுகத்தில் நிலைபெற்றிருந்தது. த்ரேதாயுகத்தில் சிறிது மாருட்டம் அடைந்தது. த்வாபர யுகத்தில் சிதறிப்போயிற்று. கௌதமருடைய சாபத்தால் ஜ்ஞானமானது அஜ்ஞானபாவத்தை அடையவே. தத்வநிஸ்சய மில்லாமையால் ஸங்கீர்ணபுத்தியுக்தர்களான ப்ரஹ்மா சிவன் முதலான தேவர்கள். ரக்ஷணத்தில் ஸமர்தனும் தோஷமற்றவனுமான நாராயணனை சரணமாகப் பற்றினார்கள். அப்போது ஆறு குணங்களையுடையவனும் மஹாயோகியுமான புருஷோத்தமன் ஸ்ரீபராசரனிடத்தினின்று ஸத்யவதியினிடத்தில் அவதரித்தான். பகவான் தானே வ்யாஸ ரூபியாய்த் தோன்றி சிதறிப்போன வேதங்களை உத்தாரணம் செய்தான். அவற்றை நான்காக வகுத்தான். அவற்றின் அர்த்தங்களை அறுதியிட ப்ரஹ்ம ஸூத்ரங்களை அருளிச்செய்தான்" என்ற ஸ்காந்தோக்தசரிதம் அநுஸந்தேயம். இவர் அருளிச்செய்த ப்ரஹ்மஸூத்ர ப்ரபந்தம் "ஸௌத்ரீ ஸங்க்யா சராபாஸீ: அதிக்ருதிகணனா சிந்மயீ ப்ரஹ்மகாண்டே" (அதிகரண ஸாராவளீ) என்கிறபடியே 545 ஸூத்ரங்களும் 156 அதிகரணங்களும் 16 பாதங்களும் 4 அத்யாயங்களும் கொண்டது என்று அறியலாம். இந்த ஸூத்ரத்துக்கு அநேகபாஷ்யங்கள் அமைந்திருந்தாலும், எம்பெருமானார் அருளிச்செய்த பாஷ்யமே "ஸ்ரீபாஷ்யம்" எனப் போற்றப்படுகிறது. இத்தகைய ஸ்ரீபாஷ்யத்தின் ஸாரத்தை அநுபவிப்போமாக.

ஸ்ரீ வேதவ்யாஸருடைய சிஷ்யரான ஜைமினி 16 அத்யாயங்கள் கொண்ட மீமாம்ஸா சாஸ்த்ரத்தை அருளிச்செய்தார். அது பூர்வமீமாம்ஸை—கர்மமீமாம்ஸை எனப்படுகிறது முதற்கண் 12 அத்யாயங்களில் ஜ்யோதிஷ்டோமாதி கர்மங்களை

விசாரித்து. மேலே 4 அத்யாயங்களில் கர்மாராத்4ய தேவதைகளை விசாரிக்கிறார் ஜைமினி. அவருடைய ஆசார்யரான ஸ்ரீவ்யாஸர் மேலே 4 அத்4யாயங்களால் ப்3ரஹ்மவிசாரம் செய்கிறார். இதுவே உத்தரமீமாம்ஸை—ப்3ரஹ்மமீமாம்ஸை எனப்படுகிறது. ஜைமினி 12 அத்4யாயங்களில் எந்தக்கர்மங்களை விசாரித்தாரோ அந்தக் கர்மங்களுக்கு ஆராத்4யமாயும். 4 அத்4யாயங்களில் எந்த தே3வதைகளை விசாரித்தாரோ அந்த தே3வதைகளுக்கு அந்தராத்மபூ4தமாயும் உள்ள ப்3ரஹ்மத்தை 4 அத்4யாயங்களால் ஸ்ரீவ்யாஸர் விசாரித்து நிஷ்கர்ஷித்தார். ஆக ஸர்வகர்மஸமாராத்4யம் ஸர்வ தே3வாந்தராத்மபூ4தம் பரம் ப்3ரஹ்ம வேதா3ந்தவேத்3யம் என்பதே ஸ்ரீவேத3வ்யாஸ ஸித்3தா3ந்தமாகிறது. ஆக மீமாம்ஸா ஶாஸ்த்ரம் 20 அத்4யாயங்கள் கொண்டது என்று தேறும். பூர்வோத்தரமீமாம்ஸைகள் இரண்டும் சேர்ந்து ஒரே ஶாஸ்த்ரம் என்பது நம் முன்னோர் கண்டமுறை. "அர்த்தை2கத்வாத் ஏகம் வாக்யம் ஸாகாங்க்ஷம் சேத்" என்கிற பூர்வமீமாம்ஸா ஸூத்ரத்தின்படி ஏகார்த்த2ப்ரதிபாத3கமாகையாலே ஒரே ஶாஸ்த்ரம் எனப்படுகிறது. பூர்வகாண்டோ3க்த கர்மங்கள் ஆராத4நரூபங்கள். அவற்றுக்கு ஆராத்4யவஸ்து எது என்கிற ஆகாங்க்ஷைக்கு ஶாந்தி உத்தரகாண்ட3மாகிற உபநிஷத்துக்களாலே விளையும். உபநிஷத் ப்ரதிபாத்3யமாகிற ப்3ரஹ்மம் ஆராத்4யம். இதற்கும் திருவாராத4நமாவது எது என்கிற ஆகாங்க்ஷையை ஶமனம் செய்வது பூர்வகாண்ட3மாகிற வேத3ம். ஆக ஆராத4ந விஶிஷ்ட ஆராத்4யன் பரப்3ரஹ்ம ஶப்3த3வாச்யனான நாராயணன் என்கிற ஒரே அர்த்த2ம் பூர்வோத்தரபே4த3பி4ந்நவேதா3ர்த்த2மாகிறது. இந்த வேத3வேதா3ந்தங்களாகிற வ்யாக்2யேயங்களுக்கு (மூலத்துக்கு) வ்யாக்2யாநரூபங்களே மீமாம்ஸைகள். வ்யாக்2யேயங்களுக்குண்டான பௌர்வாபர்யமும் ஐக்யமும் வ்யாக்2யானங்களுக்கும் அமையும் என்பதே ஸ்ரீபா4ஷ்யஸாரமாகும். அங்ஙனன்றிக்கே

பூர்வகாண்டோ3க்த கர்மங்களாகிற அங்க3ங்களுக்கு அங்கி3 எது என்கிற ஆகாங்க்ஷையை உத்தரகாண்ட3மும், உத்தர காண்டோ3க்தமான ஜ்ஞாநமாகிற அங்கி3க்கு அங்க3ம் எது என்கிற ஆகாங்க்ஷையைப் பூர்வகாண்ட3மும் ஶமநம் செய்வதால் "கர்மாங்க3கம் ஜ்ஞாநம் உபாயம்" என்கிற ஒரே அர்த்த2த்தைத் தெரிவிக்கிறபடியால் ஒரே ஶாஸ்த்ரம் என்னவுமாம். என்பர் ஐகஶாஸ்த்ர்ய வாதி3களான நம் பூர்வர்கள். கர்மஜ்ஞாநங்களுக்கு அங்கா3ங்கி3 பா4வத்தாலே ஸமுச்சயத்தை எம்பெருமானார் திருவுள்ளம் பற்றுகிறார். இதுவே * "வித்3யாம் ச அவித்3யாம் ச" என்கிற உபநிஷத்3 வாக்யார்த்த2ம் என்பது நம் ஸ்வாமி திருவுள்ளம. இவ்வாக்யத்துக்கு அத்3வைதிகள் செய்யும் வ்யாக்2யாநமிருக்கும்படி:—கர்மஜ்ஞாநங்கள் பரஸ்பர விருத்த3த4ங்களாகும். கர்மம் பே4தா3வலம்பி3. ஜ்ஞாநம் அபே4தா3வலம்பி. ஆகையால் இவற்றுக்கு அநுஷ்டா2நத்திலே ஸாஹித்யம் (ஒருசேர இருக்கை) பொருந்தாது. ஆயினும் ஜ்ஞாதவ்யத்வே ஸாஹித்யம் பொருந்தும். உபாதே3யத்வேந ஜ்ஞாதவ்யம் ஜ்ஞாநம். த்யாஜ்யத்வேந ஜ்ஞாதவ்யம் கர்மம் (ஜ்ஞாநம் கொள்ளத்தகுந்தது என்றும் கர்மம் தள்ளத்தகுந்தது என்றும் அறியப்பட வேண்டியது) என்றே மேற்கூறிய வாக்யத்தின் திரண்ட பொருள்—என்று. இந்த வ்யாக்2யாநம் அயுக்தம் என்பது ஸ்ரீ பா4ஷ்யகாரர் திருவுள்ளம். அதாவது—கர்மங்கள் கர்த்தவ்யங்களாக வேதா3ந்த விஹிதங்களாகையால் அவை த்யாஜ்யம் என்பது வேதா3ந்தவிருத்3த4ம். மேலும் இவ்வாக்யத்திலுள்ள "தீர்த்வா" என்ற பத3த்துக்கு "அடைந்து" என்று பொருள் கூறுவது அப்ரஸித்3தி4 தோ3ஷ பராஹதம். "ம்ருத்யும் தீர்த்வா" என்கிறவிடத்தில் "ஸ்த்தி2த: சேத்" என்கிற இரண்டு பத3ங்களைச்சேர்த்து வ்யாக்2யாநிக்கிறபடியால் அத்4யாஹார

* "வித்3யாம் ச அவித்3யாம் ச யஸ்தத்3வேத3 உப4யம் ஸஹ।
அவித்3யயா ம்ருத்யும் தீர்த்வா வித்3யயா அம்ருதம் அஶ்நுதே॥

தோ$_3$ஷ ப்ரஸங்க$_3$மும் ஏற்படும். ஆகையால் அத்$_4$வைதி வ்யாக்$_2$யாநம் அஸங்க$_3$தம் என்கை.

மேற்கூறிய வாக்யத்துக்கு யாத$_3$வப்ரகாஶன் செய்யும் வ்யாக்$_2$யாநமிருக்கும்படி:—ஜ்ஞாநகர்மங்கள் ஸமப்ரத$_4$ாநோபாயங்களாக ஜ்ஞாதவ்யங்கள். உபாயமும் இரண்டு—ஜ்ஞாநமும் கர்மமும். இது பூர்வவாக்யார்த்த$_2$ம். உபேயமும் இரண்டு—அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும். அநிஷ்ட நிவ்ருத்தி ரூபப$_2$லத்துககுக் கர்மம் உபாயம் என்றும். இஷ்டப்ராப்தி ரூபப$_2$லத்துக்கு ஜ்ஞாநம் உபாயம் என்றும்—இது உத்தரவாக்யார்த்த$_2$ம். ஸாத$_4$ந ஸாத்$_4$யத்$_3$வித்வாங்கீ$_3$காரேண பூர்வோத்தர வாக்யங்களுக்கு அர்த்த$_2$ம் கூறுவது யுக்தம் என்று. இந்த வ்யாக்$_2$யாநமும் அயுக்தம் என்று ஸ்ரீப$_4$ாஷ்யகாரர் திருவுள்ளம். அதாவது—உபாயம் ஜ்ஞாநமொன்றே. மற்றொரு உபாயம் கிடையாது என்று. உபநிஷத்தில் "தமேவம் வித்$_3$வாந் அம்ருத இஹ ப$_4$வதி நாந்ய: பந்த$_2$ா: அயநாய வித்$_3$யதே" என்கிற வாக்யத்தில் கூறப்பட்டுள்ளபடியால், உபாயம் இரண்டு என்ற கூற்று வேத$_3$ாந்த விபரீதம் "தமேவ விதி$_3$த்வா அதிம்ருத்யுமேதி" என்கிற வாக்யத்தில், அநிஷ்டநிவ்ருத்தி ப$_2$லம் என்றும். அது ஜ்ஞாந ஸாத்$_4$யம் என்றும் கூறப்பட்டுள்ளபடியால். அநிஷ்டநிவ்ருத்தி கர்மப$_2$லம் என்பதும் ஏலாது. அநிஷ்ட ரூபகர்மநிவ்ருத்தி ஏற்படுமானால் ஸேதுப$_4$ங்க$_3$ஸ்ரோத: ப்ரஸ்ருதி ந்யாயத்தாலே இஷ்டப்ராப்தி தன்னடையே ஏற்படும். ஆகையால் ஸாத்$_4$ய (ப$_2$ல) த்$_3$வித்வம் சொல்லுவதும் வேதாந்த விருத்$_3$த$_4$ம் என்று. ஆக, ஜ்ஞாந கர்மங்களுக்கு ஜ்ஞாதவ்யத்வ மாத்ரத்தாலே ஸாஹித்யம் என்கிற மாயாவாதி$_3$பக்ஷமும், ஜ்ஞாந கர்மங்களுக்கு ஸமப்ராத$_4$ாந்யம் என்கிற யாத$_3$வப்ரகாஶபக்ஷமும் அநாத$_3$ரணீயம். அங்க$_3$ாங்கி$_3$ப$_4$ாவேந ஸாஹித்யம் என்ற பக்ஷமே ஆத$_3$ரணீயம் என்றதாயிற்று. அங்க$_3$ாங்கி$_3$ப$_4$ாவத்தை

ஜ்ஞாநகர்மங்களுக்கு பா₄ஸ்கரனும் அங்கீ₃கரித்தானுயினும் அவன் கர்மத்தை ஜ்ஞாநோத்பாத₃கத்வேந அங்₃கம் என்று அங்கீ₃கரியாமல் உத்பந்ந ஜ்ஞாநத்துக்கு அநுக்₃ராஹகம் என்றான். கர்மம் ஜ்ஞாநோத்பாத₃கம் உத்பந்ந ஜ்ஞாந வர்த்த₄கம் என்பதே ஸ்ரீபா₄ஷ்யகாரர் திருவுள்ளமாகும். இப்படி அங்கா₃ங்கி₃களைப் பூர்வோத்தரகாண்ட₃ங்கள் ப்ரதிபாதி₃க்கின்றனவாகையால் ஏகம் ஶாஸ்த்ரம் என்பது நம்முன்னோர் கண்டமுறையாகும்.

ஶாரீரக மீமாம்ஸா ஶாஸ்த்ரத்தில் நான்கு அத்₄யாயங்கள் உள்ளன. இவற்றை விஷயத்₃விகம் அல்லது ஸித்₃த₄த்₃விகம் என்றும். விஷயித்₃விகம் அல்லது ஸாத்₄யத்₃விகம் என்றும் இருகூறாக நம் பெரியோர் பிரித்துள்ளார்கள். ப₄க₃வத்₃விஷயமான ஸித்₃த₄வஸ்துவைப்பற்றிய பூர்வத்₃விகமான முதல் இரண்டு அத்₄யாயங்களும் விஷயத்₃விகம் ஸித்₃த₄த்₃விகம் எனப்படும். மூன்றாவது அத்₃யாயத்தில் ப்ரதிபாதி₃தமான ப₄க்திரூபஜ்ஞாநமும். நான்காவது அத்₄யாயத்தில் ப்ரதிபாதி₃தமான ப்₃ரஹ்மாநுப₄வரூபஜ்ஞாநமும் விஷயியாயும் சேதந யத்ந ஸாத்₄யமாயுமுள்ளபடியால். உத்தரத்₃விகம் விஷயித்₃விகம் ஸாத்₄யத்₃விகம் எனப்படும். இந்த ஶாஸ்த்ரத்தில், ப்ரத்யத்₄யாயம் நான்கு பாத₃ங்கள் உள்ளனவாகையால் பதினாறு பாத₃ங்கள் உள்ளன. ஸ்ரீவேத₃வ்யாஸர் பதினாறு பாத₃ங்களில் பரமாத்மாவைப் பதினாறு கல்யாண குண₃ங்களோடு கூடியவனாக வர்ணிக்கிறார். அதாவது:—(1) ஸ்ரஷ்டா (2) தே₃ஹீ (3) ஸ்வங்ஷ்ட₂: (அஙங்யாத₄பாரை) (4) நிரவதி₄மஹிமா (5) அபாஸ்தபா₃த₄: (6) ஶரிதாப்த: (பஞ்சகாலபராயணர்க்கு ஆப்தன்) (7) க₂ாத்மாதே₃: உசித ஜநகக்ருத் (ஆகாஶ ஜீவர்களுக்கு ஸ்வரூபவிகார ஸ்வபா₄வவிகாரரூப ஜநகர்த்தா) (8) இந்த்₃ரியாதே₃: உசித ஜநகக்ருத் (இந்த்₃ரியங்களை உண்டாக்குமவன்) (9) ஸம்ஸ்ருதௌ தந்த்ரவாஹீ (ஜாக்₃ரதா₃த்₃யவஸ்தா₂நிர்வாஹகன்)

(10) நிர்தே₃ாஷ த்வாதி₃ரம்ய: (அகி₂லஹேயப்ரத்யநீககல்யாண கு₃ணைகதாநன்) (11) ப₃ஹு™ப₄ஜநபத₃ம் (நாநாவித₄வித்₃யோ பாஸ்யன்) (12) ஸ்வார்ஹகர்மப்ரஸாத்₃ய: (வர்ணாஶ்ரமா சாரவதா புருஷேண பர: புமாந்। விஷ்ணுராராத்₄யதே பந்த₂ா: நாந்ய: தத்தோஷ காரக:॥ என்கிற ஸ்ரீபராஶர வசநத்தின்படியே வர்ணாஶ்ரமாசாரத்தாலே திருவுள்ளம் உகக்குமவன்) (13) பாபச் சி₂த் (வித்₃யாநிஷ்ட₂ர்க்கு உத்தர பூர்வபாபங்களின் அஶ்லேஷ விஶ்லேஷகர்த்தா) (14) ப்₃ரஹ்மநாடீ₃க₃திக்ருத் (ஹார்த₃னுன ப₄க₃வானுடைய அருளாலே ப்₃ரஹ்மநாடீ₃ப்ரவேஶமென்றபடி) (ஆக, ஸ்தூ₂ல சே₃ஹ யுக்தனுக்கு ஏற்படும் ப₂லத்தைச சொன்னபடி) இனி ஸ்தூ₂ல தே₃ஹாத் உத்க்ராந்தனுக்கு ஏற்படும் ப₂லங்களாவன— (15) அதிவஹந் (அர்ச்சிஸ் முதலான ஆதி வாஹிகர் மூலமாக ஜீவனை உபசரிக்குமவன்) (16) ஸாம்யத₃ ("நிரஞ்ஜந: பரமம் ஸாம்யம் உபைதி" என்கிறபடி ஆநந்தத் திலே பரமஸாம்யாபத்தியாகிற மோக்ஷத்தைக் கொடுக்குமவன் என்றபடி). (இவ்விடத்தில் ஸாம்யாபத்தி மோக்ஷம் எனக் கூறப்பட்டிருந்தாலும். 'अखिलहेयप्रत्यनीकानन्तज्ञानानन्दैकस्वरूपस्य स्वाभाविकानवधिकातिशयासंख्येय कल्याणगुणाकरस्य सकलेतरविलक्षणस्य सर्वात्मनः परस्य ब्रह्मणः शरीरतया प्रकारभूतस्य अनुकूलापरिच्छिन्नज्ञानस्वरूपस्य परमात्मानुभवैकरसस्य जीवस्य अनादिकर्मरूपाविद्यातिरोहितस्वरूपस्य अविद्योच्छेदपूर्वकस्वाभाविकपरमात्मानुभवमेव मोक्षमाचक्षते' என்கிற அத்தப₄ிக்ஷண ஸ்ரீபாஷ்யஸூக்திப்படியும், 'मुक्तिं ततो हि परमं तव [illegible] निरुत्तरं परमं गतं तत्' என்கிற ஆழ்வான் ஸ்ரீஸூக்திப்படியும். பரிபூர்ண ப்₃ரஹ்மாநுப₄வமும் அநுப₄வஜநிதப்ரீதியும் ப்ரீதிகாரித ஸர்வதே₃ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தோ₂சித அஶேஷகைங்கர்யமும் மோக்ஷமாகக் கொள்ளத்தகும். இப்படி பதினாறு பாத₂ங்களின் அர்த்த₂ங் களைச் சுருக்கமாக அநுப₄வித்தோம். இங்கே 'ஸ்ரஷ்டா தே₃ஹீ' என்கிற அதிக₄ரணஸாராவளீ ஶ்லோகம் அநுஸந்தே₄யம். பதி

ஞறு பாத₂ங்களில் முறையே, 11, 6, 10, 8, 10, 8, 7, 8, 6, 8, 26, 15, 11, 11, 5, 6 அதி₄கரணங்களாக 156 அதி₄கரணங் களுள்ளன. இங்கே 'அக்ஷோர்மி' என்கிற அதி₄கரணஸாராவளீ ஶ்லோகம் அநுஸந்தே₄யம். முதல் பாத₃த்தில் 11 அதி₄கரணங் களில் முதல் நான்கு அதிகரணங்கள் ஶாஸ்த்ர உபோத்₃க₄ாதே மென்றும், 'ईक्षतेर्नाशब्दं' தொடக்கமாக 'अनावृत्तिः शब्दात्' ஈருக உள்ள ப₄ாக₃ம் ஶாஸ்த்ரம் என்றும் பல மஹாசார்யர்கள் திரு வுள்ளம் பற்றுகிறுர்கள். இயம் வர்த்தநீ ப்ராக்தநீ. (இந்த நிர்வாஹம் ப்ராசீநமானது என்றபடி). शास्त्रारम्भार्थिकं त्रितयमिह पूर्वं शास्त्रं पूर्वसूत्रे' என்கிறபடியே. ஸ்ரீமேக₄நாத₃ாரிஸூரி என்ற பெரியார், நயப்ரகாஶிகா என்கிற ஸ்ரீப₄ாஷ்ய வ்யாக்₂யாநத்திலே 'பூர்வகாண்ட₃த்திலே அத₂ாதோ த₄ர்மஜிஜ்ஞாஸா' என்ற முதல் ஸூத்ரம் மட்டுமே உபோத்₃க₄ாதமாளுப் போலே ப்₃ரஹ்மகாண்ட₃த்திலும 'அத₂ாதோ ப்₃ரஹ்மஜிஜ்ஞாஸா' என்ற முதல் ஸூத்ரம் கொண்ட முதலதி கரணமாத்ரம் உபோத்₃ க₄ாதம். 'ஜந்மாத்₃யஸ்ய யத: என்ற ஸூத்ரம் தொடக்கமாக ஶாஸ்த்ரம்' என்று திருவுள்ளம்பற்றுகிறுர். ஸர்வத்ரப்ரஸித்₃க₄ யதி₄கரணுவதாரிகா ப₄ாஷ்யத்தில் உள்ள 'शारीरकमीमांसाश्रवणं आरभेत शास्त्रारम्भसिद्धये' என்ற ஸ்ரீஸூக்தியை உற்றுநோக்குங்கால் நயப்ரகாஶிகாநிர்வாஹத்துக்கு அநுகூலம்போலே தோன்றும். ஆயினும் அவ்விடத்தில் ஶ்ருதப்ரகாஶிகாப₄ட்டர் மூன்று நிர் வாஹங்களைக் காட்டி ஸூத்ரசதுஷ்டயமும் ஶாஸ்த்ரோ போத்₃ க₄ாதம் என்ற பக்ஷத்தை ஸ்த₂ாபித்துள்ளார்.

முதல் அத்₄யாயத்தில் 35 அதிகரணங்கள் உள்ளன. முதலதி₄கரணமான ஜிஜ்ஞாஸாதி₄கரணம் ப்₃ரஹ்மவிசார கர்த்தவ்யதாஸ்த₂ாபநமாத்ரபரம். 35வது அதி₄கரணமான ஸர்வவ்யாக்₂யாநாதி₄கரணம் பூர்வோக்தந்யாயாதிதே₃ஶபரம். இடையே 26-ம் அதி₄கரணமான அபஶூத்₃ராதி₄ கரணம்

ப்$_3$ரஹ்ம வித்$_3$யாதி$_4$காரவிசாரபரம் ஆக இம்மூன்று அதி$_2$கரணங்களையொழிந்த 32 அதிகரணங்களில் ஸ்ரீவேத$_3$வ்யாஸர் பரமாத்மாவைச் சேதநாசேதநவிலக்ஷணனுயும். ஸர்வஜ்ஞனுயும். ஸர்வஶக்தனுயும். ஜக$_3$த்தான கார்யத்துக்கு அபி$_4$ந்நநிமித்தோபாத$_3$ாநகாரணபூ$_4$தனுயும் அறுதியிட்டுள்ளார்.

ஸர்வவ்யாக்$_2$யா நாதி$_4$கரணப$_4$ாஷ்யவ்யாக்$_2$யாநாவஸரத்தில் ஶ்ருதப்ரகாஶிகா ப$_4$ட்டர். முதல் அத்$_4$யாயத்தின் நான்கு பாத$_3$ங்களின் அர்த்த$_2$ங்களையும் ஸங்க்$_3$ரஹித்தருளுகிருர். அதாவது—வ்யாஸ்ர் முதல் பாத$_3$த்தில். ப்$_3$ரஹமம் சேதநாசேதநவிலக்ஷணம் ஜக$_3$தே$_3$ககாரணம் விலக்ஷண புருஷவிஶேஷம் என்று அறுதியிட்டுள்ளார். ஈக்ஷத்யதி$_4$கரணத்தில் அசேதநவைலக்ஷண்யமும் ஆநந்த$_3$மயாதி$_4$ கரணத்தில் சேதநவைலக்ஷண்யமும் ஸ்பஷ்டம்

இரண்டாம் பாத$_3$த்தில் பரமாத்மா ஜகச்ச$_2$ரீரன் என அறுதியிட்டார். இதினுடைய விவரணத்தை 6 அதி$_4$கரணங்களில் காணலாம். மூன்ரும் பாத$_3$த்தில் ப$_4$க$_3$வான் ஸர்வாத்மா என அறுதியிட்டார். இப்பாத$_3$த்தில் அவனுடைய ஸர்வாத்மத்வம் ஶங்கிததோ$_3$ஷ நிராஸமுகே$_2$ந ஸம்யக் ஸ்த$_2$ாபிதம்: ஸர்வம் ப்$_3$ரஹ்மகார்யம் ப்$_3$ரஹ்மஶரீரம் ப்$_3$ரஹ்மாத்மகம் என்று 3 பாத$_3$ங்களால் தேறிய பொருள். இப்படி அந்வயமுகே$_2$ந அறிவித்த அர்த்த$_2$த்தை வ்யதிரேகமுகே$_2$ந அறுதியிடுகிருர் நான்காம் பாத$_3$க்தில் ஸ்ரீவேத$_3$வ்யாஸர். அதாவது—அதத்கார்யமாய் அதச்ச$_2$ரீரமாய் அதத$_3$ாத்மகமாய் ஓர் வஸ்துவும் கிடையாது என்ற பொருளே நான்காவது பாத$_3$த்தின் அர்த்த$_2$ம். மூன்று பாத$_3$ங்களில ஜ்ஞாநாநுகு$_3$ணமாக அறுதியிட்ட அர்த்த$_2$த்தை நான்காம் பாத$_3$த்தில் வைராக்$_3$யாநுகு$_3$ணமாக ஸ்த$_3$ாபிக்கிருர் என்றபடி. நம்மாழ்வாரும் "நங்கணணன் கண்' என்றும் "அல்லது இலலை ஓா கண்ணே" என்றும் அருளிச்செய்தாரிறே

"நங்கண்ணன் கண் என்று அந்வயத்தாலே பரத்வம் சொன்னர். 'அல்லதில்லை' என்று வ்யதிரேகத்தாலே பரத்வம் சொன்னர், இத்தால் ஜ்ஞாநத்திற்காட்டில் வைராக்3யத்துக்குண்டான ப்ராத4ாந்யம் சொல்லுகிறது. என்ற ஈட்டு தி3வ்ய ஶ்ரீஸூக்திகள் இங்கே அநுஸந்தே4யங்கள்

முதலத்4யாயத்தல் நான்கு பாத3ங்களின் பேடிகாவிப4ாக3மிருக்கும்படியாவது:— முதல் பாத3ம் அயோக3 வ்யவச்சே2த3பரம்: மேலே த்ரிபாதீ3 (பாத3த்ரயம்) அந்யயோக3வ்யவச்சே2த3பரை என்று. அயோக3வ்யவச்சே2த3மாவது—"ஶங்க2: பாண்டு3ர ஏவ" (சங்கம் வெண்மைநிறம் உடையதே) என்றுப்போலே "ப்3ரஹ்மம் ஜக3த்காரணமே" என்று நிரூபிப்பது: இதுமுதல் பாத3த்திலேயேயாகும். அயோக3ம் —அஸம்ப3ந்த4ம் ஜக3த்காரணத்வாஸம்ப3ந்த4ம்: அதனைத் தவிர்த்தல்—வ்யவச்சே2த3ம்: ப்3ரஹ்மத்துக்கு காரணத்வாஸம்ப3ந்த4ம் இல்லை. காரணத்வஸம்ப3ந்த4மே உள்ளது என்று நிருபித்தல் முதல் பாத3த்திலேயாகும். ஆகையால் இந்த முதற்பாத3ம் அயோக3வ்யவச்சே2த3பரம். அந்யயோக3வ்யவச்சே2த3மாவது-பார்த்த2 ஏவ த4நுர்த4ர: (அர்ஜுநனே வில்லாளி) என்றுப்போலே. 'ப்3ரஹ்மமே ஜக3த்காரணம்' என்று நிருபிப்பது. இது பாத3த்ரயத்திலேயாகும். காரணத்வத்துக்கு மற்றோரிடத்தில் ஸம்ப3ந்த4த்தைபறுத்தல்—அந்யயோக3 வ்யவச்சே3த3மாகும். ப்3ரஹ்மபி4ந்நம் ஜக3த் காரணம் அல்ல என்று நிருபணம் என்றபடி. ப்ரஹ்மலக்ஷணமான ஜக3த்காரணத்வத்துக்கு அஸம்ப4வ ஶங்காபரிஹாரபரம் முதற்பாத3ம். அதிவ்யாப்திஶங்கா பரிஹாரபரம் பாத3த்ரயம் என்றபடி. 'ப்ரஹ்மமாகிறலக்ஷ்யமே இல்லை. ஆகையால் லக்ஷணம் எப்படிப் பொருந்தும்' எனறு லக்ஷ்யாஸம்ப4வப்ரயுக்த லக்ஷணாஸம்ப4வ ஶங்கை ஏற்பட, அதற்குப் பரிஹாரமாக—சேதநாசேதநவிலக்ஷணமாக ப்3ரஹ்மமாகிற லக்ஷ்பத்தை முதல்பாத3த்திலே

ஸ்தா2பித்து, காரணத்வமாகிற லக்ஷணத்துக்கு ப்3ராஹ்மத்திலே ஸத்3பா4வத்தை ஸ்தா2பிக்கிறார் ஸ்ரீவேத3வ்யாஸர். 'ப்ரஹ்மமும் காரணமாகட்டும்—மற்றொன்றும் காரணமாக அமையட்டும்' என்று காரணத்வரூப லக்ஷணத்துக்கு அந்யத்ர—லக்ஷ்யமான ப்3ரஹமத்திற்காட்டில் மற்றொன்றிலே—வ்யாப்தி என்று அதி வ்யாப்தி ஶங்கை ஏற்பட, ஸ்ரீவேத3வ்யாஸர்—மேலே பாத3த்ர யத்தில் 'ப்3ராஹ்மபி4ந்நம் காரணம் அல்ல' என்று ஶங்காபரி ஹாரம் செய்கிறார். ஆகையால் முதற்பாத3ம் அஸம்ப4வ ஶங்காபரிஹாரபரம் அயோக3வ்யவச்சே2த3பரம் என்றும். மேல் பாத3த்ரயம் அதிவ்யாப்தி ஶங்காபரிஹாரபரம் அந்யயோக3 வ்யவச்சே2த3பரம் என்றும் பேடிகாவிபா4க3ம் செய்கிறார்கள் பெரியோர்கள். முதற் பாத3த்தில் உள்ள ஸூத்ரங்களில் 'நாஶப்3த3ம்' 'அந்ய.' இத்யாதி3 ஶப்3த3ங்களும். மேலே பாத3த்ர யத்திலும் உள்ள ஸூத்ரங்களில் 'ஸ:' 'ஸ:' 'ஆநுமாநிகமபி' 'ப்ராஜ்ஞ:' இத்யாதி3 ஶப்3த3ங்களும் இந்த நிர்வாஹத்துக்கு அநுகூலங்களாகும். ஆயினும் இந்த விபா4க3ம் ப்ராயிகம். நான்காவது பாத3த்தின் ஆரம்ப4த்தில் 'அபி' ஶப்3த3ப்ர யோக3த் தாலே பாத3ாரம்ப4ம் அந்யயோக3வ்யவச்சே2த3பரம். மேலே அயோக3வ்யவச்சே2த3பரம் என்று அறியலாகிறது. அதாவது. காரணத்வாதி4கரணம் தொடக்கமாக மறுபடியும். ஈக்ஷத்யதி4 கரண ஆநந்த3மயாதி4கரணங்களிற் போலே பூர்வபக்ஷ ஸித்3 தா4ந்தங்களாகிறபடியால், மேலே அயோக3வ்யவச்சே2த3பரம் என்று தெரிகிறது. ஆகையால் அயோக3வ்வயச்சே2த3பரம் முதற்பாத3ம். மேலே பாத3த்ரயம் அந்யயோக3வ்யவச்சே2த3பரம் என்ற விபா4க3ம் ப்ராயிகம் (பெரும்பான்மையையிட்டுச் சொல்லப்படுவது).

'अस्पष्टतरं अस्पष्टं स्पष्टं छायानुसारि च ।
जीवप्रधानयोः आदौ वाक्यजातं विचारितम् ॥

(ந்யாயகலாப ஸங்க்ரஹம்) என்கிறபடியே அஸ்பஷ்டதர ஜீவாதிலிங்கக வாக்யவிசாரம் முதற்பாதத்திலும், அஸ்பஷ்ட ஜீவாதிலிங்கக வாக்யவிசாரம் இரண்டாம் பாதத்திலும். ஸ்பஷ்டஜீவாதிலிங்ககவாக்யவிசாரம் மூன்றும் பாதத்திலும். ஸ்பஷ்டதர (சாயாநுஸாரி—பரமதச்சாயாநுஸாரி என்றபடி) ஜீவாதிலிங்ககவாக்யவிசாரம் நான்காம் பாதத்திலும் செய்கிறுர் வ்யாஸர் என்கை ஸ்வரஸம் என்றபடி. ஜீவாதிகளை ஜகத்காரணமாகச் சொல்லலாம்படியான லிங்கம் (அடையாளம்) உள்ள உபநிஷத் வாக்யங்களாகிற காரணவாக்யங்களை முதலத்யாயத்தில் வ்யாஸர் விசாரிக்கிறுர்: சில வாக்யங்களில் அந்த லிங்கம் அஸ்பஷ்டதரம். சில வாக்யங்களில் அஸ்பஷ்டம். சிலவற்றில் ஸ்பஷ்டம். மற்றும் சில வாக்யங்களில் ஸ்பஷ்டதரம் என்றபடி. இப்படிப்பட்ட காரணவாக்யங்களை ந்யாயமார்க்கத்தாலே விசாரித்து. 'சேதநாசேதநவிலக்ஷணம் ஜகத்தேககாரணம் பரம் ப்ரஹ்ம' என்று அறுதியிடுகிறுர் ஸ்ரீவேதவ்யாஸர். காரணவஸ்துவைத் தெரிவிக்கும் வாக்யங்களாகிற காரணவாக்யங்களுக்கு சேதநாசேதநவிலக்ஷண ப்ரஹ்மத்தினிடத்தில் ஸம்யக் அந்வயத்தை (ப்ரதிபாதகத்வேந ஸம்பந்தத்தை) நிரூபிக்கிறபடியால் முதலத்யாயம் ஸமந்வயாத்யாயம் எனப்படுகிறது. இப்படி முதலத்யாயத்தின் பொருளைச் சுருக்கமாக அநுபவித்தோம்—இனி இரண்டாம் அத்யாயத்தை அநுபவிப்போம்,

இரண்டாமத்யாயம் அவிரோதாத்யாயமெனப்படுகிறது. ப்ரஹ்மத்துக்குண்டான காரணத்வத்திலும் ஜகத்தினுடைய கார்யத்வத்திலும் ஶங்கிதமான விரோதங்களைப்பரிஹரித்து ஜகத்ப்ரஹ்மங்களுக்கு உள்ள கார்யகாரண பாவத்தை ஸ்திரமாக்குவது என்றபடி.

இரண்டாமத்$_4$யாயத்தில் முதல்பாத$_3$ம் ஸ்ம்ருதிபாத$_3$ம் எனப்படும். இப்பாத$_3$த்தில் வேத$_3$வ்யாஸர். முதலிரண்டு அதி$_4$கரணங்களால் ஸாங்க்$_2$ய யோக$_3$ஸ்ம்ருதிவிசாரம் பண்ணுகிறார். மற்ற அதி$_4$கரணங்களில் யுக்திவிசாரம் செய்கிறார். ஆயினும் ஸ்ம்ருதிவிசார ப்ரத$_4$ாநமான • இப்பாத$_3$ம் ஸ்ம்ருதி பாத$_3$மெனவும். யுக்திவிசார ப்ரத$_4$ாநமான இரண்டாம் பாத$_3$ம் தர்க்கபாத$_7$மெனவும் வ்யவஹரிக்கப்படுகிறது. ஸ்ம்ருதி பாத$_3$த்தில், ப$_4$க$_3$வத$_3$வதாரமான ஸ்ரீகபிலமஹர்ஷியே ஸாங்க்$_2$யதந்த்ர ப்ரவர்த்தகர் ஆயினும் மந்வாதி$_3$ ஸ்ம்ருதிவிருத்$_3$த$_4$ கபிலஸ்ம்ருதி அநாத$_3$ரணீயை என்கிறார். ந்யாயவிருத்$_3$த$_4$ ஸ்ம்ருத்யநுக்$_3$ருஹீத ஶ்ருதியிற்காட்டிலும் ந்யாயாவிருத்$_5$த$_4$ஸ்ம்ருத்யநுக்$_3$ருஹீத ஶ்ருதி ப்ரப$_4$லை என்றும். ருஷிமாத்ர (கபில) ப்ரணீத ஸ்ம்ருத்யநுக்$_3$ருஹீத ஶ்ருதியிற்காட்டிலும் ஆப்ததம (மநு) ப்ரணீத ஸ்ம்ருத்யநு க்$_3$ருஹீத ஶ்ருதி ப்ரப$_4$லை என்றும். ஏகஸ்ம்ருத்யநுக்$_3$ருஹீத ஶ்ருதியிற்காட்டிலும் அநேக ஸ்ம்ருத்யநுக்$_3$ருஹீத ஶ்ருதி ப்ரப$_3$லை என்றும் கருத்து. ஆக காபிலதந்த்ர ஸித்$_3$த$_4$மான ப்ரக்ருதிதத்வம் ஜக$_3$த்காரணமல்ல—மந்வாதி$_3$ஸ்ம்ருதிகளில் சொல்லுகிறபடியே சேதநாசேதநவிலக்ஷண ப்$_3$ரஹ்மமே ஜக$_3$த்காரணம் என்பது வேத$_3$ாந்த விழுப்பொருள் என்கிறார் இரண்டாமத்$_4$யாயத்தில் முதல் பாத$_3$மான ஸ்ம்ருதி பாத$_4$த்தில் ஸ்ரீவேத$_3$வ்யாஸர்.

இரண்டாமத்$_4$யாயத்தில் இரண்டாவது பாத$_3$ம் தர்க்கபாத$_3$மாகும். இப்பாத$_3$த்தில் முதலதி$_4$கரணத்தில் ப்ரத$_4$ாநகாரணவாத$_3$த்தையும் மேல் அதி$_4$கரணங்களில் பரமாணுகாரணவாத$_3$த்தையும் நிரஸித்து ப்$_3$ரஹ்ம காரணவாத$_3$த்தை ஸ்த$_2$ாபிக்கிறார்.

இரண்டாமத்$_4$யாயத்தில் முதல்பாத$_3$ம் ஸ்வபக்ஷ ஸ்த$_2$ாபநபரம். இரண்டாம்பாத$_3$ம் பரபக்ஷப்ரதிக்ஷேபபரம். ஸ்வபக்ஷத்தில் பிறர் கூறிடும் தோ$_3$ஷங்களைப் பரிஹரித்து. ஸ்வபக்ஷ ஸ்த$_2$ாபநம்

செய்தார் ஸ்ம்ருதி பாதத்தில்: பிற மதங்களுக்கு தோஷங்களைக் காட்டி அவற்றைக் கண்டிக்கிறார் தர்க்க பாதத்தில் வ்யாஸர் என்றபடி.

ஸாங்க்யவைஶேஷிக பௌத்த ஜைந ஶைவ மதங்களை தூஷிக்கிறார் தர்க்கபாதத்தில் 7 அதிகரணங்களாலே வ்யாஸர். 8-ம் அதிகரணமான இறுதியான அதிகரணத்தில் பாஞ்சராத்ர ப்ராமாண்யஸ்தாபநம் செய்கிறார் ஸ்ரீமந் மஹா பாரத கர்த்தாவான வ்யாஸர். ஈக்ஷத்யதிகரணாதிகளில் ஸாங்க்ய மதப்ரஸ்தாவம் உள்ளதாயினும். ஸாக்ஷாத்தாக தந்மத கண்டநம் உள்ளது தர்க்கபாதத்திலேயே என்றருளிச் செய்கிறார் ஸ்ரீபாஷ்யகாரர். ப்ரதாநம் என்றும் மூலப்ரக்ருதி என்றும் அஶப்தம் என்றும் சொல்லப்படுகிற அசித்தத்வம் ஆநுமாநிகம், அப்ரஹ்மாத்மகம், குணத்ரயாத்மகம். ஜகத் காரணம் என்று ஸாங்க்யமதம்: ப்ரதாந காரணத்வ ஸாதக மாக அவன் கூறும் அநுமாநத்தை நிரஸித்து அதனடியாக ஸாங்க்யமத நிராஸம் செய்கிறார் ஸ்ரீவேதவ்யாஸர் முதலதி கரணத்தில். இங்கே ஸாங்க்யோக்தபக்ஷத்தை தூஷிக்கும் போது தது்க்தப்ரமாணத்ரய தூஷணமும் கர்த்தவ்யமாகிறது. ப்ரத்யக்ஷ ஸித்தபதார்த்தங்களில் ஸாங்க்யனோடு விவாதம் அதிகமாகக் கிடையாது. தர்மதர்மிகளுக்கு அபேதமே: கார்யங்களுக்கு அபிவ்யக்தி மாத்ரமே உள்ளது: அவஸ்தாந்த ராபத்தி இல்லை—இத்யாதிவிஷயங்களில் விவாதம் உண்டு. ஆயினும் ப்ரத்யக்ஷஸித்தபதார்த்தங்களில் நாதீவ விவாத:— என்பது ஸ்ரீபாஷ்யகாரர் திருவுள்ளம். ஆகையால் ப்ரத்யக்ஷ நிராஸத்தை உபேக்ஷித்தார் வ்யாஸர். ஸாங்க்யாகமம் பூர்வ காண்டத்தில் முதலத்யாயமான ப்ரமாணாத்யாயத்தில் பெரும் பாலும் நிரஸ்தம். ஆகையால் ஆகமநிராஸம் உபேக்ஷிதம். பரிஶேஷாத் ஸாங்க்யோக்தாநுமாநத்தை இங்கே தூஷிக்கிறார்,

அப்3ரஹ்மாத்மகம் ப்ரத4ாநம் ஜக3த்காரணம் எனும் தது3க்தாநுமாநத்தை தூ3ஷித்து ஸத3நுமாநத்தாலே ப்ராஜ்ஞாதி4ஷ்டி2தமே ப்ரத4ாநம் என்று ஸ்த2ாபிக்கிறார் வ்யாஸர். இவ்விடத்தில் ஓர் ஶங்கை எழக்கூடும். எங்ஙனேயென்னில், 'இவ்வதி4கரணத்தில் அநுமாநத்தாலே ஈஶ்வராதி4ஷ்ட2ாநத்தை ஸ்த3ாபிக்கிற வ்யாஸர் முதல் முன்னமே ஶாஸ்த்ரயோநித்வாதி4கரணத்தில் அநுமாநத்தாலே ஈஶ்வரனை ஸாதி4க்க இயலாது என்பானேன்' என்று. இந்த ஶங்கைக்கு பரிஹாரமாவது:—ஸர்வ ஸ்ரஷ்டாவான பரமாத்மாவை அநுமாநத்தாலே ஸாதி4க்க முடியாது என்பது ஶாஸ்த்ரயோநித்வாதி4 கரணத்தின் ஸித்தாந்தம். பரமாத்மாவை அநுமாநத்தாலே ப3ாதி4க்கவும் இயலாது என்பது இவ்வதி4கரணத்தின் ஸித்3த4ாந்தமாகும். எது எந்த ப்ரமாணத்தாலே ஸாதி4க்கப்படுமோ அது அந்த ப்ரமாணத்தாலேயே ப3ாதிக்கப்படும். அநுமாநாவிஷயமான பரப்3ரஹ்மத்தை அநுமாநத்தாலே ஸாதி4க்கவோ ப3ாதி4க்கவோ இயலாது என்று திரண்ட பொருள். தர்க்கபாத3த்தில் கபிலப்ரோக்தமான ஸாங்க்2யதந்த்ரத்தையும். ஹிரண்யக3ர்ப்ப4ப்ரணீதமான யோக3தந்த்ரத்தையும். சிவப்ரோக்தமான ஶைவ தந்த்ரத்தையும் வ்யாஸர் தூ3ஷிக்கிறபடியால் தேறிய பொருளாவது—மும்மூர்த்திகளானாலும் வேத3விருத்3த4மாக அவர்கள் பேசினால் அது த்யாஜ்யமே. வேத3ாநுகு3ணமே உத்3தே3ஶ்யம்' என்று. ஸாங்க்2யாதி3மத தூ3ஷண பரமான தர்க்கபாத3த்தின் இறுதியில் பாஞ்சராத்ரபூ4ஷணம் செய்வது பாத3ஸங்க3தமாகுமோ என்னில்—ஸங்க3தமே. ஸங்க3தியிருக்கும்படி:—தூ3ஷணமோ பூ4ஷணமோ பாத3ார்த்த2மல்ல. ஸாங்க்1யாதி3கள் வேத3த்துக்கு எதிரியாகமாட்டா என்ற நிரூபணமே பாத3ார்த்த2மாகும். ஸாங்க்2யாதி3 மதங்கள் குத்ஸிதயுக்திமூலகங்களாகையாலே து3ர்ப3லங்கள். ஆகையாலே வேத3ங்களுக்கு எதிராக நிற்க இயலாது; பாஞ்சராத்ரம் வேத3ாநு கு3ணமாகையால்

வேதவிருத்தமல்ல; ஸாங்க்யாதிகளுக்கு வேதப்ரத்யர்த்தித்வ நிராஸமே பாதார்த்தம் என்றபடி. ஆகையால் பாஞ்சராத்ர ப்ராமாண்யஸ்தாபநம் பாதஸங்கதமேயாகும் என்றபடி.

पञ्चेतराणि शास्त्राणि रात्रीयन्ते महान्त्यपि ।
तत्सन्निधौ समाख्याऽसौ तेन लोके प्रवर्तते ॥

என்ற பாத்மதந்த்ர வசநமும் இதனை வலியுறுத்தும். பாஞ்சராத்ர ஸந்நிதியில் ஸாங்க்யாதிகளான பஞ்சமதங்களும் ராத்ரியாகின்றன—ஒளியற்றுவிடுகின்றன என்கிற வ்யுத்பத்தியையும் தர்க்கபாதத்தில் வ்யாஸர் செய்திருக்கும் ஸாங்க்ய வைசேஷிக பௌத்த ஜைந சைவ தூஷணத்தையும் பாஞ்சராத்ரபூஷணத்தையும் சேர்த்துக்கண்டவர்களுக்கு இது விளங்கும்.

மஹாபாரதத்தில் மோக்ஷதர்மத்தில்

एवमेकं सांख्ययोगं वेदारण्यकमेव च ।
परस्पराङ्गान्येतानि पञ्चरात्रं तु कथ्यते ॥

என்று ஸ்ரீவேதவ்யாஸர் அருளிச்செய்கிறார். ஸாங்க்யோக்தமான இருபத்தைந்து தத்வங்களையும், யோகோக்தமான யோகத்தையும், வேதோக்தமான கர்மங்களையும் அங்கீகரித்து தத்வங்கள் ப்ரஹ்மாத்மகங்கள் என்றும், யோகம் ப்ரஹ்மோபாஸநம் என்றும், கர்மங்கள் ப்ரஹ்மாராதநங்கள் என்றும் கூறுகிறது ஆரண்யகம். இவ்விஷயத்தையே "பாஞ்சராத்ரஸ்ய க்ருத்ஸ்நஸ்ய வக்தா நாராயண: ஸ்வயம்" என்று நாராயணன் பஞ்சராத்ரதந்த்ரத்தில் விசதீகரித்தான் என்ற-டி—என்பது ஸ்ரீபாஷ்யஸாரம். மஹாபாரதகர்த்தாவான வ்யாஸர் பாரதத்தில் பாஞ்சராத்ர ப்ராமாண்யத்தை பஹுமுகமாக ஸாதித்தவர் ப்ரஹ்மஸூத்திரத்திலும் ஸ்தாபிக்கிறார் என்பது சாலப் பொருந்தும்,

न बाधः प्रतिरोधो वा वेदसात्त्वतयोर्मिथः ।
कुदृष्टि तद्भ्रमो वार्यः श्रुत्यादिभि परीक्षकैः ॥

என்றுநின்றதிறே. வேத₃வாக்யங்களில் பரஸ்பர விரோத₄ஶங்கா பரிஹாரம் செய்யப்போகிறவராய். முதல் முன்னமே வேத₃ஸாத் வதங்களுக்கு விரோத₄ஶங்காபரிஹாரம் செய்கிறார் என்றபடி. ஆகாஶாத்₃யுத்பத்திவிஷயத்திலும் ஜீவானுத்பத்தி விஷயத்திலும் ஶ்ருதிவாக்யங்களில் காணப்படும் பரஸ்பர விரோத₄ஶங் கைக்குப் பரிஹாரம் வியத₃தி₄கரணம் தொடக்கமாகச் செய்யப் போகிறார் வ்யாஸர். அதற்கு முன்னமே ஜீவானுத்பத்திவிஷயத் தில் பாஞ்சராத்ர விரோத₄ஶங்கை ஏற்பட, அதற்குப் பரிஹாரம் உரைத்து "பாஞ்சராத்ரம் பரமதம்" என்ற ப்₄ரமத்தை நிரஸிக்கிறார் இங்கு. ஆகையாலிறே இந்த அதி₄கரணம் பாத₃த்தின் முடிவில் அமைக்கப்பட்டுள்ளது. இந்தப் பாத₃த்தில் ரசனானுபபத்த்யதி₄கரணம் தொடக்கமாக ஸாங்க்₂யாத்₃யாகம விசாரம் செய்யப்படுகிறது. ஆக₃மஸாம்யத்தைப்பற்ற பாஞ்ச ராத்ராக₃மமும் அப்ரமாணம என்று ஶங்கை உதிக்க, அதனை நிரஸித்து பாஞ்சராத்ர ப்ராமாண்யத்தை ஸ்த₂ாபிக்கிறார் ஸ்ரீவேத₃வ்யாஸர்.

இவ்வதி₄கரணம் ஶாக்தமதநிராஸபரம் என்றது மத்₄வ பா₄ஷ்யம். அது பி₄ந்நவிஷயம். பாஞ்சராத்ரோக்த நாராயண பரத்வமும் நாராயணராத₄நவைப₄வமும் ஶங்கர பா₄ஷ்ய ஸம் மதமே. தது₃க்த ஜீவோத்பத்திவிஷயம் ஒன்றிலே மட்டும விஸம் வாத₃ம் காட்டினார்கள் பா₄ஷ்யபா₄மதீகாரர்களான ஶங்கரவாசஸ் பதிமிஶ்ரர்கள். பாஞ்சராத்ரத்துக்கு ஜீவோத்பத்திவிஷயத்தில் தாத்பர்யமில்லை என்று அந்த விஸம்வாத₃த்தையும் களைந் தெரிந்தார் கல்பதருகாரரான அமலாநந்த₃ர். பாஞ்சராத்ரக் த ஜீவோத்பத்தி வசநத்துக்கு கௌ₃ணார்த்த₂த்வம் கொண்டு

பாஞ்சராத்ர ப்ராமாண்யத்தை கல்பதருகாரரே ஸ்தா2பிக்கிறார். ராமாநுஜ ஸம்மதமான பாஞ்சராத்ர ப்ராமாண்யம் மதாந்தர நிஷ்டா2கரும் ஸம்மதமேயென்றதாயிற்று. இப்படி ஆறு பாத3ங்களால் ப்3ரஹ்மநிஷ்ட2மான காரணத்வத்தை ஶோதி4த்தார்.

இனி இரண்டு பாத3ங்களால் ஜக3ந்நிஷ்ட2மான கார்யத்வத்தை ஶோதி4க்கிறார் வ்யாஸர்.

இரண்டாம் அத்4யாயத்தில் மூன்றாவது (வியத்) பாத3த்திலும் நான்காவது (ப்ராண) பாத3த்திலும் ஆகாஶ ஆத்ம இந்த்3ரியாதி3களுக்கு தத்தத்3வஸ்து ஸ்வரூபாநுகு3ணமாய் ஸ்வரூபவிகார ஸ்வபா4வ விகாரங்களை நிரூபித்து அவற்றுக்கும் ப்3ரஹ்மகார்யத்வமே உள்ளது என்று ஸ்தாபிக்கிறார்.

வியத3தி4கரணத்தில் ஆகாஶ நித்யத்வத்தை ஶங்கித்து ஆகாஶகார்யத்வம் ஸித்3தா4ந்திதம். ஆத்மாதி4கரணத்தில் ஆத்மகார்யத்வத்தை ஶங்கித்து ஆத்மஸ்வரூபநித்யத்வம் ஸித்3தா4ந்திதம். ஆகையால சேதநாசேதநங்களில துல்யகார்ய தாநிரூபணம் இப்பாத3த்திற்கு ப்ரமேயம் என்னவொண்ணாது. ஆகையாலிறே ஸ்ரீபா4ஷ்யகாரர் கார்யதா ப்ரகாரவிஶோத4நம் பாதா3ர்த்த2ம் என்றருளிச்செய்தார்.

இரண்டாம் அத்4யாயம் முதற் பாத3த்தில் "ப்3ரஹ்மம் ஜக3த் காரணம்" என்ற விஷயத்தில பரஸமயிகளால் உத்3பா4விதங்களான தோ3ஷங்களை பரிஹரித்து ப்3ரஹ்மகாரணத்வத்தை ஸ்தா2பித்தார். மூன்றாவது பாத3த்தில, "ஜக3த்து கார்யம்" என்ற விஷயத்தில பரோக்ததோ3ஷங்களை பரிஹரிக்கிறார் வ்யாஸர். ஆகையால் இவ்விரண்டும ஸ்வபக்ஷஸ்தா2பந பரமாகையால் முதற் பாத3மும் மூன்றாம் பாத3மும் ஸங்க3த மாகும். ஆனால் இரண்டாம பாத3த்தை வ்யாஸர் இடையிலே அமைக்கக்காரணம் என்னென்னில்:—காரண விஷயத்தில்

பரோக்த தோஷபரிஹாரபரமான முதற்பாதமும், காரண விஷயத்தில் பரபக்ஷப்ரதிக்ஷேபபரமான இரண்டாவது பாதமும் காரணவிசாரபரமாகையால் அவ்விரண்டையும் பூர்வாபரமாக நிர்தேசித்து, கார்யவிசாரபரமான வியத்பாத ப்ராண பாதங்களைப் பின்னே அமைத்தார் என்றபடி. •

ஆகாசாதிகளுக்கு ஸ்வரூபவிகாரரூப கார்யத்வம், ஜீவாத்மாக்களுக்கு ஸ்வபாவவிகாரரூப கார்யத்வமே என்று நியமிப்பார் ஆர் என்னில்:— உபநிஷத்தே நியாமகமாகிறது. எங்ஙனேயென்னில்:— ஜீவாத்மாக்களை போக்தாக்களாகவும், ப்ராக்ருதங்களை போக்யங்களாகவும், ஈஸ்வரனை நியந்தாவாகவும் "போக்தா போக்யம் ப்ரேரிதாரம் ச மத்வா" என்று உபநிஷத்து தத்வத்ரய ஸ்வரூபகதநம் செய்திருக்கிறது. போக்யபூதமான ப்ரக்ருதி தத்வம் மஹதஹங்கார பூதபஞ்சக இந்த்ரியாதிரூபேண ஸ்வரூப பரிணாமம் பெற்றாலொழிய ஜீவாத்மாக்களுக்கு போக்யமாகமாட்டாது. ஜீவாத்மா ஸ்வரூபத: விகாரமற்றவனாய் தன் ஸ்வபாவமான தர்மபூதஜ்ஞாநத்தினுடைய விகாஸத்தாலே ப்ராக்ருத பதார்த்தங்களை அநுபவிக்கும் போக்தாவாகையால், இவனுக்கு ஜ்ஞாநவிகாஸமே ஆவஸ்யகமாகிறது. ஆகையால் பகவான் ஆத்மாகளுக்கு ஸ்வபாவ விகாஸத்தைப் பிறப்பிக்க ப்ரக்ருதியை ப்ராக்ருதமாக ஸ்வரூபத்தாலே பரிணமிப்பிக்கிறான் என்றபடி.

ஆக ஸர்வம் ப்ரஹ்மகார்யம் என்றதாயிற்று.

வியததிகரணம் தொடக்கமாக அசிதுத்பத்தி ப்ரகாரம் சிந்திக்கப்பட்டது. ஆத்மாதிகரணம் தொடக்கமாக சிதுத்பத்திப்ரகாரம் சிந்திக்கப்படுகிறது என்று கண்டுகொள்வது.

பூர்வோக்த வியததிகரண ந்யாயத்தாலே ஜீவோத்பத்தியுங்கை ஸ்வத: ப்ராப்தையாகிறது. ஆகையால், ஜீவோத்பத்

வாதமாகிற பூர்வபக்ஷத்தை ஸூத்ரகாரர் ஸூத்ரத்தால் நிர்தேஶியாமல் ஜீவாநுத்பத்திபரமான ஸித்தாந்தஸூத்ரத்தை மட்டும் அருளிச்செய்தார். ப்ராணோத்பத்த்யதிகரணத்தில் வியததிகரண ந்யாயத்தால் ஸ்வத:ப்ராப்தமான ப்ராணோத்பத்தி விஷயமான ஸித்தாந்தத்தை ஸூத்ரகாரர் ஸூத்ரத்தால் நிர்தேஶியாமல் ப்ராணாநுத்பத்திஶங்காபரமான பூர்வபக்ஷ ஸூத்ரத்தை மட்டும் அருளிச்செய்தார். இவ்வதிகரணத்தில் ஸூத்ரகாரர் திருவுள்ளம் பற்றிய ஸித்தாந்தம் இன்னது என்பதனை ஸ்ரீபாஷ்யகாரர் நிர்தேஶித்தருளுகிறார் அபஶூத்ராதிகரணத்திற்போலே என்று கொள்வது.

ஆத்மாதிகரணத்தில் ஜீவாத்ம நித்யத்வத்தை வ்யாஸர் ஸ்தாபிப்பதைக் கண்ட நமக்கு ஓர் ஶங்கை எழக்கூடும். அதாவது:— ஶாஸ்த்ரயோநித்வாதி கரணத்தில் ப்ரஹ்மத்தினுடைய ஜகத் காரணத்வம் வேதாந்த ப்ரமாணகம் என்று கூறி. ஆத்மாதிகரணத்தில் அதே வேதாந்த வாக்யங்களால் ஆத்மா நித்யன் என்று அறுதியிட்டால் பரஸ்பர விரோதம் ஏற்படும்—என்று. இதற்குப் பரிஹாரமாவது—ப்ரஹ்மம் ஶாஸ்த்ர ப்ரமாணகம் என்ற விஷயமே ஶாஸ்த்ரயோநித்வாதிகரணவிஷயம், ஜகத் காரணத்வம் ஶாஸ்த்ர ப்ரமாணகம் என்ற விஷயம் அவ்வதிகரண விஷயமன்று. மேலும் ஆத்மாதிகரணத்தில் ஸ்ரீபாஷ்யகாரராலே ஜீவநித்யத்வபரமாக உதாஹரிக்கப்பட்ட ச்ருதிகளுக்கு "அசித்வஸ்துவிலே ப்ரஸித்தமான ஸ்வரூபாந்யதாபாவரூபமான விகாரம் இல்லை ஆத்மாவுக்கு" என்ற விஷயத்திலே நோக்காகவும், பரமாத்ம நித்யத்வ பரமாக உதாஹரிக்கப்பட்ட வசநங்களுக்கு "ஜீவாத்மாக்களிடத்தில் ப்ரஸித்தமான ஸ்வபாவாந்யதாபாவ (ஜ்ஞாந ஸங்கோச விகாஸ) ரூப விகாரம் பரமாத்மாவுக்கு இல்லை" என்ற விஷயத்திலே நோக்காகவும் கொள்ளவேணும். அசித்தென்ன சித்தென்ன

இவையிரண்டிலும் உள்ள ஸ்வரூபஸ்வபாவ விகாரங்களே அநிஷ்டங்கள். இவை பரமாத்மாவுக்கு இல்லையாயினும் பரப்ரஹ்மத்துக்குண்டான காரணத்வத்தை நிர்வஹிக்க மூன்றாவது விகாரம் ஒன்று அந்தப் பரனுக்கே கூடும். உபய விகார விசிஷ்டசேதநாசேதந விசிஷ்டத்வமேயிறே அவ்வி காரம் என்றபடி. ஆகையால் பரப்3ரஹ்மம் ஜக3த்காரணம் என்பது அக்ஷதம்.

ஆக, இரண்டு அத்யாயங்களால் ப்ரமேயத்வ வ்யாபக கார்யதா நிரூபிதகாரணத்வம் ப்3ரஹ்மலக்ஷணம் என்றதாயிற்று.

பூர்வத்3விகத்தில் ஸூத்ரகாரர் ப்ரக்ருத்யாத்ம பே4த3த்தையும், ஆத்மபரமாத்ம பே4த3த்தையும், ப்3ரஹ்ம நிஷ்ட2ஜ்ஞா நாநந்தா3தி3 கல்யாணகு3ணங்களையும், த4ர்மி ஜ்ஞாந த4ர்மபூ4த ஜ்ஞாந பே4த3த்தையும் ஶாப்2த3மாக அருளிச்செய்துள்ளார், ஈக்ஷத்யதி4கரணத்தில் ப்ரக்ருதிரூப அசித்3 விலக்ஷணன் பர மாத்மா என்றும், ஆநந்த3மயாதி4கரணத்தில் ஜீவவிலக்ஷணன் பரமாத்மா என்றும் அந்தரதி4கரணத்தில் ஜீவவிசேஷ விலக்ஷ ணன் பரமாத்மா என்றும் வ்யாஸர் ஸ்த2ாபித்தார். ஈக்ஷத்யதி4 கரண பூர்வபக்ஷியினுடைய அநுயாயியை காரணத்வாதி4கரண த்திலும், ஆநந்த3மயாதி4கரண பூர்வபக்ஷியினுடைய அநுயா யியை ஜக3த்3வாசித்வாதி4கரணத்திலும் நிரஸித்து சேதநாசேத நவிலக்ஷணன் பரமாத்மா என அறுதியிட்டார். நேதர: அநுப பத்தே: (1-1-17) பே4த3வ்யபதே3ஶாச்ச (1-1-18) பே4த3வ்யபதே3 ஶாச்ச அந்ய: (1-1-22) கர்மகர்த்ருவ்யபதே3ஶாச்ச (1-2-4) உப4யேபி ஹி பே4தே3ந ஏநமதீ4யதே (1-2-21) பே4த3வ்யபதே3 ஶாத (1-3-4) ஸ்தி2த்யத3நாப்4யாஞ்ச (1-3-6) ஸுஷுப்த்யுத் க்ராந்த்யோர் பே4தே3ந (1-3-43) பத்யாதி3ஶப்3தே3ப்4ய: (1-3-44) அதி4கம் து பே4த3நிர்தே3ஶாத் (2-1-22) இத்யாதி3 ஸூத்ரங்களாலே ஜீவபரர்களுக்குண்டான பாரமார்த்தி2கஸ்வ

ரூபபேதத்தை வ்யாஸர் அருளிச்செய்கிறார். ஈக்ஷத்யதிகரணம் தொடக்கமாக ஜ்ஞாநாநந்தாதிகுணயோகத்தை ஹேதுவாகக்காட்டி சேதநாசேதந விலக்ஷணம் ப்ராஹ்மம் என்கிற வ்யாஸ ஸூத்ரங்கள் "ப்ராஹ்மம் ஸவிசேஷம்" என்ற பக்ஷத்துக்குப் பொருந்துமல்லது "ப்ராஹ்மம் நிர்விசேஷம் அத்விதீயம் குணதோऽபி ஸத்விதீயதாம் ந ஸஹதே" என்ற மாயாவாதிபக்ஷத்துக்குப் பொருந்தாது. "सूत्रैरेतैः स्फुटार्थैः सविषयवचनैः निर्विशेषव्यपोहो मुख्येशार्थैः स्वधर्मैः प्रकृतिपुरुषतः भेदवादः कथं स्यात्" என்று ஸ்ரீமந்நிகமாந்தமஹாதேசிகன் அருளிச்செய்தாரிறே. ஜீவபரபேதம் ஸித்தாந்தம் என்று கொண்ட ஸ்ரீவேதவ்யாஸர் ஜீவபர அபேதத்தை அப்ரஸித்தமும் விசாராநார்ஹமுமாகையால் விசாரவிஷயமாகக்கொள்ளாமல் உபநிஷத் வாக்யங்களில் எங்கேனும் ஜீவபர அபேதசங்கை அங்குரிக்குமேயானால் அவ்விடத்திலே மட்டும் ஜீவபரபேதத்தை குணஸூத்ரங்களாலே ஸ்தாபிக்கிறார் என்று கண்டு கொள்வது. தர்மியும் தர்மமும் ஜ்ஞாநம் என்பது ஜீவபர விஷயத்தில் அங்கீக்ருதம், அதாவது ஜீவனும் பரனும் இருவருமே ஜ்ஞாநஸ்வரூபர்கள் ஜ்ஞாநகுணகர்கள் என்றபடி. "ஜ்ஞாத்ருத்வம் ஜ்ஞாநதா ச ச்ருதிபிரபிதேதே நாத்ரபக்ஷேபதாம:" என்றருளிச்செய்தார் தேசிகன். "யாவதாத்மபாவித்வாச்ச ந தோஷ: தத்தர்சநாத்" (2-3-30) என்று நித்யனான ஆத்மா நித்யமான தர்மபூதஜ்ஞாந முடையவன் என்றருளிச்செய்கிறார் வியாஸர். தர்மபூத ஜ்ஞாநத்தையும் அதினுடைய நித்யத்வத்தையும் வ்யாஸர் ஸ்தாபிகும் ஸூத்ரம் இது, தர்மபூதஜ்ஞாநம் அத்ரவயம் அநித்யம் ஆகந்துகம் என்பர் நையாயிகர். அது த்ரவ்யம் நித்யம் என்பது ராமாநுஜமதம். ஜீவதர்மபூதஜ்ஞாநத்துக்கு ஸங்கோசவிகாஸங்கள் உள்ளன. ஆனாலும் நித்யனான ஜீவாத்மாவைப் பற்றிக்கிடக்கிற தர்மபூதஜ்ஞாநம் நித்யமே என்பர் நம் பெரியோர். ஆகையால்

ஸங்கோசவிகாஸ ப்ரயுக்த ஜ்ஞாநவிநாஶஶங்கைக்கு அவகாஶம் இல்லை என்றபடி. "ज्ञानं च अस्य नित्यस्य स्वाभाविकधर्मत्वेन नित्यं" என்ற ஜிஜ்ஞாஸாதிகரண ஸ்ரீபாஷ்யவாக்யம் அத்ராநுஸந்தேயம். தர்மம் ஸ்வாபாவிகமானாலும் தர்மி அநித்யமானால் தர்மமும் அநித்யமாகும். தர்மி நித்யமானாலும் தர்மம் ஸோபாதிகமானால் உபாதி நிவ்ருத்தமாகும்போது ஔபாதிகமும் நிவ்ருத்தமாகுமாகையால் தர்மம் அநித்யமாகும். இங்கு தர்மியான ஆத்மாவும் நித்யம்—தர்மமான ஜ்ஞாநமும் ஔபாதிகமல்ல—ஆகையால் தர்மபூதஜ்ஞாநம் நித்யமே—என்று திருவுள்ளம்பற்றி ஸ்ரீபாஷ்யகாரர் "நித்யஸ்ய ஸ்வாபாவிகதர்மத்வேந" என்றருளிச்செய்திருப்பது உற்று நோக்கத்தக்கது. ஆகையால் ஶாரீரகமீமாம்ஸை விஶிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தையே நிலைநாட்டுவது என்று ஸ்ரீபாஷ்யத்திலிருந்து நாம் அறியும் ஸாரமாகும்.

*ஆக இவ்வளவால் ப்ரணவார்த்தம் நிரூபிதமாயிற்று.*

கீழே, அஶேஷசிதசித்வஸ்து ஶேஷித்வமாகிற ப்ரணவார்த்தம் முதலிரண்டத்யாயங்களின் அர்த்தமென நிரூபிக்கப்பட்டது. ப்ரணவாகாரமிறே பாஷ்யம். ஸ்ரீபாஷ்யம் "அகில புவநஜந்ம" என்று அகாரத்தை உபக்ரமத்திலும், "உக்தம்" (ஆநுமாநிகாதிகரணாரம்பம்) என்று இடையிலே உகாரத்தையும், "ஸர்வம் ஸமஞ்ஜஸம்" என்று இறுதியில் மகாரத்தையும் கொண்டு, ப்ரணவாகாரமாகவே தோற்றுவது ப்ரஸித்தம்.

முதலிரண்டத்யாயங்களால் ப்ரணவார்த்த நிரூபணம் செய்த ஸ்ரீவேதவ்யாஸர், மேலிரண்டத்யாயங்களால் "நமோ நாராயணாய" என்ற மந்த்ரஶேஷத்தின் அர்த்தங்களை நிரூபிக்கிறார். மூன்றுமத்யாயம் நமஶ்ஶப்தார்த்த நிரூபணபரம் ஸாதநாத்யாயம் எனப்படும். நாலாமத்யாயம் த்ருதீய பதார்த்த நிரூபணபரம், பலாத்யாயமெனப்படும்.

நமஶ்ஶப்₃த₃ார்த்த₂ம் உபாயமிறே. "पन्था नकार उद्दिष्टः स: प्रधान उदीर्यते। विसर्गः परमेशस्तु तत्रार्थोऽयं निरूप्यते॥" என்கிற அஹிர் பு₃த்₄ந்ய ஸம்ஹிதாவசநமத்ராநுஸந்தே₄யம். ஸர்வஶேஷியான நாராயணனே பரமோபாயம் என்றிறே ஸம்ப்ரதா₃யநிஷ்கர்ஷ மிருக்கும்படி.

•

இனி உபாயபரமான மூன்ருமத்யாயத்தின் அர்த்த₂ங்களை ஸங்க₃ரஹமாகவநுப₄விப்போம்.

இவ்வத்யாயத்தின் நான்கு பாதங்களுக்கு முறையே வைராக்₃யபாத₃ம், உப₄யலிங்க₃பாத₃ம். கு₃ணோபஸம்ஹார பாத₃ம், அங்க₃பாத₃ம் என வ்யவஹாரம். ஸித்₃தோ₄பாயம் ப₄க₃வான் என்றும் ஸாத்₄யோபாயம் ப₄க்தி என்றும் பெரியோர் கூறுவர். ப₄க்திமுதலானவற்றை வ்யாஜம் என்றும் கூறுவர்.

பரமாத்மப₄க்தியை ஒருவன் அநுஷ்டி₂க்க இழியவேணு மேயானல் அவனுக்குப் பரமாவஶ்யகமாக ப்ராப்யாந்தர வைராக்₃யமும் ப்ராப்ய த்ருஷ்ணேயும் ஏற்படவேணும். அவ் விரண்டும் ஸித்₃தி₄க்க வ்யாஸர் இரண்டு பாத₃ங்களை அருளிச் செய்கிருர். மூன்ரும் அத்₄யாயம் முதல்பாத₄த்தையநுப₃வித் தால் இதர விஷய வைராக்₃யமும். இரண்டாம் பாத₃த்தை அநுப₄வித்தால் ப₄க₃வத்₃விஷயத்ருஷ்ணேயும் பெறலாம் என்ற படி. இதர விஷயங்களின் தே₃ாஷங்களை முதல்பாத₃த்திலும் பரமாத்ம கல்யாண கு₃ணங்களை இரண்டாம் பாதத்திலும் நிரூபிக்கிருர்.

ப்₃ரஹ்மாநுப₄வரூபமுக்தியானது ஜ்ஞாநஸங்கோச நிவ் ருத்திரூபமானது. ஜ்ஞாநஸங்கோசத்₄வம்ஸமென்றபடி. த்₄வம்ஸரூபாபா₄வம் ஸாதி₃யானுலும் (உண்டாவதானுலும்) அநந்தமாகையாலே அழிவற்றது. இப்படிச்சொல்லுகிறது பரபக்ஷத்தையநுஸரித்தேயாகும். வஸ்துதஸ்து ஸ்ரீராமாநுஜ

மதத்தில் ப₄ாவாந்தரம் அப₄ாவம் என்றங்கீ₃கரிக்கப்பட்டுள்ள தாகையால், ஜ்ஞாநஸங்கோசநிவ்ருத்தி என்கிற அப₄ாவம் ஜ்ஞாநவிகாஸரூப ப₄ாவமேயாகும். அது நித்யம் என்று 'ந ச புநராவர்த்ததே' இத்யாதி₃ஶ்ருதிஸித்₃த₄ம். ஜ்ஞாநத்துக்கு விகாஸம் ஸ்வாப₄ாவிகம் என்பது வேத₃ாந்த ஸித்₃த₄ாந்தம். அது கர்மமடியாக சுருக்கமடைந்துள்ளது. ஜ்ஞாநஸங்கோசமே ஸம்ஸாரம். ப₄க₃வத₃நுக்₃ரஹ விஶேஷத்தால் கர்மமாகிற உபாதி₄க்கு நிவ்ருத்தி ஏற்பட ஸ்வாப₄ாவிகமான விகாஸமே அமைகிறது என்றபடி. (இவ்விஷயம் "ஸ சாநந்த்யாய கல்பதே" என்கிற ஶ்ருதியாலே ஸ்பஷ்டம் உக்தம்.)

இப்படிப்பட்ட ப்₃ரஹ்மாநுப₄வரூப ப₂லத்தை நான்காம் அத்₄யாயத்தில் நிரூபிக்கப் போகிறவராய், தது₃பாயத்தை மூன்ரும் அத்₄யாயத்தில் நிரூபிக்கிறவராய், விஷயாந்தர வைராக்₃யம் விளைந்து, ப₄க₃வத்விஷய த்ருஷ்ணை விளைய, விஷயாந்தர தோ₃ஷங்களையும் ப₄க₃வத்விஷய கு₃ணங்களையும் முதலிரண்டு பாத₃ங்களாலே நிரூபிக்கிருர் என்றபடி.

விஷயாந்தர வைராக்₃யமும் ப₄க₃வத்₃விஷயராக₃முமிறே ப்₃ரஹ்மவித்₃யாதி₄காரம்.

## வைராக்₃யபாத₃ம்

இங்கே ஓர் ஶங்கையெழக்கூடும். அதாவது:—விரக்தனுன வனிறே வேத₃ாந்த ஶ்ரவணத்துக்கு அதி₄காரி. ஆகையால் வேத₃ாந்த ஶ்ரவணகாலத்திலேயே வைராக்₃யம் ஏற்பட்டிருக் கிறபடியால், மறுபடியும் மூன்ரும் அத்₄யாயம் முதல் பாத₃த்தில் வைராக்₃யம் விளைவிக்கிறது ஏன்? என்று. இதற்கு ஸமாத₄ான மாவது:—வைராக்₃யம் இரு வகைப்படும். ஶாஸ்த்ர ஶ்ரவணம்

செய்வதற்கு உபயுக்தமான வைராக்₃யம் ஒன்று. உபாஸநா நுஷ்ட₂ானத்துக்கு உபயுக்தமான வைராக்₃யம் மற்றொன்று. முதல்கூறிய வைராக்₃யம் இவ்வதிகாரிக்கு ஏற்கெனவே ஸித்₃த₄ மாகிலும், இரண்டாவதாகக் கூறிய வைராக்₃யம் விளையவே வைராக்₃ய பாத₃த்தையருளுகிறார் ஸ்ரீவ்யாஸர்—என்று.

ஸம்ஸாரத்தினுடைய தோ₃ஷங்களைக் காட்டுகிறவித்தால் பழகிப்போருகிற ஸம்ஸார யாத்ரையிலும் ஜுகு₃ப்ஸை (வெறுப்பு) பிறக்கும்படி. ப₄க₃வத்₃விஷயம் இனியது. கல்யாணகு₃ணகரம். நிர்மலம் என்கிறவிதத்தால் அதனுடைய போ₄க்₃யதாப்ரகர்ஷத்தைச் சொல்லுகிறது.

க₃ர்ப₄த்திலே முடிதல். ஜநியாநிற்கமுடிதல், பிறந்து முடிதல், நாலுநாள் இருந்து முடிதல், ப₃ால்யத்திலே முடிதல். செருக்கித்திரியும் யௌவநத்திலே முடிதல், ஜரையிலே முடிதலாய் ஜீவனுடைய மரணத்தை நிர்ணயிக்க அரிதாம்படியிறேயிருப்பது. தன்னுடைய ஹிதாஹிதங்கள் ஜநநியினுடைய பு₃த்₃த்₄யதீ₄நமாயிருக்கும் அத்யந்தபாரதந்த்ரவமாகிற பேதைப்பருவம்; தீம்புகள் செய்தாலும் பொறுக்கவொண்ணுதது ப₃ாலப்பருவம்; பேதைப்பிராயமே நன்றென்னலாம்படியாய்த்து யௌவநத்திலே அறிவுகேடு; உள்ள அறிவு அக்ருத்யகரணத்துக்குடலாகையாலே அந்த யௌவநம் அழிவதற்கு முன்னே வ்யாதி₄ வந்து கைக்கொள்ளும். அத்தை ஒருபடி பரிஹரித்தவுடன் பசி தலையெடுக்கும். பசியாவது ஸர்வேந்த்₃ரியங்களும் ஸ்வஸ்வவிஷயங்களிலே ப்ரவணமாகை. இவ்வளவும் செல்லாநிற்க வந்து சேரும் ஜரை; ஜரையாகிறது சாலப்பொல்லாததொன்றிறே. போ₄க₃யோக்₃யதையின்றிக்கேயிருக்கச்செய்தே சாபல்யம் அநுவர்த்திக்குமிறே. 'பண்டு காமரானவாறும்' [பெரிய திருமொழி 1.3.5] என்று வ்ருத்த கீர்த்தநம் பண்ணியாகிலும் த₄ரிப்போம் என்று பார்க்கும். இவ்

வளவிலே இடிவிழுந்தாப்போலே மரணம்வந்து உபஸ்திதமாம். இவ்வளவு அநர்த்தபரம்பரையுடைய ஸம்ஸாரம் த்யாஜ்யம் என்றபடி.

லோகாந்தரத்தில் ஸஞ்சரிக்கிற ஜீவனுடைய தோஷங்களை நிரூபிக்கிறார் வைராக்யபாதத்தில் வ்யாஸர். இதனால் ஜாக்ரதாத்யவஸ்தாதோஷங்கள் பலிதங்கள் என்றபடி. சாந்தோக்யோபநிஷத்தில் பஞ்சாக்நிவித்யாப்ரகரணத்தில் இது ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டுள்ளது. பஞ்சாக்நி வித்யோபந்யாஸமே வைராக்யம் விளைவதற்காகவாகும். மாதாவினுடைய குக்ஷியானது மலமூத்ராதிபூர்ணம்; அதிலே கிடக்கிறானிறே குழவியான ஜீவன். தாய் புஜித்த ரஸாநுரூபமாக விருத்தியடைகிறான். இவன் தன்னுடைய வீர்ய பலஶக்தி தேஜ: ப்ரஜ்ஞைகள் நிருத்தங்களாகவிறே இருப்பது. அங்கே பஹு காலம் கிடந்து யோநித்வாரேண வெளிப்புறப் படுவதிலேதான் எவ்வளவு ஶ்ரமம் உள்ளது! கர்மாநுகுணமாகச் சிலநாள் ஜீவித்திருப்பது, மறுபடி ஏற்றச்சால்போல ஆரோஹணமாயும் அவரோஹணமாயும் ப்ரமணமிறே உள்ளது. புநரபி ஜநநம் புநரபி மரணம் புநரபி ஜநநீஜடரே ஶயநமிறே உள்ளது. "ஆதலால் பிறவி வேண்டேன் அரங்கமாநகருளானே" [திருமாலை 3] என்ற வைராக்யம் பிறக்கவிறே இவ்வுபந்யாஸம் அமைக்கப் பெற்றுளது.

(1) த்யௌ: (2) பர்ஜந்ய: (3) ப்ருத்வீ (4) புருஷன் (5) யோஷித் இவை ஐந்தும் அக்நிகள். (1) ஶ்ரத்தா (2) ஸோமம் (3) வர்ஷம் (4) அந்நம் (5) ரேதஸ்ஸு இவை ஐந்தும் ஹோமத்ரவ்யங்கள். பித்ருதேஹதாரக மருத்துக்கள் ஹோதாக்கள் என்றபடி. பஞ்சமாஹுத்யபேக்ஷாவசநம் ப்ராயிகமாகக்கொள்ளத்தக்கது. அதிஶயிதமான புண்யங்களை உடைய த்ரௌபதீ த்ருஷ்டத்யும்நாதிகள் பஞ்சமாஹுத்ய

பேக்ஷையில்லாமலே பிறந்துள்ளார்கள். அதிஶயிதமான பாப முடைய சிலவிடங்களிலும் இதற்கு அபவாதம் உண்டு. ஆகை யால் அபவாதம் இல்லாதவிடங்களிலே பஞ்சமாஹுத்யபேக்ஷா வசநம் ஸாவகாஶம் என்றபடி. ஶ்ரத்தை முதலான ஐந்தில் முதலிலே சொல்லப்பட்ட ஶ்ரத்தையென்கிற • ஸஜீவபூத ஸூக்ஷ்மமானது ஸ்வர்கரூபமான அக்நியில் ஹுதமாய், ஸோமமென்கிற அம்ருததேஹமாய் பரிணமித்து பர்ஜந்ய ரூபாக்நியில் ஹுதமாகிறது. அந்த ஸோமமானது வர்ஷமாகப் பரிணமித்து ப்ருதிவீரூபாக்நியில் ஹுதமாகிறது. வர்ஷ மானது அந்நமாகப் பரிணமித்து புருஷாக்நியில் ஹுதமாகிறது. அந்நமானது ரேதோரூபமாகப் பரிணமித்து யோஷிதக்நியில் ஹுதமாகிறது. இப்படி க்ரமமாக ரேத:பர்யந்தமாகப் பரிணத மான ஜீவஸஹித ஹோதவ்யவஸ்துக்களை ஹோதாக்களான தேஹதாரக மருத்துக்கள் ஹோமம் பண்ணுகிறார்கள். யோஷி தக்நியில் ஹுதமானதே புருஷன் என்று வழங்க தக்கதாகிறது என்றபடி. "तस्मिन् यावत्सम्पातं उषित्वा अथैतमेवाध्वानं पुनः निवर्तन्ते यथेतमाकाशं आकाशाद्वायुं...व्रीहियवा जायन्ते" (சாந் 5-10-5) என்று இறங்கி வருகிற ஜீவர்களுக்கு வ்ரீஹ்யாதிபாவம் ஓதப்பட்டுள் ளது. அந்த தான்யத்தை ஶரீரம் என்று அபிமானித்திருக்கும் ஜீவாத்மா வேறுபட்டவன். தூமாதிமார்கத்தாலே அவரோ ஹணம் செய்யும் இந்த ஜீவனுக்கு அந்த வ்ரீஹியில் ஸம்ஶ்லேஷ மாத்ரமே கொள்ளத்தகும். அறுவடை காலத்தில் தான்யததை யறுக்கும்போதே அதனை ஶரீரமாக அபிமாநித்த ஜீவனுக்கு வியோகம். இவன் மட்டும் அறுக்கும் காலத்தோடு உரலிலே குத்தும் காலத்தோடு, புடைத்து பிசைந்து தளிகை பண்ணும் காலத்தோடு வாசியற ஒட்டிக்கொண்டே புருஷகர்பத்தை யடைகிறான் என்று கொள்ளவேண்டும். ஆக, வ்ரீஹ்யாதி பாவேந ஜநநம் ஔபசாரிகமென்றபடி. இப்படி ஸம்ஸாரிஜீவகத தோஷங்களை வைராக்ய பாதத்தில் வ்யாஸர் நிரூபிக்கிறார்.

இந்த வைராக்3யபாத3ம் ஸாங்க்2யர்களுக்கும் மாயாவாதி3களுக்கும் அஸங்க3தம் என்பர் நம் பெரியோர். ஸாங்க்2யாதி3கள்—'ஆகாஶம் உலக்கையடியால் எப்படி பா3தி4க்கப்படாதோ, அப்படியே தே3ஹாதி3களால் ஆத்மா பா3திக்கப்படான்; இவனுக்கு ப2லபோ4க்த்ருத்வம் இல்லாதது போலே கர்த்ருத்வமும் இல்லை. ஆகையால் ப2லம் ஜீவோபாதி4யான அஹங்காரத்துக்கே; மோக்ஷமும் ப்ரக்ருதிக்கே என்பர். வ்யாஸர் ஜீவனுக்கு ஸம்ஸாரஸம்ப3ந்தத்தையும் தோ3ஷ ஸாஹித்யத்தையும் சொல்லி அவர்கள் பக்ஷத்தை நிரஸித்தார். ஸாங்க்2யன் "ப்ரக்ருதி ஸத்யபதா3ர்த்த2ம்; தத்ப்ரயுக்த ஸுக2து3:க2ாதி3 தோ3ஷங்கள் பொய்" என்றான். மாயாவாதி3 மாயையும் பொய் என்றான். வ்யாஸர் பாரமார்த்தி2க ஸம்ஸார ஸம்ப3ந்த4த்தை ஜீவனுக்குச்சொல்லி அவ்விரு பக்ஷங்களையும் நிரஸித்தார்—என்றபடி.

## உப4யலிங்க3பாத3ம்

ஸ்ரீவேத3வ்யாஸர் வைராக்3யபாத3த்தில் ஐஶ்வர்யம் முதலான ப்ராப்யாந்தத்தில் அருசி பிறக்க, சேதநாசேதந தோ3ஷங்களை நிரூபித்தார். இனி உப4யலிங்க3பாத3த்தில் ப4க3வத்3விஷயமான பரமப்ராயத்தில் த்ருஷ்ணை (ஆசை) விளைய, பரமாத்ம கல்யாணகு3ணங்களை நிரூபிக்கிறார். பரமாத்மா உப4யலிங்க3 விஶிஷ்டன் என இப்பாத3த்தில் அறுதியிடுகிறார். அகி2ல ஹேயப்ரத்யநீகத்வமும் கல்யாண கு3ணைகதாநத்வமுமிறே உப4யலிங்க3மாவது. இவையிரண்டு லிங்க3ங்களும் பரமாத்மாவுக்கு அஸாதா4ரணங்களானவை. இவற்றாலே ப4க3வான் ஸ்வேதரஸமஸ்தவஸ்து விலக்ஷணன் என்பர் நம் பெரியோர். ப்3ருஹத்வ ப்3ரும்ஹணத்வங்களாகிற ப்3ரஹ்ம ஶப்3தா3ர்த்த2மும் இவ்வுப4யலிங்க3மெனக் கொள்ளலாம். உபாயத்வாநுகு3ண

மான ஹேயப்ரத்யநீகத்வமும் உபேயத்வாநுகுணமான ஸமஸ்த கல்யாணகுணைகதாநத்வமும் உபாயோபேயத்வ ஸ்வபாவமான ப்ராஹ்மத்துக்கு அஸாதாரணங்களிறே.

இவ்விடத்தில் ஓர் ஶங்கை எழும். அதாவது:—முதலிரண்டு அத்யாயங்களிலே பரமாத்மதத்வம்—சேதநாசேதந விலக்ஷணமாயும், ஸர்வஜ்ஞமாயும். ஸர்வஶக்தமாயும். ஜகத்தேககாரணமாயும், அத்புதகாரணமாயும். யுக்த்யாபாஸங்களாலே அவிசால்யமாயும் நிருபிதமிறே. அந்தப்பரமாத்மாவை மறுபடியும் இந்த ஸாதநாத்யாயத்தில் நிருபிப்பான் என்? ஸாதநத்தையிறே இவ்வத்யாயத்தில் நிருபிக்க ப்ராப்தம் என்று. இதற்குப்பரிஹாரமிருக்கும்படி:—இவ்வத்யாயம் ஸாதநாத்யாயமாமையால். இதில் ஸாதநத்தையே நிருபணம் செய்வது யுக்தமென்று கூறுவது பொருத்தமே. ஆயினும் ப்ராஹ்மத்தை இவ்வத்யாயத்தில் நிருபிப்பதில் அநுபபத்திலேஶமுமில்லை. ஸாக்ஷாத்ஸாதநம் ப்ரஹ்மமேயிறே. ஶேஷியாயும். ப்ராப்யமாயுமுள்ள ப்ராஹ்மமிறே உபாயமாகிறது. ஶேஷியாக ப்ரணவத்தாலே நிருபிதமாயும். ப்ராப்யமாக த்ருதீயபதத்தாலே நிருபயிஷ்யமாணமாயும் உள்ள ப்ராஹ்மமே உபாயம் என்று நமஶ்ஶப்ததமான ஹ்ருதயத்தாலே (மத்யமபதத்தாலே) கோஷிக்கப்படுகிறது—என்றிறே ஸத்ஸம்ப்ரதாய ஹ்ருதயம். ஆகையால், இப்பாதத்திலே பரமாத்மாவை உபாயமாயும். உபேயமாயும் ஸகல பல ப்ரதனாகவும் அறுதியிடுகிறார் வ்யாஸர். இவ்விஷயங்களை பராதிகரணத்லும் பலாதிகரணத்திலும் காணலாம்.

இப்பாதத்தில் ப்ராஹ்மம் ஸகுணமென்றும் நிர்தோஷம் என்றும் நிருபிக்கிறார். ஆகையால் இப்பாதம் ராமாநுஜதர்ஶநத்துக்கு அத்யந்தாநுகூலம் என்னத்தகும். "அஶேஷவிசேஷ ப்ரத்யநீக சிந்மாத்ரம் ப்ராஹ்மம்; அதற்குப் பாரமார்த்

தி2க குணங்கள் கிடையாது. ப்3ரஹ்மம் உண்மையாக நிர்கு3ணமே" என்பார்க்கு இப்பாத3மும் மேல்பாத3மான கு3ணோபஸம்ஹாரபாத3மும் எல்லாப்படியாலும் அஸங்க3மாகும். ஸகு3ணத்வத்தை ஸ்த2ாபிக்கிற உப4யலிங்க3பாத3மும் உபாஸ்ய கு3ணபே4த3த்தாலே வித்3யா பே4த3த்தை ஸ்த2ாபிக்கிற கு3ணோபஸம்ஹாரபாத3மும் எங்ஙனே நிர்கு3ணவாத3த்துக்குப் பொருந்தும்? கல்யாண் கு3ணங்கள் பரமார்த்த2மென்று கொள்ளில் ஸகு3ணவாத3ம் ப்ரஸங்கி3க்கும். கு3ணங்கள் அஸத்யங்கள் என்று சொல்லப்பார்க்கில் தாங்களே ப்3ரஹ்மத்துக்கு ஒப்புக் கொண்டிருக்கிற ஸ்வயம்ப்ரகாஶத்வம் ஆநந்த3த்வம் இவையும் இல்லையாய் விடும். இவையும் இல என்பரேல் பௌ3ளத்3த4ாதி3மத ப்ரவேஶப்ரஸங்க3ம் ஏற்படும். பௌ3ளத்3த4ாதி4வைலக்ஷண்யம் ஸித்3தி4யாது. சிஞ்ச, ஸகு3ணநிர்குண3வாக்யங்கள் பி4ந்ந விஷயங்களாகையால் விரோத4லேஶமும் அற்றவை என்று கொள்ளத்தகும். கல்யாணகு3ணவிஶிஷ்டன் பரமாத்மா என்பது ஸகு3ண வாக்யத்துக்கும், அபகு3ண ரஹிதன் அவன் என்பது நிர்கு3ணவாக்யத்துக்கும் விஷயமாகையால் விரோத5லேஶமில்லை என்றபடி. 'दूरे गुणाः तव तु सत्त्वरजस्तमांसि तेनत्रयी प्रथयति त्वयि निर्गुणत्वं" என்றிறே ஆழ்வான் அருளிச்செய்தார். "कल्याणैः अस्य योगः तदितरविरहोऽपि एकवाक्यश्रुतौ च" என்கிறபடியே இந்த விஷய விபா4க3ம் ஶ்ருதி ஸித்3த4ுமாகிறது. अपहतपाप्मा... सत्यकामः सत्यसंकल्पः" என்றிறே உபநிஷத்3வாக்யம் என்றபடி. "निर्गुणं" என்ற கு3ணநிஷேத4ம் "यः सर्वज्ञः सर्ववित्" இத்யாதி3களாலே விதி4க்கப்பட்ட கல்யாணகு3ணங்களையொழிந்த கு3ணங்களிலேயாகக்கடவது என்று ஸங்கோசம் செய்து கொள்ளலாம். இது உத்ஸர்க3ாபவாத3ந்யாயஸித்3த4ம். அன்றிக்கே. "निर्गुणं" என்ற கு3ணஸாமாந்ய நிஷேத4த்தை "अपहतपाप्मा विजरः" இத்யாதி3வாக்யாநுஸாரேண கு3ணவிஶேஷ நிஷேத4த்திலே நோக்காக ஸங்கோசம் செய்து கொள்ளலாம்.

இது ஸாமாந்யவிஶேஷ ந்யாயஸித்₃த₄ம். "நிர்₃ணு" என்று கு₃ணஸாமாந்யநிஷேத₄ வசநம்போலே கு₃ணஸாமாந்ய வித₄ாயகவாக்யம் உபநிஷத்திலே காணப்படுமாகில் விரோதஶங்கைக்கு அவகாஶம் உண்டு. அவ்வாறு கு₃ணஸாமாந்யவித₄ாநம் ஶ்ருதிகளில் இல்லையென்னலாம். "யः காலகாலः गुणी सर्ववित् यः" இத்யாதி₃ஸ்த₂லங்களில் உள்ள "गुणी" என்கிறபத₃மும் கு₃ணவிஶேஷபரம் என்றே கொள்ள ப்ராப்தம். "वशी वदान्यः गुणवान् ऋजुः" என்கிற ஆளவந்தார் திவ்யஸூக்தியிலும், "कः गुणवान् कश्च वीर्यवान्" என்ற ஸ்ரீவால்மீகி வாக்யத்திலும் உள்ள "गुणवान्" என்ற பத₃த்திற்கு கு₃ணஸாமாந்யபரத்வம் கொள்ளாதே கு₃ணவிஶேஷபரத்வம் கொள்வது ஸமபி₄வ்யாஹாரஸித்₃த₄ம். அவ்வோபாதி இவ்வுபநிஷத்திலும் "गुणी" என்று கு₃ணவிஶேஷபரமாகக் கொண்டார்கள் நம் பெரியோர். இப்படி உத்ஸர்கா₃பவாத₃ ஸாமாந்யவிஶேஷ ந்யாயங்களாலே ஸகு₃ண நிர்கு₃ணவாக்யங்களுக்கு விரோத₄மே இல்லை என்ற நம் பெரியோர் —இவ்விருவாக்யங்களுக்கு விரோத₄மிருப்பதாகக் கொள்ளிலும், விரோத₄ாதி₄கரணந்யாயத்தாலே அல்லது உபக்ரமாதி₄கரணந்யாயத்தாலே ஸகு₃ணவாக்யம் ப்ரப₃லம் என்னத்தகும் என்பர்.

இங்கே அபச்சே₂த₃ ந்யாயத்தைக்கொண்டு நிர்கு₃ண வாக்யம் உத்தரஶாஸ்த்ரம் ப்ரப₃லம் என்பது ஸர்வாத்மநா அயுக்தம். அபச்சே₂த₃ந்யாயம் அநியதவிரோத₄பௌர்வாபர்ய விஷயம். "पौर्वापर्ये विरोधश्च पूर्वप्रामाण्यमेव च। नियमान्नास्ति यत्रासौ अपच्छेदनयो भवेत् ॥" என்னச்கடவதிறே. ஸகு₃ண நிர்கு₃ண வாக்யங்களுக்கு விரோத₃மும் ஸ்வரூபப்ரயுக்தம். விதி₄நிஷேத₄ ரூபமாக உள்ளதாகையாலே பௌர்வாபர்யமும் நியதம். ஆகையாலே நியதவிரோத₄பௌர்வாபர்யமான ஸகு₃ணநிர்கு₃ண வாக்யஸ்த₂லத்திலே அபச்சே₂த₃ ந்யாயப்ரவ்ருத்திக்கு அவகாஶமே இல்லை. ஆகையாலே இது கொண்டு ஸகு₃ண

வாக்யம் து₃ர்ப₃லம், நிர்கு₃ண வாக்யம் ப்ரப₃லம் என்பது பொருந்ாது. ப்ரத்யுத, விரோத₄ாதி₄கரண உபக்ரமாதி₄கரண ந்யாயங்களாலே ஸகு₃ணவாக்யப்ராப₃ல்யமே ஸித்₃தி₄க்கும். கிஞ்ச, உத்தரம் ப்ரப₃லம் என்றே கொண்டு நிர்கு₃ணவாக்யம் ப்ரப₃லம் என்னப்பார்க்கில் "ब्रह्म सत्" என்ற வாக்யத்துக்கு உத்தரமாய் "ब्रह्म असत्" என்கிற பௌ₃த்₃த₄வாக்யம் உள்ள தாகையால் பௌ₃த்₃த₄பக்ஷமே சிரஜீவியாய் வைதி₃கபக்ஷம் ப்ரதிஹதமாய்விடும். ஆகையால் ப்₃ரஹ்மம் கல்யாணகு₃ண விஶிஷ்டமாகையால் ஸகு₃ணமென்றே கொள்ள ப்ராப்தம்.

கல்யாணகு₃ண ப்ரகரணங்களில் உபநிஷத்துக்களில் ப்₃ரஹ்மத்துக்குக் கூறப்படும் கு₃ணங்களுக்கு ஓர் உபாதி₄ (ஹேது) கூறப்படவில்லை. ஆகையால் கல்யாணகு₃ணயோக₃ம் நிருபாதி₄கம் ஸ்வாப₄ாவிகம் என்று தேறும். மேலும் "स्वाभाविकी ज्ञानबलक्रिया च" என்று கு₃ணங்கள் ஸ்வாப₄ாவிகங்கள் என்று கண்ட₂ாவேண கூறப்பட்டும் உள்ளன. கிஞ்ச, "नान्यो हेतुः विद्यते ईशनाय" என்று கு₃ணங்களுக்கு ஸோபாதி₄கத்வக₂ண்ட₃ நமும் உள்ளது. "ஈஶநம்" என்ற ஓர் கு₃ணத்துக்குச் செய்யப் பட்ட ஸோபாதி₄கத்வநிஷேத₄ம் உபலக்ஷணவித₄யா ஸமஸ்த கல்யாணகு₃ணங்களுக்கும் பொருந்தும். கிஞ்ச, உபாதி₄யான கர்மத்தைக் கழித்து ஸத்யகாமத்வாதி₃களை "अपहतपाप्मा सत्यकामः सत्यसंकल्पः" என்று ஶ்ருதி கூறிற்றிறே. மேலும், "त इमे सत्याः कामाः" என்று ப்₃ரஹ்மஸ்வரூபம்போலே கல்யாண கு₃ணங்களும் ஸத்யம் என்று கூறப்பட்டுள்ளது.

கிஞ்ச: ஆநந்த₃மீமாம்ஸையில் "ते ये शतं" என்று கு₃ணோத்கர்ஷமுள்ளதன்றி கு₃ணாபகர்ஷமில்லை என்பதும் உற்றுநோக்கத்தக்கது. கிஞ்ச ஸகு₃ணநிர்கு₃ணவாக்யங் களுக்கு விஷயபே₄தா₃த் விரோத₄மில்லையென்றும், விரோதம் உண்டாலும் ந்யாயாந்தரங்களாலே ஸகு₃ணவாக்ய

ப்ராப₃ல்யம் ஸித்₃தி₄க்கும் என்றும் கீழே நிரூபிதம். ஸூத்ரகாரரும் "अतोऽनन्तेन तथाहि लिङ्गम्" (3—2—25) "आदरात् अलोपः" (3—3—39) இத்யாதி₃களாலே ப்₃ரஹ்ம ஸகு₃ணத்வத்தை ஆத₃ரிக்கிறார். ஸ்ருதிதானே "आनन्दं ब्रह्मणो विद्वान्" என்று ப்₃ரஹ்மஸ்வரூபத்தைக்காட்டிலும் ப்₃ரஹ்ம கு₃ணத்தில் அத்₄யாத₃ரத்தைக் காட்டுகிறது என்பர் நம் பெரியோர். இவ்விடத்தில் "आनन्दं ब्रह्मणो विद्वान्—इति ब्रह्मणः कल्याणगुणान् आदरेण वदतीयं श्रुतिः" என்ற ஜிஜ்ஞாஸாதி₄கரண ஸ்ரீபா₄ஷ்யவாக்யமும், "आदरेणेति—ब्रह्मस्वरूपादपि तद्गुणेषु आदरातिशय उक्तः । 'आनन्दं ब्रह्मणो विद्वान्' इति हि श्रुतिः । न तु 'आनन्दान्वितं ब्रह्म विद्वान्' इति हृदि भावः" என்ற ஸ்ருதப்ரகாஸிகா வாக்யமும் அநுஸந்தே₄யம். "नहि ब्रह्मणो विशेषणतया प्रमाणान्तराप्रज्ञातं सर्वं तद्विशेषणत्वेन उपदिश्य पुनः तदेव अनुन्मत्तः प्रतिषेधति" என்ற உப₄யலிங்கா₃தி₄கரண ஸ்ரீபா₄ஷ்யவசநமும் "नच मातापितृसहस्रेभ्योऽपि वत्सलतरं शास्त्रं प्रतारकवत् अपारमार्थिकान् निरसनीयान् गुणान् प्रमाणान्तराप्रतिपन्नान् आदरेण उपदिश्य, संसारचक्रपरिवर्तनेन पूर्वमेव बम्भ्रम्यमाणान् मुमुक्षून् भूयोऽपि भ्रामयितुमलम्" என்ற காமாத்₃யதி₄கரண ஸ்ரீபா₄ஷ்ய வாக்யமும் விசேஷ்ய அநுஸந்தே₄யம். கிஞ்ச உபாஸந விதி₄ரஹிதங்களான "यः सर्वज्ञः" இத்யாதி₃வசநங்களில் ப்₃ரஹ்மஸ்வரூபம்போலே கு₃ணங்களும் ப்ரதிபந்நங்கள். ஆகையால், உபாஸநார்த்த₂ம் கு₃ணம் கல்பிதம் என்ன வொண்ணாது. உபாஸநார்த்த கு₃ணங்கள் அபாரமார்த்தி₂கங்கள் என்னப்பார்க்கில் ப்₃ரஹ்மஸ்வரூபமும் உபாஸ்யமாகையால் அபாரமார்த்தி₂கமாம், ஆகையால் ஸ்ருதி போன வழியில் நாம் ப்₃ரஹ்மம் ஸகு₃ணமாக கு₃ணவிசிஷ்டம் என்றே கொள்வது உசிதம்.

கிஞ்ச "யாவதா₃த்மபா₄வித்வாத்" (2-3-30) என்று கு₃ணகு₃ணிகளுக்கு பே₄த₃த்தை ஸ்ரீவ்யாஸர் ஸ்பஷ்டமாகக் கூறுகிறார் என்று கீழே கூறப்பட்டதாகையால் கு₃ணகு₃ணி

களுக்கு அபே₄த₃வாத₃மும் அயுக்தமாகும். "आनन्दो ब्रह्म" என்ற மாத்ரத்தைக்கொண்டு கு₃ணகு₃ணிநோரபே₄த₃ம் என்னப் பார்க்கில் "आनन्दं ब्रह्मणो विद्वान्" என்கிற வ்யதிரேக நிர்தே₃ஶ ஸ்வாரஸ்யப₄ங்க₃ ப்ரஸங்க₃ம் ஏற்படும். "இவ்விரு நிர்தே₃ஶங் களும் ப்ரஹ்மம் ஆநந்த₃ஸ்வரூபமாயும், ஆநந்த₃கு₃ணகமாயும் உள்ளதாகையால் யுக்தமே" என்பது நம்பெரியோர் கண்ட முறை. கு₃ணகு₃ணிகளுக்கு அபே₄த₃ம் கொள்ளில் அருணாதி₄ கரணவிரோத₄ம் ப்ரஸங்கி₃க்கும். அவ்வதி₄கரணத்தில் ஆருண்ய கு₃ணத்துக்கு த்₃ரவ்யத்₃வாரா க்ரயஸாத₄நத்வம் ஸித்₃த₄ாந்தித மிறே. கிஞ்ச ஸாமாநாதி₄ கரண்ய நிர்வாஹமும் ஸம்ப₄வியாது. அவிருத்₃த₄ அநேக ப்ரகார அவகா₃ஹியாயும் த₄ர்ம்யைக்யாவ கா₃ஹியாயுமிறே ப்ரதீதியுள்ளது. அது வ்யாஹதமாம். கு₃ண கு₃ணிகளுக்கு அபே₄த₃ம் கொள்ளில் அத்₃வைதமதாத் ஸ்வமதத் திற்கு விஶேஷமும் ஸம்ப₄வியாது. கிஞ்ச கு₃ணபே₄த₃ப்ரயுக்த வித்₃யாபே₄த₃த்தை நிரூபிக்கும் கு₃ணோபஸம்ஹாரபாத₃மும் அஸங்க₃தமாகும். ஸூத்ரகாரோக்தமான வித்₃யாபே₄த₃விகல்ப மும் அயுக்தமாம். ஆகையால் ப்₃ரஹ்மம் ஸத்யம். அவ்வோ பாதி தத்கல்யாணகு₃ணங்களும் ஸத்யங்கள். அவ்வோபாதி ப்₃ராஹ்ம தத்₃கு₃ணங்களுக்கு பே₄த₃மும் பாரமார்த்தி₂கமே என்பர் நம் பெரியோர். இப்படிப்பட்ட ப்₃ராஹ்மகல்யாண குணங்களை நிரூபிக்கிறார் உப₄யலிங்க₃பாத₃த்தில் ஸ்ரீவ்யாஸர் என்றபடி. "तस्मात् ब्रह्म द्विलिङ्गं द्विविधविभित्र इत्येव वेदान्तपक्षः" என் றிறே ஸ்ரீநிக₃மாந்தகு₃ருவாம் கேஸரியின் க₃ர்ஜநமிருக்கும்படி.

இப்பாத₃த்தில் அதி₄கரணங்கள் எட்டு உள்ளன. முதல் நான்கு அதி₄கரணங்களால் ஜீவதோஷங்களை மறுபடியும் கூறுகிறார். இதற்கு இப்பாத₃த்திலே ஸங்கதி எங்ஙனேயென்னில் 'स्वापार्थसृष्टभावप्रभृतिबहुविधब्रह्ममाहात्म्यसिद्ध्यै' "என்கிறபடியே ஸ்வாப்நபதா₃ர்த்த₃ங்களை ஸ்ருஷ்டிப்பதாயிருக்கை" முதலான

பரமாத்ம மாஹாத்ம்ய ப்ரதிபாத3நமே ப2லிக்கிறபடியால், இப் பாத3த்திலே ஜீவ ஸ்வப்நாதி3தோ3ஷநிரூபணமும் ஸங்க3தமே என்பர். இந்த முதல் நான்கு அதி3கரணங்களை வைராக்ய பாத3சேஷமாக ஸ்ரீஸேநாபதிமிச்ரர் ந்யாயகலாபஸங்க்3ரஹத் திலே கூறியுள்ளார்; ஆயினும் "परमात्मनः स्वाप्नविचित्रार्थस्रष्टृत्वं सुषुप्तस्थानत्वं च आकारद्वयं प्रतिपादितं भवतीति परमात्मगुणसिद्धेः अस्मिन् पादे तन्निरूपणम्" என்ற ச்ருதப்ரகாசிகா தி3வ்யஸூக்திப்படியே எட்டு அதி4கரணங்களுமே இப்பாத3த்தில் ஸாக்ஷாத் ஸங்க3தமென்று கொள்ளத்தகும்.

இனி அதி4கரணார்த்த2ங்களைச் சுருக்கமாக ஈண்டு அநுப4 விப்போம்.

இந்தப்பாத3த்தில், முதல் நான்கு அதி4கரணங்களில் ஜீவதோ3ஷங்களை நிரூபிக்கிறார் ஸ்ரீ வேத3வ்யாஸர்.

ப4க3வத்3 கு3ணநிரூபண பரமான இந்தப்பாத3த்தில் ஜீவ தோ3ஷங்களை நிரூபிக்கும்படி எங்ஙனே என்னில்:—ஸ்வப்நாவஸ்தை2யிற்போலே ஸர்வாவஸ்தை2களிலும் ஜீவன் ப4க3வத3த்4யந்த பாரதந்த்ரனே—ஸ்வதந்த்ரனுமல்லன்—பரமசேஷியான பரமாத்மாவோடு ஏகீபூ4தனுமல்லன் என்று அறிவிக்கவே இங்கே ஜீவ ஸ்வாப்நாத்3யவஸ்தா2நிரூபணம். முற்கூறியபடி ப4க3வான் விசித்ர ஸ்வாப்நபதா3ர்த்த2ங்களை ஸ்ருஷ்டிக்கிறான். அவன் ஸர்வஜ்ஞன் ஸர்வசக்தன் என்று ஈச்வரமஹிமையை அறிவிக்கவும் இங்கே இந்த நிரூபணம் என்று கொள்ளத்தகும். இதனால் விசித்ரபதா3ர்த்த2ங்களை ஸ்ருஷ்டிக்கும் தன்மை, ஸுஷுப்திஸ்தா2நமாயிருக்கும் தன்மை ஆகிய இரண்டாகாரங்கள் பரனுக்கு மஹிமையாக ப்ரதிபாதி3க்கப்படுகிறது இந்தப் பாத3த்தில் என்றபடி.

இப்பாதத்தில் முதலதிகரணமான ஸந்த்யாதிகரணத்தில் "ஸந்த்யே" என்று தொடங்கி இரண்டு ஸூத்ரங்களாலே "ஜீவனே ஸ்வாப்நபதார்த்தஸ்ரஷ்டா" என்ற பூர்வபக்ஷத்தைக்காட்டி 'மாயாமாத்ரம்' என்று தொடங்கி நான்கு ஸூத்ரங்களால் 'பரமாத்மாவே ஸ்வாப்நவிசித்ர பதார்த்தஸ்ரஷ்டா' என்று ஸித்தாந்தீகரிக்கிறார் ஸ்ரீவேதவ்யாஸர் என்பது ஸ்ரீபாஷ்யஸாரம். இவ்வதிகரணத்தில் 'ஸ்வாப்நபதார்த்தம் ஸத்யம் பாரமார்த்திகம்' என்று பூர்வபக்ஷத்தையும் 'ஸ்வாப்நம் அஸத்யம் அபாரமார்த்திகம் என்று ஸித்தாந்தத்தையும் பரஸமயிகள் நிரூபித்துள்ளார்கள். 'மாயாமாத்ரோக்திலாபாத் ஶ்ருதிமுகஸூகதா: விஶ்வமித்யாத்வமாஹு:' என்கிற படியே இவர்கள் வாதத்திற்கு முக்யாவஷ்டம்பம் 'மாயா' ஶப்தமாகும். இது அயுக்தம்—மாயா ஶப்தம் மித்யாவாசகமன்று—அப்படி மித்யாவாசகமாக நிகண்டு இல்லை என்பது மட்டும் அல்ல—ப்ரத்யுத 'மாயா வயுநம் ஜ்ஞாநம்' என்று மாயா ஶப்தம் ஜ்ஞாநபரம் என்று நிகண்டுவும் உள்ளது. ஸ்ரீபராஶர பகவான் ஸ்ரீவிஷ்ணுபுராணமான புராணரத்நத்தில் 'தேந மாயாஸஹஸ்ரம் தத்... ஸூதிதம்' என்று மாயாதத்வத்தை ஸ்ரீஸுதர்ஶந விநாஶிதமாகவன்றோ அருளிச்செய்தார். அபாரமார்த்திகமாகில் ஜ்ஞாநவிநாஶ்யமாகும். இது ஸத்யமாகையாலிறே ஆயுதவிநாஶ்யமாக அருளிச்செய்தது என்றபடி. மேலும் 'ஸூதிதம்' என்று ப்ரத்வம்ஸரூப நாசம் சொல்லப்பட்டது. பரமார்த்த வஸ்துவுக்கே ப்ரத்வம்ஸரூப நாஶம் கூடும் (ஆகையாலிறே 'மாயாம்ருகோ ஹத:' என்று மாரீசனுகிற மாயமானுக்கு த்வம்ஸம் கூறப்பட்டது.) அபரமார்த்தமாகில் 'பாதிதம்' என்றன்றோ சொல்லவடுக்கும். மாயா ஶப்தத்தை 'மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாத்' என்று ப்ரக்ருதிரூபஸத்ய பதார்த்தபரமாக ஓதிற்று உபநிஷத்து. இந்த்ரஜித்தாலே ப்ரயோகிக்கப்பட்ட மாயைகளில் மந்த்ரவிஶேஷங்

களாலே உண்டாக்கப்பட்ட பாரமார்த்தி₂க ஸர்ப்பங்களுக்கே 'மாயா' என்ற வ்யவஹாரம் காணப்படுகிறது. அந்த மாயை பொய்யாகில் க₃ருட₃னாலே அழிக்கப்பட்டதாகச் சொல்லுமது பொருந்தாது. நீதிஶாஸ்த்ரங்களில் இந்த்₃ரஜால பி₄ந்நமாக மாயை கூறப்பட்டுள்ளது. மந்த்ராதி₃ஶக்தி விஶேஷங்களாலே உண்டான பாரமார்த்தி₂க ஸர்ப்பம் மாயை என்றும். மந்த்ர விஶேஷங்களாலே உண்டான அபாரமார்த்தி₂க ஸர்ப்பாதி₃கள் இந்த்₃ரஜாலம் என்றும் பே₄த₃ம் காணத்தக்கது. ஆக 'மாயா' ஸத்யமே. ஆஶ்சர்யத்வமே மாயாஶப்₃த₃ப்ரவ்ருத்திநிமித்த மாகக் கொள்ளவேணும், இதுவே ஸர்வப்ரயோகா₃நுகு₃தமாகும்:

இரண்டாவதான தத₃பா₄வாதி₄கரணத்தில் ஸுஷுப்தி ஸ்தா₂நம் பூ₄க₃வான் என்றறுதியிடுகிறார். உறங்கும் ஸம்ஸாரி ஜீவர்களுக்கு, நாடிகள் மாளிகைஸ்தா₂நத்திலும் 'புரீதத்' என்னும் நாடி கட்டில் ஸ்தாநத்திலும் பரமாத்மா படுக்கை ஸ்தா₂நத்திலுமாக அமைகின்றன என்கிறார் இவ்வதிகா₄ரணத்தில். இதுவே ப்ராஸாத₃க₂ட்வா பர்யங்கந்யாயமாகும் இந்த மூன்றும் கூடியே ஸுஷுப்தி ஸ்தா₂நம் என்றபடி. 'தூமணிமாடத்து—கோட்டுக்கால் கட்டில்—மெத்தென்றபஞ்சசயநம்' என்றாப் போலே இங்கேயும் கொள்ளத்தகும்.

மூன்றாவது அதி₄கரணத்தில், ஆத்மநித்யத்வம் கூறப் படுகிறது. இங்கே ஓர் ஶங்கை யெழக்கூடும். அதாவது:— ஜீவநித்யத்வம் 'நாத்மா ஶ்ருதே: நித்யத்வாச்ச தாப்₄ய:' என்று முன்னமே கூறப்பட்டுள்ளது. மோக்ஷகாலத்தில் ஜீவன் பாஷாண துல்யனாகிறான் என்ற பக்ஷத்தை "ப்₃ராஹ்மேண ஜைமிநி:" என்று வ்யாஸர் நிரஸிக்கப்போகிறார். ஆத்மநித்யத்வம், காலாந்தர லோகாந்தரங்களில் தே₃ஹாந்தர பரிக்₃ரஹ பூர்வக மாக அநுப₄விக்கப்படும் ஸ்வர்க₃த்தையும் தத்ஸாத₄நமான ஜ்யோதிஷ்டோமாதி₃களையும் விசாரிக்கும் பூர்வமீமாம்ஸை

யிலும் கூறப்பட்டுள்ளது. உத்தரமீமாம்ஸையிலும் 'அநுஸ்ம்ருதே:' (2-2-24) என்று க்ஷணிகவிஜ்ஞாநவாத₃ப₄ங்க₃ ப்ரகரணத்தில் ஆத்மநித்யத்வம் கூறப்பட்டுள்ளது. கல்பாந்தத்தில் "ஏகமேவ" என்று ஓதப்படும் ஐக்யம் ஸ்வரூபைக்யமன்று—நாமரூபப்ரஹாணமேயாகும் என்றும் ஸித்₃த₄ாந்திதம். ஆக ஆத்ம நித்யத்வம் அநேகஸ்த₂லங்களில் ஸித்₃த₄மாயிருக்க, இங்கே. புந: ஆத்மநித்யத்வ கத₂நம் வ்யர்த்த₂மாகும்—என்று இதற்கு ஸமாத₄ாநமாவது:— ப்ரளய ஸமமான இந்த ஸுஷுப்தி பரமஹேயம் என்று இதனுடைய தோ₃ஷத்தைக் காட்டவே இந்த ப்ரஸங்கம்—வேறு ப்ரயோஜநத்துக்காக அன்று, ப்ரதிதி₃நம் ப்ரளயதுல்யமாக த₄ர்ம பூ₄தஜ்ஞாநத்தின் அதிஸங்கோசமான ஸுஷுப்தி ஏற்படுகிறதன்றோ. முன்னே கூறப்பட்ட ஸ்வப்நத₃ஶையிலும் மேலே கூறப்படப்போகும் மூர்ச்ச₂ாத₃ஶையிலும் போலே இந்த ஸுஷுப்தியிலும் பலதோ₃ஷங்கள் உள்ளன; இது பரமஹேயம்: த்யாஜ்யம் என்ற பு₃த்₃தி₄யைப்பிறப்பிக்க இந்த ப்ரஸங்க₃ம் என்றபடி. ஸுஷுப்தியில் ஸர்வப்ரவ்ருத்தி ஶூந்யத்வமும் த₄ர்மபூ₄தஜ்ஞாநாத்யந்தஸங்கோசமும் அமையும். மோக்ஷத₃ஶையில் ப₄க₃வத்கைங்கர்ய ரூப ப்ரவ்ருத்தியும் த₄ர்ம பூ₄தஜ்ஞாநாத்யந்தவிகாஸமும் அமையும் என்று ஸுஷுப்தி மோக்ஷங்களுக்கு பே₄த₃ம் என்றருளிச்செய்திருர் இவ்வதிக₄ரண பா₄ஷ்யத்தில் எம்பெருமானுர்.

நான்காவது அதிகரணம் ஸம்ஸாரியுடைய மூர்ச்ச₂ாவஸ்த₂ா விசாரபரம். பூர்வபாத₃த்தில் ஜாக்₃ரத₃வஸ்தை₂யும் மரணாவஸ்தை₂யும் விசாரிக்கப்பட்டன இப்பாத₃த்தில் ஸ்வப்நாவஸ்தை₂யும் ஸுஷுப்த்யவஸ்தை₂யும் விசாரிக்கப்பட்டன. 'மூர்ச்சை₂ ஸுஷுப்த்யாதி₃களில் ஒன்றே' என்ற பூர்வபக்ஷத்தையும் 'அது ஸுஷுப்த்யாதி₃பி₄ந்நம்' என்ற ஸித்₃த₄ாந்தத்தையும் கூறுவது இந்த நாலாவது அதி₄கரணம். இவ்வதி₄கரணம் ப₄க₃வத்கல்யாணகு₃ணதிஶய ஸ்த₂ாபகமன்று. ஆயினும் ஜாக்₃ரத₃ாத்₃யவஸ்த₂ா விஶேஷஶோத₄நம் செய்த பிறகு

ஸுஷுப்தி துல்ய மூர்ச்ச$_2$ாவஸ்த$_2$ாவிசாரம் இங்கே அவஸர ப்ராப்தமாயிற்று. அவ்வளவே என்று கொள்க. மூர்ச்சை$_2$ ஸுஷுப்தியிலும் சேராது. மரணத்திலும் சேராது. நிமித்த வைரூப்யத்தையும் ஆகாரவைரூப்யத்தையும் இதற்குக் காரண மாக அருளிச்செய்கிறார் எம்பெருமானார். நிமித்தவைரூப்யத் தாலும் ஆகாரவைரூப்யத்தாலும் ஸுஷுப்திவைலக்ஷண்யமும் மரணவைலக்ஷண்யமும் என்றதாயிற்று. ஸுஷுப்திக்கு நிமித்தம் இந்த்$_3$ரியஶ்ரமம். மூர்ச்சை$_2$க்கு நிமித்தம்—உலக்கை முதலியவற்றால் அடிபடுதலாகும். ஸுஷுப்தியில் வெப்பமும், மூச்சு விடுதலும், மூச்சு இழுப்பதும் ஸ்பஷ்டமாயுள்ளது. தெளிந்த முகமாயும் காணப்படுகிறது. கண்களும் மூடியிருக் கின்றன—மூர்ச்சை$_2$யில் வெப்பம் தேடப்படவேண்டும் நிலையில் உள்ளது. உச்ச்$_2$வாஸ நிஶ்வாஸங்களும் அஸ்பஷ்டங்கள். திறந்த கண்ணுகவும் ப$_4$யங்கரமுக$_2$மாயும் உள்ளது. இது ஆகார வைஷம்யம். ஆகையால் ஸுஷுப்தியன்று மூர்ச்சை. அபி$_4$கா$_4$ தத்தாலே மூர்ச்சை$_2$, ப்ரஶ சே$_2$த$_3$த்தாலே மரணம் என்று நிமித்தபே$_4$த$_3$ம். உச்ச்$_2$வாஸ நிஶ்வாஸங்களேயில்லாமை ஆகாரவைஷம்யம். மேலும் மூர்ச்சை$_2$யுள்ளவன் ப்ரப$_3$லகாரண விஶேஷத்தினால் எழுந்திருக்கவும் கூடும். மரணமுற்றவன் அப்படியல்லன். ஆகையால் மரணபி$_4$ந்நமே மூர்ச்சை$_2$. மரண கல்பம் என்று கொள்ளத்தகும் என்றபடி. ஆக நான்கு அதி$_4$ கரணங்களால் ஜீவதோ$_3$ஷங்களைச்சொல்லி அத்தாலே பரமாத்ம கு$_3$ணங்களையும் விளக்கினாராயிற்று. இனி பரமாத்ம கல்யாண கு$_3$ணங்களை நேராக அருளிச்செய்கிறார் மேலே.

இந்தப் பாத$_3$த்தில் பூர்வபேடிகையான முதல் நான்கு அதி$_4$ கரணங்களாலே ஜீவதோ$_3$ஷங்களை நிருபித்த வ்யாஸர், உத்தர பேடிகையான மேல் நான்கு அதி$_4$கரணங்களாலே பரனுடைய நிர்தோ$_3$ஷத்வத்தையும், கல்யாணகு$_3$ணுகரத்வத்தையும் நிரு

பிக்கிறார். அகி₂லஹேயப்ரத்யநீகத்வமும் கல்யாணகு₃ணாகரத்வமுமிறே உப₄யலிங்க₃மாவது. 'அமலன்' 'ஆதி' என்றிறே இவ்விரண்டையும் பாண்பெருமாளருளிச்செய்தது. உத்தர பேடிகையும் இருகூறுகளோடுகூடியது. தோ₃ஷமுடைய வஸ்துவினுடைய ஸம்ஸர்க₃த்தாலே ஶங்கிக்கப்படும் தோ₃ஷங்களை ஶ்ருதியில் ஓதப்படும் பரனுடைய ஸ்வபா₄வங்களைக்கூறி நிரஸிக்கிறார் முதலதி₄கரணத்தில் வ்யாஸர். ஶ்ருதியிலே கூறப்படும் ஜக₃த்₃ப்₃ரஹ்மைக்யமூலமாகக் கூறப்படும் தோ₃ஷங்களை பரப்₃ரஹ்மஸ்வபா₄வ கத₂நமுக₂த்தாலே நிரஸிக்கிறார் இரண்டாமதி₄கரணத்தால் வ்யாஸர். நிர்தோ₃ஷத்வஶ்ருதி போலே கல்யாணகு₃ணாகரத்வஶ்ருதியும் தோ₃ஷஶங்கையை நிரஸிக்கும். கல்யாணகு₃ணங்களும் தோ₃ஷ விரோதி₄களிறே என்றபடி. இப்படி முதல் பேடிகை.

"இப்படி இரண்டு அதிகரணங்களாலே உப₄யலிங்க₃ விஶிஷ்டமாக அறுதியிடப்பட்ட ப்₃ரஹ்மம் உபாஸ்யமல்ல; பரத்வமில்லாமையாலே ஔதா₃ர்யமில்லாமையாலே" என்று ஶங்கை ஏற்பட, பராதி₄கரணத்தாலே பரத்வபூர்த்தியையும் ப₂லாதி₄கரணத்தாலே நிரதிஶயௌதா₃ர்யத்தையும் உபபாதி₃த்து, உக்தஶங்காநிராஸம் செய்து "பரப்₃ரஹ்மம் உபாஸ்யமே" என்று அறுதியிடுகிறார் மேலிரண்டு அதி₄கரணங்களாலே. இப்படி இரண்டாவது பேடிகை. இப்படி பா₄க₃த்₃வய விஶிஷ்டம் இந்த அதி₄கரண சதுஷ்டயம் என்றதாய்த்து இங்கே.

"स्थानित्वात् अचिद्वैक्याच्च अवरत्वात् अफलदत्वाच्च ।
अनुपास्यं इति तु शङ्कां शकलयति स्मोत्तरैः चतुर्भिरिह ॥"

[ஹேயஸ்தா₂னத்தில் இருக்கிறபடியாலும். அசித்தோடு ஐக்யம் கூறப்படுகையாலும், தாழ்ந்ததாகையாலும், நற்பலன்

அளிக்கவல்லமையற்றதாகையாலும் ப்ரஹ்மம் உபாஸிக்கத் தக்கதல்ல என்ற ஶங்கையை இங்கு மேலே நாலு அதிகரணங்களால் நிரஸிக்கிறார்.] என்ற ஶ்லோகமநுஸந்தேயம்.

பரஸமயிகள் ஜீவேஶஸ்வபாவங்களை அழிக்கப்பார்க்கிறார்கள். அதாவது;–ஸம்ஸாரபய தப்தத்வம் ஜ்ஞாத்ருத்வம், ஶேஷத்வம், பாரதந்த்ர்யம், பகவத்ப்ரஸாதபாத்ரத்வம் இவை தொடக்கமானவை ஜீவஸ்வபாவங்கள் ஆகும். ஜகத்தேககாரணத்வம், ஸர்வஜ்ஞத்வம், ஸர்வஶக்தித்வம், அநந்தகுணவத்த்வம், அப்ராக்ருதவிக்ரஹவத்த்வம் இவை தொடக்கமானவை பரமாத்மஸ்வபாவங்களாகும். இவையித்தனையையும் அழிக்கப் பார்க்கிறார்கள் பரஸமயிகள். இவர்கள் பக்ஷத்தை நிரஸிக்கவே 'ந ஸ்தாநதோऽபி' என்று ஸ்ரீவேதவ்யாஸர் அதிகரணாரம்பம் செய்கிறார் என்பர் நம் பூர்வர்கள். 'தஸ்மாத் ப்ரஹ்ம த்விலிங்கம் த்விவித விபவம் இத்யேவ வேதாந்தபக்ஷ:' [ஆகையால் ப்ராஹ்மம் உபயலிங்கமும் உபயவிபூதியுமுடையது என்பதே வேதாந்தபக்ஷம்] என்றிறே நிகமாந்த குருஸிம்ஹ கர்ஜநம். உபயலிங்கத்வம் 'ந ஸ்தாநதோऽபி' என்கிற ஸூத்ரத்தாலும், உபயவிபூதித்வம் 'ப்ரக்ருதைதாவத்த்வம்' என்ற ஸூத்ரத்தாலும் அறுதியிடப்பட்டது என்று கண்டு கொள்வது. இதுவே வேதாந்தபக்ஷம் என்கையாலே ம்ருஷாவாதிமதம் பௌத்தமததுல்யம் என்றதாய்த்து.

உபயலிங்கத்வம் ஜீவனுக்கும் ஶ்ருதியிலே கூறப்பட்டுள்ளது. ஆயினும் ஜீவனுக்கு ஸ்வரூபதிரோதாநம் ஶ்ருதிஸித்தமாகையால் ஜீவவிஷயக உபயலிங்கத்வ ஶ்ருதிக்கு ஸங்கோசம் அங்கீகரிக்கப்படுகிறது. பரமாத்மாவுக்குத் திரோதாந ஶ்ருதியில்லாமையால், பரவிஷயக உபயலிங்கஶ்ருதிக்கு ஸங்கோசம் ஏற்கப்படவில்லை. 'ய: ப்ருதிவ்யாம் திஷ்டந்' 'ய ஆத்மநி திஷ்டந்' என்று தொடங்கும் ஶ்ருதியில், ப்ரதிபர்யாயம், 'ஸ த

ஆத்மா அந்தர்யாம்யம்ருத:' என்று 'அம்ருதத்வம்' கூறப்பட்டுள்ளதாகையால். 'அம்ருத' ஶப்$_3$த$_3$ம் நித்யத்வ பரமன்று. அங்ஙனுயின் ஸக்ருத் ப்ரயோக$_3$மே அமையும். ஆகையால் தத்தத்$_3$வஸ்துக$_3$த தோ$_3$ஷவிஶேஷ ஸம்ப$_3$ந்த$_4$மில்லாமையைக் குறிக்கும் என்றபடி. ஆகையால் ப்$_3$ரஹ்மம் ஸர்வதா$_3$ உப$_4$ய லிங்க$_3$விஶிஷ்டம் என்றே ஸர்வஶ்ருதி ஸ்ம்ருதிஸித்$_3$த$_4$ம் என்றதாயிற்று. இப்படி 'ந ஸ்த$_2$ாநத:' இத்யாதி$_3$யாலே உப$_4$யலிங்க$_3$ம் ப்ர$_3$ஹ்மம் என்று அறுதியிட்ட வ்யாஸர் 'ப்ரக்ருதைதாவத்த்வம்' இத்யாதி$_3$யாலே ப்$_3$ரஹ்மம் உப$_4$யவிபூ$_4$தியுடையது என்று அறுதியிடுகிருர். 'அத$_2$ாத ஆதே$_3$ஶோ நேதி நேதி' (ப்$_3$ரு-உப 4-3-6) என்ற வாக்யம் விபூ$_4$திநிஷேத$_4$பரமன்று. அவ்வாக்யத்தில் நிஷேத$_4$ம் கூறப்பட்டுள்ளது. ப்$_3$ரஹ்மத்துக்கும் தத்$_3$ரூபங்களுக்கும் நிஷேத$_4$ம் என்று முதல் பூர்வபக்ஷம். ப்$_3$ரஹ்மத்துக்கே நிஷேத$_4$ம்: த$_3$த்ரூபங்களுக்கல்ல—என்று பக்ஷாந்தரம். ரூபமாத்ர நிஷேத$_4$மே வாக்யார்த்த$_2$ம்; ப்ரஹ்ம நிஷேத$_4$மன்று என்று ஸித்$_3$த$_4$ாந்தம்—என்பர் பரஸமயிகள். ரூப நிஷேத$_4$பரம் இவ்வாக்யம் என்று பூர்வபக்ஷம். ரூப நிஷேத$_4$பரமன்று; ரூப இயத்தாநிஷேத$_4$பரம் என்று ஸித்$_3$த$_4$ாந்தம்—என்பர் நம் பெரியோர். பரமாத்மாவுக்கு விஶேஷணமாக ப்ரமாணுந்தரங்களாலே அறியப்படாத பத$_3$ார்த்த$_2$ங்களை பரப்$_3$ரஹ்ம விஶேஷணமாக ஶ்ருதியே ஓதி, அந்த ஶ்ருதியே விசேஷண நிஷேத$_4$ம் செய்வதென்ருல் அது பித்தன் பிதற்றலாகும். சில வஸ்துக்கள் ப்ரமாணுந்தரஸித்$_3$த$_4$ங்கள். ஆயினும் அவை ப்ர$_3$ஹ்ம ப்ரகாரம் என்ற விஷயம் வேத$_3$ாந்தைகவேத்$_3$யம். சில வஸ்துக்கள் ப்ரமாணுந்தராஸித்$_3$த$_4$ங்கள். அவற்றின் ஸ்வரூபமும், அவற்றின் ப்ர$_3$ஹ்ம ப்ரகாரத்வமும் வேத$_3$ாந்த வேத்$_3$யமாகும். ஆகையால் வேத$_3$ாந்தம் தானே விபூ$_4$திகளை பரப்$_3$ரஹ்ம விஶேஷணமாகக் கூறித் தானே நிஷேதி$_4$யாதென்றபடி. "நேதி நேதி" என்ற ஶ்ருதியின் தாத்பர்யம் இயத்தா நிஷேத$_4$ம் என்று

கருத்து. "निर्दिष्टपरत्वशङ्कां प्रशमयति परे नेति नेतीति चोक्तिः" "நேதி நேதி" என்னும் வாக்யம், முன்சொல்லப்பட்ட அளவே உடையதோ ப்₃ரஹ்மம் என்னும் ஐயத்தைத் தவிர்க்கிறது.] என்றிறே ஸ்ரீமந்நிக₃மாந்த தே₃சிகனருளிச்செய்தார். ஆக ப்ரபஞ்ச நிஷேத₄மாக "நேதி நேதி" என்ற வாக்யம் பரஸமயிகளால் குலத₄நமாக அபி₄மாநிக்கப்பட்டது. ஆயினும் அது அவர்களுக்கு ஸ்வப்நலப்₃த₄ ஸுவர்ணமாய்த்து என்றபடி. ஆக ப்₃ரஹ்மம் உப₄யவிபூ₄தி யுக்தம் என்றதாயிற்று.

இனி பராதி₄கரணத்தின் ப்ரமேயத்தை அநுபவிப்போம். அவைதி₃கவிப்ரதிபத்தி மூன்று வித₄மாகப் பார்க்கப்படுகிறது. அதாவது (1) ப்ரக்ருதி தத்வம் லோகத்திற்கு உபாத₃ாநகாரணம். ருத்₃ரன் நிமித்தகாரணம் என்று முதல் விப்ரதிபத்தி. நாராயணன் ஜக₃த்காரணபூ₄தன் என்று ஶ்ருதிகளாலே அறுதியிடப்பட்டதையறிந்தால், முதல் விப்ரதிபத்தியொழியும். (2) இனி நாராயணன் உபாத₃ாநகாரணபூ₄தன். ருத்₃ரன் நிமித்தகாரணம் என்று இரண்டாவது விப்ரதிபத்தி. நிமித்தோபாத₃ாநங்களுக்கு ஐக்யமே—பே₄த₃ம் இல்லை என்று ஶ்ருதிகளாலே அறுதியிடப்பட்டதையறியவே இந்த ஶங்கை நிரஸ்தையாம். (3) இனி, நிமித்தோபாத₃ாந காரணமாயும். முக்தித₃மாயும் உள்ள பரப்₃ரஹ்மம் நாராயணன் ஆயினும், முக்தர்களுக்கு ப்ராப்ய பூ₄தன் வேறொருவன் என்று மூன்றாவது விப்ரதிபத்தி. இந்த விப்ரதிபத்தியையொழித்து. பரமகாரணமான பரப்₃ரஹ்மமே பரமப்ராப்யம் என்று அறுதியிடுகிறார் பராதி₄கரணத்திலே வ்யாஸர். பூர்வபக்ஷஶங்காபரம் முதல் ஸூத்ரம். மற்றவை ஸித்₃த₄ாந்த பரங்களாகும். நான்கு ஹேதுக்களைக் காட்டிப் பூர்வபக்ஷீ ப்₃ரஹ்மபி₄ந்நம் ப்ராப்யம் பரம் தத்வம் என்று தன் பக்ஷத்தைக் கூறுவதாக முதல் ஸூத்ரம் அமைந்துள்ளது. பூர்வபக்ஷி கூறிய ஹேத்வாபா₄ஸங்கள் நான்கையும் மேலே

நான்கு ஸூத்ரங்களாலே நிரஸித்து ப்₃ரஹ்மமே ப்ராப்யம் பரம் தத்வம் என்று வேதா₃ந்த ஸித்₃தா₄ந்த ஸ்தா₂பநம் செய்கிறார். "ஸ்தா₃நவிஶேஷாத்" (3-2-33) என்ற ஸூத்ரம் பூர்வஸூத்ர ஶேஷம். பூர்வஸூத்ரங்களாலே அதி₄கவஸ்து வாத₃த்தில் தூ₃ஷணத்தைக்கூறின வ்யாஸர், "அநேந ஸர்வக₃தத்வம்" என்ற அந்திம ஸூத்ரத்தாலே ஸ்வபக்ஷத்தில் ப்ரமாணப்ரத₃ர்ஶநம் செய்கிறார். ஆக ஏழு ஸூத்ரங்களில் முதல் ஸூத்ரத்தாலே பூர்வபக்ஷாநுவாத₃ம் பண்ணி, மேலே நான்கு ஸூத்ரங்களாலே பூர்வபக்ஷத்தை தூஷித்து, அந்திம ஸூத்ரத்தாலே ஸ்வபக்ஷ ஸ்தா₂பகப்ரமாணோபந்யாஸம் செய்தார். நடுவே "ஸ்தா₂ந விஶேஷாத்" என்றொரு ஸூத்ரம் பூர்வஸூத்ரஶேஷம் என்று கண்டு கொள்வது. பூர்வபக்ஷி கூறிய ஹேத்வாபா₄ஸங்கள் நான்கிலே மூன்றாவது "ஸம்ப₃ந்த₄வ்யபதே₃ஶம்" என்பது. "ப்₃ரஹ்மம் ஸேதுவாய்—ப்ராபகமாய், மற்றொன்று இந்தப் ப்ராபகத்தாலே அடையப்படும் ப்ராப்யம் என்று தேறுகிறது; "அம்ருதஸ்ய ஏஷ ஸேது:" என்றிறே ஶ்ருதி வாக்யம்" என்ற பூர்வபக்ஷத்தை நிரஸிக்கிறார் "உபபத்தேஶ்ச" என்று. உபாயத்துக்கே உபேயத்வ ஸாத₄நபரம் இந்த ஸூத்ரம் என்றபடி.

"प्राप्यस्य परमपुरुषस्य स्वप्राप्तौ स्वस्यैवोपायत्वोपपत्तेः । 'नायमात्मा प्रवचनेन लभ्यः न मेधया न बहुना श्रुतेन । यमेवैष वृणुते तेन लभ्यः तस्यैष आत्मा विवृणुते तनूं स्वां ॥' इत्यनन्योपायत्वश्रवणात् "

[ப்ராப்யனான பரமபுருஷன் தானே ப்ராப்திக்கு உபாயமாயிருப்பதும் பொருந்துகிறதாகையால் "இப்பரமாத்மா (கேவல) ஶ்ரவணமநநத்₄யாநங்களால். அடையத்தக்கவனல்லன்; எவனை இவன் வரிக்கிறானோ அவனுக்கே இவன் தன் ஸ்வரூபத்தைக் காட்டுகிறான்" என்று ஶ்ருதியில் ப்ராப்யமான ப்₃ரஹ்மமே

உபாயமாக ஓதப்பட்டுள்ளதன்றோ.] என்றிறே ஸ்ரீபா4ஷ்ய தி3வ்யஸூக்தியமைந்துள்ளது. "அநந்யோபாயத்வ ஸ்ரவணாத் —ப்ராப்யத்துக்கே உபாயத்வம் கூறப்பட்டுள்ளபடியால்" என்று பொருள். "विवृणुते तनूं स्वां" इत्यनेन प्रापकत्वं प्राप्यत्वं च गम्यते ['தன் ஸ்வரூபத்தைக் காட்டுகிறான்' என்றதால் ப்ராப்யத்வமும் ப்ராபகத்வமும் உணர்த்தப்பட்டது.] என்றிறே ச்ருத ப்ரகாஶிகாவாக்யம். இங்கே.

"भगवतः निरङ्कुशस्वातन्त्र्यप्रयुक्तपारतन्त्र्यलक्षणं, कृपा-प्रयुक्तपारतन्त्र्यलक्षणं चेति वरणद्वयमस्ति । तत्र प्राथमिकं वरणं का:चित्कमेव । न सार्वत्रिकं । कृपाप्रयुक्तपारतन्त्र्यलक्षणं वरणन्तु प्रायशो निष्कृष्टसत्त्वनिष्ठ सर्वमुमुक्षुसाधारणम् । तादृशं वरणद्वयमपि अस्यां श्रुतौ योजनाभेदेन आचार्यैः प्रतिपादितम् । श्रीभाष्ये पराधि-करणे निरङ्कुशस्वातन्त्र्यप्रयुक्तपारतन्त्र्यपरत्वेन "उपपत्तेश्च" इति
வஸ்துக்கள் ப்ரமாணாந்தர ஸித்3த4ங்கள். ஆயினும் அவை ப்ர3ஹ்ம ப்ரகாரம் என்ற விஷயம் வேதா3ந்தைகவேத்3யம். சில
सूत्रे सेयं श्रुतिः उदाहृता । कृपाप्रयुक्तपारतन्त्र्यपरतया योजनामभि-प्रेत्य अपवर्गोपायवेदनविशेषनिर्धारकतया इयं श्रुतिः लघुसिद्धान्ते उदाहृता । योजनाद्वयस्यापि फलभेदोऽस्ति । कृपाप्रयुक्तपारतन्त्र्या-पेक्षया स्वातन्त्र्यप्रयुक्तपारतन्त्र्यं प्रबलम् । तस्य वेदपुरुषाभिलाष-विषयत्वात् । तादृशफलविशेषे भगवद्व्यतिरिक्तस्य कस्यापि उपा-यत्वं नास्त्येव ।"

[ப4க3வான் சேதனனை வரிப்பது:— (1) நிரங்குஶஸ்வாதந்த்ர்யத்தால் உண்டான பாரதந்த்ரியத்தினால் செய்யப்படும் வரணம் (2) கிருபையினால் உண்டான பாரதந்த்ரியத்தினால் செய்யப் படும் வரணம் என இருவகைப்படும். அதில் முதல் வகையான

வரணம் முமுக்ஷுக்கள் அனைவர் விஷயத்திலுமல்லாமல், ஒரு சிலர் விஷயத்திலேயே எம்பெருமானால் செய்யப்படுகிறது. க்ருபையினாலுண்டான பாரதந்திரியத்தினால் செய்யப்படும் இரண்டாவது வகையான வரணமோவெனில், பரமஸத்வ நிஷ்டர்களான எல்லா முமுக்ஷுக்கள் விஷயத்திலும் பெரும் பாலும் காணப்படுகிறது. இந்த இருவகையான வரணமும், இந்த ஶ்ருதியில் இரண்டு யோஜனைகளாக ஆசார்யர்களால் காட்டப்பட்டுள்ளது. ஸ்ரீபாஷ்யத்தில் பராதிகரணத்தில் 'உபபத்தே:ச' என்னும் ஸூத்ரத்தில், நிரங்குஶ ஸ்வாதந்தர் யத்தால் உண்டான பாரதந்த்ர்யத்தினால் செய்யப்படும் வரணத்தைக் கூறுவதாக இந்த ச்ருதி உதாஹரிக்கப்பட்டது. (ஸ்ரீபாஷ்ய ஜிஜ்ஞாஸாதிகரண) லகுஸித்தாந்த பாஷ்யத் தில், இரண்டாவது யோஜனையை ஏற்று, மோக்ஷோபாயமாய், வேதநம், த்யாநம், உபாஸநம் முதலான ஶப்தங்களால் சொல்லப்படுவதான பக்தியை நிர்த்தாரணம் செய்வதாக இந்த ச்ருதி உதாஹரிக்கப்பட்டது. இரண்டு யோஜனைக்கும் இருவிதமான பயன் உண்டு. கிருபையினால் உண்டாகும் பாரதந்த்ர்யத்தைக்காட்டிலும், ஸ்வாதந்த்ர்யத்தினால் உண்டா கும் பாரதந்த்ர்யம் ப்ரபலமானது. அதை வேதபுருஷன் மிக விரும்பினானாகையால் முதல் யோஜனையின் பயனில் பகவானைக் காட்டிலும் வேறுபட்ட எதற்கும் உபாயத்வம் அடியோடு இல்லை.] என்னும் சரமச்லோகடிப்பணீ வாக்யங்கள் அநுஸந்தேயங்கள்.

ஆக 'புல்லைக்காட்டி அழைத்துப் புல்லையிடுவாரைப்போலே பல ஸாதநங்களுக்கு பேதமில்லை' என்றதாய்த்து. நிமித்தோ பாதானைக்யம் போலே பலஸாதநைக்யம் என்றபடி; சேதநா சேதந விஶிஷ்டம் ப்ரஹ்ம உபாதாநம். ஸங்கல்பவிஶிஷ்டம் ப்ரஹ்ம நிமித்தம் என்று நிமித்ததாவச்சேதக உபாதாந தாவச்சேதகங்களுக்கு பேதம் உண்டானாப்போலே, இங்கும் 'ப்ரஸாத விசிஷ்ட ப்ரஹ்மம் உபாயம், போக்யதாவிசிஷ்ட

ப்3ரஹ்மம் உபேயம் என்று உபேயதாவச்சே2த3க உபாயதாவச்சே2த3கங்களுக்கு பே4த3ம் உண்டு. இது தன்னையே 'இரக்கம் உபாயம்' இனிமை உபேயம் என்று பூர்வர்கள் ஸங்க்3ரஹித்தார்கள். ஆக ப4க3வது3பாயத்வ உபேயத்வங்கள் பராதி4கரண ஸித்3த4ாந்திதங்களாய்த்து.

இனி ப2லாதி4கரணப்ரமேயத்தை அநுப4விப்போம். கர்ம காண்டோ3க்த ஸர்வகர்மங்களுக்கும் ஆராத்4யமான ப்3ரஹ்மம், தே3வதாகாண்டோ3க்த ஸமஸ்ததே3வதைகளுக்கும் ஆத்மபூ4த மான ப்ரஹ்மம், ப்3ரஹ்மகாண்ட3த்தில் இவ்வளவாகப் பத்துப் பாத3ங்களாலே காரணத்வ ப்ராப்யத்வ ப்ராபகத்வ விசிஷ்டமாக அறுதியிடப்பட்டது. இனி இப்பாத3த்தின் கடைசியதி4கரண மான ப2லாதி4 கரணத்தால் அந்த ப்3ரஹ்மமே ஐஹிகாமுஷ்மிக போ4க3மோக்ஷரூப ஸகலப2ல ப்ரத3ம் என்று நிரூபிக்கிறார் வ்யாஸர். இத்தால் பரமாத்மா பரமோத3ாரன் என்றறுதியிடப்படுகிறது. பூர்வம் 'ப்3ரஹ்மம் ஹேயரஹிதம்' என்றார். இங்கே 'ப்3ரஹ்மம் ஹேயநிவர்த்தகம்' என்கிறார். முன் அதி3கரணத்தில் ப2லத்வம் உக்தம். இங்கு ப2லத3த்வம் சொல்லப்படுகிறது என்றபடி. தத்வஜ்ஞானம் மித்2யாநிவர்த்தகமாகையால் மோக்ஷம் ப்3ரஹ்மாதீ4நமல்ல என்ற மாயாவாதி3 மதத்தையும். பரமாத்மாநுக்3ரஹத்தை முன்னிடாதே, கேவலதத்வஜ்ஞானத்தாலே மோக்ஷம் என்ற தார்க்கிக மதத்தையும் நிரஸிக்கிறார் இவ்வதிகரணத்தில் வ்யாஸர். வஸ்துத: ஜைமிநி, வ்யாஸபக்ஷாவலம்பி3யான தச்சி2ஷ்யராகையால். ஜைமிநிமதக2ண்ட3நம் இங்கே ப்ரக்ருதமல்ல. அன்றிக்கே, ஜைமிநிமதாநுயாயி க2ண்ட3நமாகலாம். இந்த ந்யாயம் மேலே புருஷார்த்த2ாதி4கரணத்திலும் (3-4-1) ஒக்கும். 'பூர்வமீமாம்ஸையில் அபூர்வாதி4 கரணத்தில் அபூர்வம் த்3வாரம் எனப்பட்டது. அது தே3வதாநுக்3ரஹம் என இங்கேயறுதியிடப்படுகிறது என்னவுமாம்.

கர்மமே காலாந்தரபா4வி ப2லத்தைக்கொடுக்கும் என்றொரு பக்ஷம். அது அயுக்தம், கர்மம் ப்ரத்யக்ஷமாக நசிக்கக்காண்கையால். அது காலாந்தரபா4வி ப2லப்ரத3ம் ஆகாதென்றபடி. கர்மாதிரிக்தமாய் அபூர்வம் என்பதொன்று ப2லப்ரத3ம் என்றொரு பக்ஷம். ச்ருதஹாந அச்ருதகல்பநா ப்ரஸங்க3ம் (ச்ருதியில் ஓதப்பட்டதை விடுதலும் ஓதப்படாததை ஏற்றலும்) ஏற்படுமாகையால் அதுவும் அயுக்தம். 'ஸ ஏநம் ப்ரீத: ப்ரீணாதி' (ப்ரீதியடைந்ததே3வதையே இவனை உகப்பிக்கிறது) என்று தே3வதைக்கன்றோ ப2ல ப்ரத3த்வம் ச்ருதம். கர்மரூப ஆராத4நத்தாலே ப்ரீதமான தே3வதாவிசேஷமே ப2லப்ரத3ம் என்றொரு பக்ஷம். இதுவே யுக்தமானது என்கிறார் இவ்வதி4கரணத்தில் வ்யாஸர். 'अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च' (எல்லா யஜ்ஞங்களிலும் ஆராதி4க்கப்படுபவனும் அவற்றுக்குப் பலனை அளிப்பவனும் நானன்றோ) என்றிறே மாயனன்றோதிய வாக்கு. ஔதா3ர்யமில்லாதவனுக்கு ப்ரபு4த்வம்—ஆகாச த்தாமரை போலே, ஆமை மயிர் போலே, மனிதன் கொம்பு போலே—இல்லாதது. ஆகையால் ப்ரபு4த்வம் ப2லப்ரத3த்வரூப ஔதா3ர்யமே என்றபடி. போ4க்தா — ஆராத்4யன். ப்ரபு4 — ப2லப்ரத3ன் என்றபடி. இந்த்3ராத்3யாராத4நத்தில் எப்படி ஸ்ரீமந்நாராயணன் ப2லப்ரத3னோ அப்படி ஸ்ரீமந்நாராயணாராத4நத்தில் மற்றொருவன் ப2லப்ரத3ன் என்பதில்லை என்று ஏவகாரார்த்த2ம் கண்டுகொள்வது. இங்கே

"क्रियाकलापः कर्म क्रिमपि तदपूर्वं पितृगुर-
प्रसादो वा यत्नः फलद इति रङ्गेश कुधियः ।
त्वदर्चापूर्तिः फलमपि भवत्प्रीतिजमिति
सुधीश्वराः तद्विधिमपि भवत्प्रेरणमिति ॥" [ர-ஸ்த 2-20]

[ஸ்ரீரங்கராஜரே! யாகம், தானம், தவம் முதலிய கர்மமோ அல்லது அக்கர்மத்தின் பக்தியோ, அல்லது அதனால் ஏற்

படும் ஏதோ ஓர் அபூர்வமோ, அல்லது பித்ருக்கள் தேவர்களின் அருளோ, அந்தந்தக்கர்மங்களை அநுஷ்டிப்பவனுக்குப் பலனளிக்கிறது என்று அறிவிலிகள் கூறுகின்றனர். வைதிகமுதறிஞர்களோவெனில், யாகங்கள் முதலான இஷ்டங்களும், குளம் வெட்டுதல் முதலிய பூர்த்தங்களும் உமக்குத் திருவாராதனம் என்றும், இவற்றால் உண்டாகும் பலனும் தேவரீருடைய உகப்பினால் உண்டாவது என்றும் அந்தந்தக் கர்மங்களைச் செய்யச் சொல்லும் ஶாஸ்த்ர விதிகள் தேவரீருடைய கட்டளையென்றும் கூறுகின்றனர்.] என்று ஸ்ரீபராஶரபட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் அருளியது அநுஸந்திக்கத்தக்கது. 'व्यक्तमेष महायोगी परमात्मा' (வ்யக்தமேஷ மஹாயோகீ பரமாத்மா) ரா. யு. 114-15) (மஹாயோகியான இந்த ராமன் பரமாத்மா என்பது தெளிவு) என்று, ஸகல பலப்ரதத்த்வத்தைப்பற்றி ஸ்ரீராமனைப் பரமாத்மா என்று, ராவண தர்மபத்நியான மந்தோதரியும் அறுதியிட்டாளிறே. "வீடுமுதல் முழுதுமாய்" (2-2-1) "வீடுமுதலாம்" (2-8-1) என்று பாராஶர்யனைப்போலே ஸ்ரீபராங்குஶனும் அருளிச்செய்தாரிறே.

ஆக, ஸ்ரீவேதவ்யாஸர் ப்ரஹ்மகாண்டத்தில் இவ்வளவால் (பத்துப்பாதங்களால்) பரப்ரஹ்மம் சேதநாசேதந விலக்ஷணம். நிகிலஜகத்ஹேதுககாரணம், ப்ராப்யம். ப்ராபகம் அகில பலப்ரதம் என்றறுதியிட்டாராய்த்து.

ஆக, ஸித்தோபாயோபேயாத்மகமான பர தத்வம் நிரூபிதம்

ஆக நமஶ்ஶப்தார்த்தம் நிரூபிதம் என்றபடி.

## ஸாத்யநிரூபணம்

இனி, ஆறுபாதங்களால், வ்யாஸர், ஸாத்யமான பரமாத்மோபாஸனத்தையும், ஸாத்யமான பரிபூர்ண ப்ரஹ்மாநுபவத்தையும் விவரித்தருளுகிறார்.

## கு₃ணோபஸம்ஹாரபாத₃ம்

மூன்ரும் அத்₄யாயத்தில் மூன்ரும் பாத₃ம் கு₃ணோப ஸம்ஹாரபாத₃ம் எனப்படும். அனேக ஶாகை₂களில் வைஶ்வா நராதி₃வித்₃யை ஓதப்படுகிறது. இவற்றுக்கு அபே₄த₃மா பே₄த₃மா என்ற விசாரம் இப்பாத₃த்தில் செய்யப்படுகிறது. அனேக சாக₂ாக₃தங்களான வித்₃யைகளுக்கு அபே₄த₃மாஞல் கு₃ணோபஸம்ஹாரம். பே₄த₃மாஞல் விகல்பம் என நிர்ணயிக்கப் படுகிறது. ஶாக₂ாந்தரக₃தங்களை உபயோக₃த்துக்காக ஸ்வீகரிப் பது உபஸம்ஹாரம் எனப்படும். ஆங்காங்கே உக்தங்களுக்கு ஆங்காங்கேயே உபயோக₃ம் விகல்பம் எனப்படும். வித்₃யா பே₄த₃ாபே₄த₃ங்களில் அபே₄த₃மே பாத₃ார்த்த₂ம், பே₄த₃ம் அப வாத₃மாக (விதிவிலக்காக) நிரூபிக்கப்படுகிறது எனக்கொள்ள வேணும். ஆகையாலேயே கு₃ணோபஸம்ஹாரபாத₃ம் எனப்படு கிறது இப்பாத₃ம். அனேக ஶாக₂ாக₃தங்களான வைஶ்வாநர வித்₃யாதி₃களுக்கு அபே₄த₃மும், தைத்திரீய ச₂ாந்தே₃ாக்யக₃தங் களான புருஷவித்₃யைகளுக்கு பே₄த₃மும் நிரூபிக்கப்படுகிறது. வேத்₃யம் பி₄ந்நமாஞல் வித்₃யை பி₄ந்நையாம். வேத்₃யம் அபி₄ந்நமாஞல் வித்₃யை அபி₄ந்நையாம். ஆக வேத்₃யாநு ரூபமாக வித்₃யாநியமம் என்றதாய்த்து. வேத்₃யபே₄த₃மும் கு₃ணபே₄த₃த்தாலல்லது ப்₃ரஹ்மபே₄த₃த்தாலல்ல. ஆகையாலே கு₃ணோபஸம்ஹாரபாத₃ம் எனப்படுகிறது இப்பாத₃ம்.

இப்பாத₃ம் ப்₃ரஹ்மாஜ்ஞாநபக்ஷத்தில் மிகவும் அஸங்க₃த மாகும். எங்ஙனேயெனில்:—ஶாஸ்த்ரத்துக்கு நிர்விஶேஷ வஸ்துவைத் தெரிவிப்பதிலே தாத்பர்யம் என்று சொல்லுமவர் களுக்கு கு₃ணோபஸம்ஹாரபாத₃ம் அஸங்க₃தம் மட்டுமல்ல- விருத்₃த₄முமாகும். கு₃ணங்கள் அதாத்விகங்கள். அதாத்விக கு₃ண ப்ரதிபாத₃கமான இப்பாத₃ம் ஸங்க₃தமே என்னில். ஆகையிஞலேயே அஸங்க₃தமாம். தத்வ ப்ரதிபாத₃கமான

ஶாஸ்த்ரத்துக்கு அதாத்விக கு3ணப்ரதிபாத3க பரத்வம் சொல்லுவது அயுக்தமாகும். க்ரமமுக்திக்கு உபாயமாகையால் ஸங்க3தமேயென்னில். க்ரமமுக்தியாவது யாது? ஸகு3ணப்3ரஹ்ம ப்ராப்திபூர்வகமாக நிர்கு3ணப்3ரஹ்மப்ராப்தி க்ரமமுக்தியாகும் என்ன வொண்ணாது. இப்படிச் சொல்லும் ப்ரமாணமேயில்லை. கு3ணவிஶிஷ்ட ப்3ரஹ்மோபாஸநமான த3ஹரவித்3யையினால் பரஜ்யோதி:ப்ராப்தியும், பரஜ்யோதிஸ்ஸான பரப்3ரஹ்மத்தையடைந்தவனுக்கு நிரங்குஶ ஐஶ்வர்ய ப்ராப்தியுமன்றோ ஶ்ருதி ஓதிற்று. பரஜ்யோதி:ப்ராப்திக்கு மேற்பட்ட மற்றொரு மோக்ஷமில்லையே. ஆகையால் க்ரமமுக்திநிரூபணம் அயுக்தம். ஸகு3ணோபாஸநத்தாலே நிர்கு3ணவித்3யாப்ராப்தி. நிர்கு3ண வித்3யாப்ராப்தியால் மோக்ஷப்ராப்தி, இஃதே க்ரமமுக்தியாகும் என்னவும் ஒண்ணாது. "ஆநந்தா3த3ய: ப்ரதா4நஸ்ய" (ப்ரஹ்ம ஸூத்ரம் 3-3-11) என்று பரவித்3யா ஸாமாந்யத்துக்கு ஸகு3ண விஷயகத்வத்தை ஸ்ரீவேத3வ்யாஸர் அறுதியிட்டுள்ளாராகையாலே நிர்கு3ணவித்3யை என்பதொன்றே கிடையாது. 'वेदाहमेतं पुरुषं महान्तं—तमेवं विद्वान् अमृत इह भवति' (வேதா3ஹமேதம் புருஷம் மஹாந்தம்—தமேவம் வித்3வாந் அம்ருத இஹ ப3வதி) என்று, ஸகு3ண வித்யையைப் பர ப்3ரஹ்ம ப்ராப்திக்கு அவ்யவஹிதோபாயமாக வன்றோ ஶ்ருதி ஓதிற்று. மேலும் ஸகு3ணநிர்கு3ண வித்3யைகளுக்கு விரோத4மும் உண்டாகையால், ஜந்யஜநக பா4வ கத2நமும் அயுக்தமாம். ஆகையால் க்ரமமுக்தி நிரூபணம் அஸங்க3தமாகையால், இப்பாத3மே ப்3ரஹ்மா ஜ்ஞாநபக்ஷத்தில் அஸங்க3தமாம் என்றபடி.

இப்பாத3த்தில் இருபத்தாறு அதி4கரணங்கள் உள்ளன. சில அதி4கரணங்கள் வித்3யாபே4தா3பே4த3விசாரபரங்கள். சில அதி4கரணங்கள் பரவித்3யைக்கு அநுப3ந்தி4களான அர்த்த2ங்களை விசாரிக்கின்றன. மற்றும் பல அதி4கரணங்கள் த்3ருஷ்ட்யுபாஸநபரங்கள். பத்தொன்பதாம் அதி4கரணமான லிங்க3பூ4

யஸ்த்வாதி$_4$கரணம் ஸகல பரவித்$_3$யோபாஸ்யம் ஸ்ரீமந் நாராயண
னுன தே$_3$வதாவிஶேஷம் என்றறுதியிடுமது. இப்படி இப்பா
த$_3$த்தின் ப்ரமேயமாகும். பரவித்$_3$யாஸாமாந்யத்தில் ப$_4$க$_3$வத்
ஸ்வரூபநிரூபகத$_4$ர்மங்கள் உபாஸ்யங்கள் என்று ஆநந்த$_3$ாத்
யதி$_4$கரணத்திலும், த$_4$ர்மியான பரப்$_3$ரஹ்மமான நாராயணதத்
வம் ஸகல பரவித்$_3$யோபாஸ்யம் என்று லிங்க$_3$பூ$_4$யஸ்த்வாதி$_4$
கரணத்திலும் நிரூபித்தருளுகிறுர் ஸ்ரீவேதவ்யாஸர். ஆநந்த$_3$ாத்$_3$
யதி$_4$கரணத்தில் ஸத்யத்வாதி$_3$களான ஸ்வரூபநிரூபகங்களை
அறிவித்த வ்யாஸர், ஶ்ரிய:பதித்வமான ப்ரத$_4$ாநநிரூபகத்தை
அருளிச்செய்யாதொழிவான் என் என்னில்:- அதிரஹஸ்யமா
கையாலும் ஆகலாம். அதிப்ரஸித்$_3$த$_4$மாகையாலும் ஆகலாம்.
வஸ்துத: புருஷஸூக்த லக்ஷ்மீதந்த்ராதி$_3$வசநத்தாலேயே அவ
ச$_3$தமாகையால் ப்ரமாணுந்தராபேக்ஷையில்லையிறே.

பரமாத்மஸ்வரூபநிரூபகங்களாவன — ஸத்யத்வ ஜ்ஞாந
த்வாநந்தத்வாநந்த$_3$த்வாமலத்வ ஶ்ரிய:பதித்வங்களிறே. ஸத்
யத்வமாவது—நிர்விகாரத்வம். ஜ்ஞாநத்வமாவது—ஜ்ஞாந
ஸ்வரூபத்வமும் ஜ்ஞாநகு$_3$ணகத்வமும், அநந்தத்வமாவது—
தே$_3$ஶ கால வஸ்து பரிச்சே$_2$த$_3$ராஹித்யம். க$_4$டபடாதி$_3$களுக்கு
மூன்று பரிச்சே$_2$த$_3$ங்களும் உள. ஜீவாத்மாக்களுக்குக் கால
பரிச்சே$_2$த$_3$மில்லை நித்யமாகையால்; ஆயினும். தே$_3$ஶவஸ்து
பரிச்சே$_2$த$_3$ங்கள் உள. காலம் விபு$_4$வாகையாலும் நித்யமாகை
யாலும் தே$_3$ஶகாலபரிச்சி$_2$ந்நமல்ல. ஆயினும் காலத்துக்கு
வஸ்துபரிச்சே$_2$த$_3$முண்டு. காலம் ஸர்வாந்தர்யாமியல்லவிறே.
பரமாத்மதத்வம் விபு$_4$வாகையால் தே$_3$சபரிச்சே$_2$த$_3$ரஹிதம்.
நித்யமாகையால் காலபரிச்சே$_2$த$_3$ரஹிதம். ஸர்வவஸ்து ஸாமா
நாதி$_4$கரண்யார்ஹமாய். ஸர்வாந்தர்யாமியாகையால் வஸ்து
பரிச்சே$_2$த$_3$ரஹிதம். ஆக பரமாத்மதத்வம் அநந்தம் என்ற
தாயிற்று. 'யதோ வா இமாநி' என்ற வாக்யம் காரணவாக்யம்
என்றும், 'ஸத்யம் ஜ்ஞாநம்' என்ற வாக்யம் ஶோத$_4$கவாக்யம்

என்றும் பெரியோர் கூறுவர். 'காரணத்வ ஶங்கித தோ3ஷபரி ஹாரார்த்த2ம் ஸத்யத்வாதிகள்' என்பது ஸ்ரீப4ாஷ்யஸாரம். லோகஸித்3த4ங்களான காரணவஸ்துக்களின் தோ3ஷங்கள் ஜக3த்காரணமான சேதநாசேதநவிலக்ஷணமான பரமாத்மாவுக்கு இல்லை என்றபடி. அசித்துக்குள்ள ஸ்வரூபவிகாரமும் ஸம்ஸாரி சேதநர்க்குண்டான ஸ்வபா4வ விகாரமும், முக்தர்க்குண்டான காத3ாசித்கஜ்ஞாநஸங்கோசமும், நித்யர்க்குண்டான அநீச்வரத்வாதி3களும், பரவஸ்துவுக்கு இல்லை என்றதாயித்து. 'ज्ञानत्वे ज्ञातृभावात् स्वरबहुलया स्वप्रकाशत्वतश्च' (ஜ்ஞாநத்வம் ஜ்ஞாத்ருபா4வாத் ஸ்வரப3ஹுளதயா ஸ்வப்ரகாஶத்வதஶ்ச) என்று ஜ்ஞாந ஶப்3த3ம் ஜ்ஞாநஸ்வரூபத்வ ஜ்ஞாநகு3ணகத்வ விஶிஷ்டபரமாநுப்போலே ஆநந்த3ஶப்3த3மும் ஆநந்த3ஸ்வரூபத்வ ஆநந்த3கு3ணகத்வவிசிஷ்டபரம் என்றபடி.

ஹாந்யதி4கரணம் தொடக்கமான மூன்று அதி4கரணங்கள் வித்3யைக்கு அங்க3மான சிந்தநவிஶேஷ விசாரபரங்களாகும். இவற்றுள் முதலாவதான ஹாந்யதி4கரணத்தில் ஹாநிசிந்தநமும் உபாயநசிந்தநமும் கூறப்படுகின்றன. ஹாநமாவது—கர்ம விமோசனம். உபாயநமாவது—அந்யத்ர ப்ரவேஶம். (கர்மாதி3கள் மற்றோரிடத்தில் ஸம்ப3ந்தி4ப்பது); ஹாநோபாயநாதி3 சிந்தநம் அங்க3மாயினும், ஜ்ஞாந ஸ்வரூபமாகையால் வித்3யா துல்யமாக இங்கே விசாரிக்கப்படுகிறது. ஆகையாலேயே க்ரியாஸ்வரூபங்களான அங்க3ங்களை விசாரிக்கும் நான்காம் பாத3மான அங்க3பாத3த்தில் இது விசாரிக்கப்படவில்லை. அமூர்த்தங்களான புண்ய பாபங்களுக்கு ஹாநமும் உபாயநமும் கூடுமா? மற்றொருவருடைய கர்மம் மற்றொருவருடைய ப2லத்துக்கு ஹேதுவாகுமா? என்னில்-கூடும்:—ப்3ரஹ்ம வித்3யா நிஷ்ட2னுடைய புண்யபாபங்களை நஶிப்பிக்கத் திருவுள்ளம் பற்றிய ஸர்வேஶ்வரன், வித்3யாநிஷ்ட2னிடத்தில் உள்ள ப்ரீதியாலே, வித்3யாநிஷ்ட2னுடைய அநுகூலனிடத்தில் உள்ள

வித்₃யாநிஷ்ட₂விஷயக ஸௌஹார்த₃த்துக்கும், வித்₃யாநிஷ்ட₂ ப்ரதிகூலனிடத்தில் உள்ள வித்₃யாநிஷ்ட₂ விஷயக அஸௌஹார்த்த₃துக்கும், அநுகு₃ணமாக, வித்₃வத்புண்யா புண்யப₂ல துல்ய ப₂லத்தைக் கொடுக்கிறான் என்றபடி.

ஸாம்பராயாதி₄கரணத்தில் தே₃ஹம் பிரிந்தபின்னே கர்ம க்ஷயம் என்னப்படுகிறது. தத₃தி₄க₃மாதி₄கரண (4-1-13)த்தில் தே₃ஹம் இருக்கும் காலத்தில் கர்மக்ஷயம் கூறப்படுகிறது. இவையிரண்டும் எங்ஙனே பொருந்தும் என்னில்—பொருந்தும்:— உபாஸநாரம்ப₄காலத்தில் கூறப்படும் கர்மக்ஷயமாவது 'க்ஷமிஷ்யாமி' (பொறுப்பேன்) என்ற ப₄க₃வத்ஸங்கல்பம் என்றும், தே₃ஹவியோக₃ காலத்தில் கூறப்படும் கர்மக்ஷயம் 'க்ஷாந்தம்' [பொறுத்தேன்] என்ற ப₄க₃வத்ஸங்கல்பம் என்றுமிறே ஶ்ருதப்ரகாஶிகா நிஷ்கர்ஷம். ஸாம்பராயாதி₄கர ணத்தில் தே₃ஹவியோக₃ காலத்திலேயே நிஶ்ஶேஷகர்மக்ஷயம் ஸித்₃தா₄ந்திதம். இவ்வதி₄கரணத்தில் முதலிரண்டு ஸூத்ரங் களாலே ஸித்₃தா₄ந்தம் காட்டப்பட்டது. மேல் ஒரு ஸூத்ரத் தாலே பூர்வபக்ஷாநுவாத₃ம் செய்து, மேல் ஸூத்ரத்தாலே ஸித்₃த₄ாந்தம் அருளிச்செய்கிறார் வ்யாஸர் என்பது ஸ்ரீபா₄ஷ்யஸாரம்.

'க₃தேரர்த்த₂வத்த்வம்' 'உபபந்ந:' என்னும் இவ்விரண்டு ஸூத்ரங்களும் ஸித்₃தா₄ந்தபரம் என்பது ஶாங்கர பா₄ஷ்யஸாரம். சிலவித்₃யைகளுக்கு அர்ச்சிராதி₃க₃தியுண்டு. சில வித்₃யை களுக்கு அர்ச்சிராதி₃கதி₃ இல்லை—என்றிங்ஙனே இரண்டுவித மாக விபா₄க₃ம் கொள்ளவேண்டும். இங்ஙனே கொள்ளில். ஸகு₃ணோபாஸநத்துக்கு அர்ச்சிராதி₃க₃தியும். நிர்கு₃ணப்₃ரஹ்ம வித்₃யாப₂லத்துக்கு தே₃ஶாந்தரக₃மநம் விருத்₃த₄மாகையால் நிர்கு₃ணோபாஸநத்துக்கு அர்ச்சிராதி₃க₃தியின்மையும் என்று தேறும். இதுவே உபபந்நமாகும்: இதற்கு த்₃ருஷ்டாந்தம் காட்டு கிறார். 'லோகவத்' என்று. அதாவது-க்₃ராமாந்தர ப்ராப்திக்கு

மார்க்காபேக்ஷையுண்டாயினும், ஆரோக்யப்ராப்திக்கு மார்க்காபேக்ஷை தேவையில்லையிறே. அவ்வோபாதி ஸகுணப்ரஹ்மப்ராப்திக்கு அர்ச்சிராதிகதி ஆவஶ்யகமாயினும், நிர்குணப்ரஹ்மப்ராப்திக்கு அது ஆவஶ்யகமல்ல—என்று ஶாங்கராபிப்ராயம்.

இது அஸங்கதம் (பொருந்தாது); நிர்குண ப்ரஹ்ம வித்யை அப்ராமாணிகை என்று கீழே நிரூபிதம். இங்ஙனே நிர்வாஹத்தில் ஸூத்ராக்ஷர ஸ்வாரஸ்யமும் இல்லை. ஆகையால் ஸ்ரீபாஷ்யப்ரதர்ஶித நிர்வாஹமே யுக்தமாகும். அதாவது புண்யபாபங்களில் ஏகதேஶம் தேஹவியோக காலத்தில் ஹானியடையும். ஶிஷ்டாம்ஶம் பிறகு கழியும். என்றிங்ஙனே விபாகம் கொள்ளவேண்டும். இல்லையேல் அர்ச்சிராதிகதி ஶ்ருதிக்கு அர்த்தம் இல்லையாம். தேஹவியோக காலத்திலேயே ஸர்வகர்மக்ஷயமானால், ஸூக்ஷ்மஶரீரமும் கழியும். அங்ஙனாகில் ஶரீரரஹிதனான ஆத்மாவுக்கு கமநம் அநுபபந்நமாம் என்ற பூர்வபக்ஷத்தை "கதேரர்த்தவத்த்வம்" என்ற ஸூத்ரத்தாலே அநுவதிக்கிறார் என்றபடி. 'உபபந்ந:' என்ற ஸூத்ரத்தாலே சித்தாந்தம் காட்டியருளுகிறார் ஸ்ரீவ்யாஸர். அதாவது, தேஹாத் உத்க்ராந்தி காலத்திலேயே ஸர்வகர்மக்ஷயமாம். இது உபபந்நமே, ஸர்வகர்மநாஶம் ஏற்பட்ட பிறகு, கமநாநுகுண ஸூக்ஷ்மஶரீர ஸ்திதி எங்ஙனேயென்னில், இங்ஙனேயாம். வித்யாமாஹாத்ம்யத்தாலே ஸூக்ஷ்மஶரீரஸ்திதி உபபந்நையாம். இவ்விஷயத்தில் த்ருஷ்டாந்தமிருக்கும்படி:— பயிர் வ்ருத்தியடையத் தடாகம் ஏற்பட்டபோதிலும், சாகுபடி முடிவடைந்தபிறகு ஸ்நாநபாநத்துக்காக அதே தடாகம் உபயுக்தமாம். அவ்வோபாதி நிஶ்ஶேஷ கர்மக்ஷயம் ஆனபிறகும், ஸூக்ஷ்மஶரீரஸ்திதி வித்யா மாஹாத்ம்யத்தாலே யுக்தமாம் என்றபடி. இப்படியிறே ஸ்ரீபாஷ்யகாரர் நிஷ்கர்ஷம் இருக்கும்படி.

அக்ஷரத்யதிகரணத்தில் அமலத்வம் ஸர்வ பரவித்யோ பாஸ்ய குணமாக நிரூபிக்கப்படுகிறது. அமலத்வம் நித்ய ஸூரி வ்யாவர்த்தகம் என்றபடி.

•

லிங்கபூயஸ்த்வாதிகரணத்தில் ஸகல பரவித்யோபாஸ்யம் நாராயணதத்வம் என்று அறுதியிடப்படுகிறது. பரவித்யா ப்ரகரணங்களில், அக்ஷர சிவ ஶம்பு பரப்ரஹ்ம பரஜ்யோதி: பரதத்வ பரமாத்மஶப்தங்களாலே கூறப்படும் தத்வம் நாராயணனை தேவதாவிஶேஷமே என்றதாய்த்து. இவ்விடத்திலே "आत्मैक्यं देवतैक्यं त्रिकसमधिगता तुल्यता ऐक्यं त्रयाणां अन्यत्र ऐश्वर्यं इत्याद्यनिपुणफणितीराद्रियन्ते न सन्तः। त्रय्यन्तैरेककण्ठैः तदनुगुणमनुव्यासमुख्योक्तिभिश्च श्रीमान्नारायणो नः पतिः अखिलतनुः मुक्तिदः मुक्तभोग्यः॥" (ஆத்மைக்யம் தேவதைக்யம் த்ரிக ஸமதிகதா துல்யதா ஐக்யம் த்ரயாணாம் அந்யத்ர ஐஶ்வர்யம் இத்யாத்யநிபுணபணிதீராத்ரியந்தே ந ஸந்த:। த்ரய்யந்தை: ஏக கண்டை: ததநுகுண மநு வ்யாஸ முக்யோக்திபிஶ்ச ஸ்ரீமாந் நாராயணோ ந: பதி: அகிலதநு: முக்தித: முக்த போக்ய:॥ என்ற தேசிகன் திருவாக்கும், த்ரயோதேவா: துல்யா: த்ரிதயம் இதம் அத்வைதம் அதிகம் த்ரிதாத் அஸ்மாத் தத்வம் பரமிதி விதர்க்காந் விகடயந்। விபோர் நாபீ பத்ம: விதிசிவ நிதாநம் பகவத: ததந்யத் ப்ருபங்கீ பரவதிதி ஸித்தாந்தயதி ந:॥ என்ற பட்டர் ஸ்ரீஸூக்தியும். "முதலாம் திருவுருவம் மூன்றென்பர், ஒன்றே முதலாகும் மூன்றுக்குமென்பர். முதல்வா! நிகரிலகு காருருவா நின்னகத்ததன்றே புகரிலகு தாமரையின் பூ" என்ற ஆழ்வார் திவ்யஸூக்தியும் அநுஸந்தேயங்கள். ஶப்தாதி பேதாதிகரணத்தில். ஸத்வித்யா தஹர வித்யாதிகளுக்கு பேதம் ஸமர்த்திக்கப்படுகிறது. இவ்வதிகரணத்தாலும் நிர்விஶேஷ ப்ரஹ்மவாதிநிரஸநம் செய்கிறார் ஸ்ரீவ்யாஸர் என்று ஶ்ருதப்ரகாஶிகோக்தம். விகல்பாதிகரணத்தில், ஸகலபரவித்யையை

களுக்கும் மோக்ஷரூப ஏகபலம் என்று கூறப்படுகிறது. அதாவது:—த3ண்ட3 சக்ராதிந்யாயத்தாலே (த3ண்டமும் சக்ரமும் ஜலமும் முதலியன கூடியே கடோத்பத்திக்குக் காரணம் என்பது போல்) ஸகலபரவித்3யைகளும் கூடியே மோக்ஷஹேதுவா? த்ருணாரணி மணிந்யாயத்தாலே (நெருப்புக்குப் புல்லும் அரணிக் கட்டையும் முதலியன தனித்தனியே காரணம் என்பதுபோல) ஸகலபரவித்3யைகளும் தனித்தனியே (கூடாமலே) மோக்ஷ ஹேதுவா? என்று ஸம்ஶயம் ஏற்பட. "கூடியே மோக்ஷஹேதுவாம்" என்று பூர்வபக்ஷம் சொல்லி, "தனித்தனியே மோக்ஷ ஹேதுவாம்" என்று ஸித்3தா4ந்தீகரிக்கிறார் ஸ்ரீவேத3வ்யாஸர். உபாயம் பலவிதம் என்றும், அவற்றுக்கு விகல்பம் என்றும் அறுதியிடும் ஸ்ரீவேத3வ்யாஸர், அத்3வைத ஜ்ஞாநத்தாலே மோக்ஷம் என்று வாதிக்குமவர்களுடைய ஜக3ந்மித்2யாத்வத்தையும் ஏகஸத்யத்வத்தையும் நிரஸித்தாராயிற்று.

ஸூத்ரோபஸம்ஹாரபாதம் ஸமாப்தம்.

## அங்க3பாதம்

மூன்றும் அத்4யாயத்தில் நான்காவது பாதமும் அங்க3பாத3ம் எனப்படும். ஸூத்ரோபஸம்ஹாரபாத3த்தில் வித்3யா விசாரம் செய்த ஸ்ரீவேத3வ்யாஸர். இப்பாத3த்தில் வித்3யாங்க3மான கர்மாதிகளை விசாரிக்கிறார். அவை வர்ணாஶ்ரம த4ர்மம், ஶமத3மாதிகள், பாண்டித்யம், பா3ல்யம், மௌனம் எனப் பல வகைப்படும். பூர்வமீமாம்ஸையில் விசாரிதமான ஸ்வர்க்கா3தி3 ஸாத4நமான கர்மம் இங்கே ப்3ரஹ்மவித்3யாங்க3மாக நிரூபிக்கப் படுகிறது. இவ்வாறு கூறுவது விநியோக3பே4த3ந்யாயத்தாலே யாகும். அன்றிக்கே, ஸ்வர்க்கா3தி3ஸாத4நமல்லாத த்4யா நார்ச்சநப்ரணாமாதி3கள், புராண ப்ரஸித்3த4ங்கள், இங்கே அங்கமாகக்கூறப்படுகின்றன. இங்கே ஸ்ரீவேத3வ்யாஸர் திரு

வுள்ளம் பற்றும் ப்ரதிஜ்ஞா விசேஷங்கள் நான்காகும். அவை (1) ஜ்ஞானமாத்ரம் உபாயமல்ல. அது உபாஸநாத்மகம் என்றும் (2) அது ப$_4$க்திரூபம் என்றும் (3) அது நாராயணவிஷயகம் என்றும் (4) அதுவும் கர்மாங்க$_3$கம் என்றும் ஆகும். புருஷார்த்த$_2$லாப$_4$ம் வித்$_3$யையினாலே என்பது ஸ்ரீவ்யாஸஸித்$_3$தா$_4$ந்தம், ஔபநிஷத$_3$ஶப்$_3$த$_3$ங்கள் இவ்விஷயத்தில் ப்ரமாணமாகும் என்று ஸ்ரீப$_4$ாஷ்யத்தில் மூன்று உபநிஷத்$_3$ வாக்யங்கள் உதா$_3$ஹரிக்கப்பட்டுள்ளன. "ப்$_3$ரஹ்மவித$_3$ாப்நோதி பரம்" என்ற முதல் வாக்யத்திலே, ப்$_3$ரஹ்மவித்$_3$யையினால் புருஷார்த்த$_2$ ப்ராப்தி சொல்லப்பட்டது. 'வேதாऽஹம்' என்ற இரண்டாவது வாக்யத்தில், ப்ரதிப$_3$ந்த$_4$கநிவ்ருத்தி கூறப்பட்டுள்ளது. ப்$_3$ரஹ்மத்துக்கு தி$_3$வ்யமங்க$_3$ள விக்$_3$ரஹயோகமும் உபாயாந்தரநிஷேத$_4$மும் அவ்வாக்யத்திலேயே கூறப்பட்டுள்ளது. 'யதா$_2$ நத்$_3$ய' என்ற மூன்றாவது வாக்யத்தில், வித்$_3$யையினால் 'ப்ராப்யலாப$_4$ம்' 'ப்ரதிப$_3$ந்த$_4$க நிவ்ருத்தி' என்ற இரண்டர்த்த$_2$மும் கூறப்பட்டுள்ளது. இப்பாத$_3$த்திலே பதினைந்து அதி$_4$கரணங்கள், அவற்றில் முதலதி$_4$கரணத்தில் முதல் ஸூத்ரத்தாலே, வித்$_3$யையினாலே ப்ராப்யலாப$_4$ம் என்று ஸித்$_3$தா$_4$ந்தம் காட்டி, மேலே ஆறு ஸூத்ரங்களாலே பூர்வபக்ஷம் காட்டி, மேலே பல ஸூத்ரங்களால் ஸித்$_3$தா$_4$ந்தம் கூறுகிறார் வ்யாஸர். ஜைமினி மஹர்ஷி பூர்வபக்ஷீ என்றும் வ்யாஸர் ஸித்$_3$தா$_4$ந்தீ என்றும் ஸூத்ரத்திலே ஸ்பஷ்டம். ஸ்ரீவேத$_3$வ்யாஸருடைய சிஷ்யராய் பரப்ரஹ்மாங்கீ$_3$காரம் செய்திருக்குமவர் ஜைமினியாவார். இவ்விஷயம் 'ஸரக்ஷாத$_3$ப்யவிரோத$_4$ம் ஜைமிநி:' 'பரம் ஜைமிநிர் முக்$_2$யத்வாத்' இத்யாதி$_3$ ஸூத்ரங்களிலே ஸ்பஷ்டம். அவர் வ்யாஸமத விபரீதமாகப் பூர்வபக்ஷியாவரோ என்னில்:—வ்யாஸரை ஆச்ரயிப்பதற்கு முன்னமே உபநிஷத்துக்களுக்கு அவர் செய்திருக்கும் நிர்வாஹம் இங்கே பூர்வபக்ஷமாயிருக்கத்தகும். இப்படியாகில் 'அத்யயநமாத்ரவத:'

என்ற ஸூத்ரமும், 'அதிகோபதேசாத்து' என்ற ஸூத்ரமும் ஸுஸங்கதமாகும். ஸர்வாபேக்ஷாதிகரணத்தில். வித்யைக்குக் கர்மம் அங்கம் என்னும் விஷயத்தில். 'அச்வவத்' என்று த்ருஷ்டாந்தம் காட்டப்படுகிறது. 'அஸிநாஜிகாம்ஸதி' என்னுமிடத்தில், கத்தி ஹநநஸாதநமல்லது ஹநநேச்சா ஸாதநமல்ல. அவ்வோபாதி 'யஜ்ஞேந விவிதிஷந்தி' என்ற ச்ருதியில் கூறப்பட்ட யஜ்ஞாதிகள் வேதநஸாதநமல்லது. வேதநேச்சா ஸாதநம் அல்ல என்று ஸித்தாந்திதம். மேலும் ஜ்ஞாநேச்சைக்குக் கர்மம் காரணம் என்னவும் ஒண்ணாது. கர்மம் இச்சையை உண்டாக்காதிறே. விஷயவைலக்ஷண்ய ஜ்ஞாநத்தைப் பிறப்பிக்கும் என்னவும் ஒண்ணாது. ஜ்ஞாநத்துக் காகக் கர்மம் என்னுமது பரஸமயிகளுக்கு அபஸித்தாந்தமிறே. இச்சாஸாதநம் கர்மம் என்று கூறும் ஸ்வவசநத்துக்கு விருத்தமும் ஆகும். கமநஸாதநபூதமான குதிரை பரிகரங்களை அபேக்ஷிக்குமாப்போலே, மோக்ஷஸாதநமான ப்ரஹ்ம வித்யையும் கர்மங்களை அபேக்ஷித்திருக்கும் என்றபடி. பலோத்பத்தியிலே கர்மாபேக்ஷையின்றிக்கேயொழிந்தாலும். ப்ரஹ்ம வித்யோத்பத்தியிலே கர்மாபேக்ஷையுண்டு என்பதனை 'ஸர்வா பேக்ஷா' என்று ஸூத்ரகாரர் கூறியுள்ளார். ஆகையால் ஸர்வா பேக்ஷையை ஸர்வோபேக்ஷையாகக்கூறும் பரவ்யாக்யாநம் அஸங்கதமாம்.

முன்னமே யஜ்ஞாதிகளையும் சமாதிகளையும் வித்யாங்கமாக நிரூபித்த வ்யாஸர் ஸஹகார்யந்தரவித்யதிகரணத்தில் பாண்டித்யபால்யமௌநங்களை வித்யாங்கமாக நிரூபிக்கிறார். பாண்டித்யாதித்ரயம் வித்யாங்கமாக விதேயம் என்பர் பெரியோர். பால்யம் மட்டும் விதேயம் என்று பூர்வபக்ஷியின் அபிப்ராயம். மூன்றும் விதேயம் என்பது ஸித்தாந்தம். ச்ரவண மநந லப்த ஜ்ஞாந விலக்ஷணம் ஜ்ஞாநம் பாண்டித்யமாம்.

வேதா₃ந்திகள் தங்கள் பெருமைகளை மறைத்துக்கொண்டிருப்பர். இதுவே பா₃ல்யம். இப்படியிருப்பதும் உலகத்தார் செய்யும் ஸம்மாநத்தை இல்லைசெய்கைக்காகவாகும். பரமஜ்ஞாநிகளுக்கு ஸம்மாநம் த்யாஜ்யம். 'அஸம்மாநாத் தபோவ்ருத்₃தி₄: ஸம்மாநாத்து தப:க்ஷய:| அர்ச்சித: பூஜித: விப்ர: து₃க்₃தா₄ கௌ₃ரிவ க₃ச்ச₂தி||' [உலகர் பழிக்கில் தவம் வளரும்; புகழில் தவம் தேயும்: புகழ்ந்து பூஜிக்கப்பட்ட அந்தணன் பால் கறக்கப் பெற்ற பசுமாட்டைப்போல் செல்கிறான்.] என்றிறே ஸ்ம்ருதி வசநம். மௌநமாவது ஸ்வாப₄ாச்ரய சிந்தநமாகும். இப்படி வித்₃யாங்க₃ங்களை விசாரித்த வ்யாஸர். வித்₃யாநிஷ்பத்திக்குத் தடையைத் தெரிவிக்கிறார் அந்திமாதி₄கரணத்தாலே. ப்ரதிப₃ந்த₄கா பா₄வமும் ஸாமக்₃ர்யந்தர்பூ₄தமாகையாலே. பா₄க₃வதாப சாரமாகிற ப்ரதிப₃ந்த₄கம் இல்லையாகில் வித்₃யாநிஷ்பத்தியாம் என்றபடி. 'அஸ்தி மத்ஸ்ய: திமிர் நாம ஶததயோஜநமாயத: திமிங்கி₃லகி₃லோऽப்யஸ்தி தத்₃கி₃லோऽப்யஸ்தி ஸாக₃ரே||' என்கிற ந்யாயத்தாலே ப்₃ரஹ்மவித்துகளுக்கும் பா₄க₃வதாபசாரமான தடை வித்₃யாநிஷ்பத்தியை நிரோதி₄க்கும் என்றபடி. 'நாமரூபங்களையுடையராய், பா₄க₃வத விரோத₄ம் பண்ணிப் போருமவர்கள் த₃க்₃த₄படம் போலே. மடிப்(மடித்த)புடவை வெந்தால் உண்டையும் பாவும் ஒத்துக்கிடக்கும். காற்றடித்தவாறே பறந்துபோம். 'ஈச்வரன் அவதரித்துப்பண்ணின ஆனைத்தொழில்களெல்லாம் பா₄க₃வதாபசாரம் பொறாமை' என்று ஜீயர் அருளிச்செய்வர். 'அவமாநக்ரியா'. பா₄க₃வதாபசாரந்தான் அநேக வித₄ம். ஜ்ஞாநாநுஷ்ட₂ானங்களையொழிந்தாலும் பேற்றுக்கு அவர்கள் பக்கல் ஸம்ப₃ந்த₄மே அமைகிறாப் போலே அவையுண்டானாலும் இழவுக்கு அவர்கள் பக்கல் அபசாரமே அமையும்' இத்யாதி₃ ஸ்ரீவசநபூ₄ஷண ஸூத்ரங்கள் இங்கே அநுஸந்தே₄யங்களாம். வாக்யார்த்த₂ ஜ்ஞாநமாத்ரம் உபாயம் என்பர் ம்ருஷாவாதி₃கள். கர்மஜ்ஞாநஸமுச்சயம் என்பர் யாத₃வர்கள். கர்மப்ராத₄ாந்யவாதி₃கள் நிரீச்வர

மீமாம்ஸகர்கள். ஜீவன் நித்யமுக்தனாகையால் 'முக்தி— ஸாத்$_4$யையல்ல என்பர் ஸாங்க்$_2$யர். இந்த நான்கு பக்ஷங்களையும் க$_2$ண்டி$_3$த்து, கர்மாங்க$_3$மான உபாஸநம் மோக்ஷ ஹேது என்று இவ்வளவால் ஸ்ரீவேத$_3$வ்யாஸர் ஸித்$_3$தா$_4$ந்தீகரித்தாராயிற்று.

*அங்க$_3$பாத$_3$ம் ஸமாப்தம்*

*மூன்றாம் அத்$_4$யாயம் நிறைவுற்றது.*

## ப$_2$லாத்$_4$யாயம்

ஶாரீரகமீமாம்ஸா ஶாஸ்த்ரத்தில் நான்காம் அத்$_4$யாயம் ப$_2$லாத்$_4$யாயம் எனப்படும். ப்$_3$ரஹ்மவித்$_3$யாப$_2$லம் இவ்வத்$_4$யாயத்திலே பரக்க நிரூபிக்கப்படுகிறது நான்கு பாத$_3$ங்களால். இதிறே மூலமந்த்ரத்தில் த்ருதீயபத$_3$மான 'நாராயணாய' என்ற பத$_3$த்தின் அர்த்த$_2$ம்.

இவ்வத்$_4$யாயத்தில் கர்மநிவ்ருத்தி என்ற ப$_2$லத்தை முதல் பாத$_3$த்திலும், ஸ்தூ$_2$லதே$_3$ஹநிவ்ருத்தி என்ற ப$_2$லத்தை இரண்டாம் பாத$_3$த்திலும், ஸூக்ஷ்மதே$_3$ஹநிவ்ருத்தி என்ற ப$_2$லத்தை மூன்றாம் பாத$_3$த்திலும், பரஸம்ப்ராப்தி ஸ்வஸ்வரூபாவிர்பா$_4$வம் அபுநராவ்ருத்தி இத்யாதி$_3$யான ப$_2$லத்தை நான்காம் பாத$_3$த்திலும் ஸ்ரீவேத$_3$வ்யாஸர் நிரூபித்துள்ளார்.

இவ்வத்$_4$யாயத்தில் நான்கு பாத$_3$ங்களுக்கும் முறையே ஆவ்ருத்திபாத$_3$ம் உத்க்ராந்திபாத$_3$ம் க$_3$திபாதம் ப்ராப்திபாத$_3$ம் என்று வ்யவஹாரம்.

ப$_2$லாத்$_4$யாயத்தில் முதல் பாத$_3$த்தில் பதினொரு அதி$_4$கரணங்கள் உள. முதற்கண் ஆறு அதி$_4$கரணங்களாலே வித்$_3$யாஸ்வரூபவிசாரம்செய்து, மேல் ஐந்து அதி$_4$கரணங்களாலே வித்$_3$யாப$_2$லவிசாரம் செய்கிறார்.

முதல்முன்னமே வித்3யாஸ்வருபவிசாரம் ஸங்க3தமோ என்னில்:—அதாவது ஸாத4நபூ4த வித்3யாவிஶேஷத்தை ஸாத4நாத்4யாயத்தில் விசாரியாதே, ப2லாத்4யாயத்தில் விசாரிப்பது யுக்தமோ என்னில் என்றபடி. இதற்குப் பரிஹாரம் பலவிதமாகக் கூறப்படுகிறது. உபாஸநமும் கர்மயோக3த்துககு ஸாத்4யமாகையாலே ஸாத்யபரமான இவ்வத்4யாயத்தில் உபாஸந விசாரம் யுக்தமே. ப4க3வத்3ப4க்தியே ப2லமாகையாலே ப2லாத்4யாயத்தில் விசாரிக்க ப்ராப்தமே. ஆழ்வாரும், 'புல்கு பற்றற்றே' என்று, ப4க்தியை அங்க3நாபரிஷ்வங்க3ம்போலே ஸ்வயம் ப்ரயோஜநமாகவன்றோ அருளிச்செய்தார்.

'ஆவ்ருத்தி: அஸக்ருத் உபதே3ஶாத்' (4-1-1) என்று ஸூத்ரகாரராலே மோக்ஷஸாத4நமான ஜ்ஞாநம் அஸக்ருத் ஆவ்ருத்தம் (புந: புந: சிந்தநம்) என்றருளிச்செய்யப்பட்டதாயினும், ஸூத்ரகாரருடைய திருவுள்ளத்தை ஆராய்ந்தால், மேன்மேலென எவ்வளவு விசேஷங்கள் ச்ருதங்களோ, அவ்வளவு விஶேஷங்களையும் ஸாமாந்ய விஶேஷந்யாயத்தாலே கொளல் வேண்டும் எனத் தேறுகிறது. (1) 'ப்3ரஹ்மவித3ாப்நோதிபரம்' என்ற ஶ்ருதி 'வேத3நம் ஸ்ம்ருதி ரூபம்' என்றும். 'ஆத்மாநமேவ லோகம் உபாஸீத' என்ற ச்ருதி 'அது ஸ்ம்ருதி ஸந்ததி ரூபம்' என்றும் 'த்4ருவா ஸ்ம்ருதி: நிதி3த்4யாஸிதவ்ய:' என்ற ச்ருதி. 'அது தைலதா4ரைபோல அவிச்சி2ந்நஸ்ம்ருதிரூபம்' என்றும். நிசாய்ய தம் என்ற ச்ருதி. 'அது ஸாக்ஷாத்காரரூபம்' என்றும் 'நாயமாத்மா' என்ற ச்ருதி, 'அது ப்ரீதி ரூபாபந்நம்' என்றும் கூறுகிறது. 'ப4க்த்யா த்வநந்யயா ஶக்ய:' என்ற ஸ்ம்ருதி இவ்வர்த்த2த்துக்கு ஸம்வாதி3 ப்ரமாணமாகும். ஸ்ரீபராஶரப4க3வானும் 'ப்ராயஶ்சித்தாந்யசேஷாணி தப:கர்மாத்மகாநி வை. யாநி தேஷாம் அஶேஷாணாம் க்ருஷ்ணாநுஸ்மரணம் பரம்' [தவமாகவும் கர்மமாகவுமுள்ள ப்ராயச்சித்தங்கள் அனைத்

திலும், கண்ணனை நினைப்பது மேலான ப்ராயச்சித்தம்] என்றருளிச்செய்தார். ப்ராயச்சித்தங்கள் எல்லாவற்றுக்கும் ப்ரதிநிதி₄ ப₄க₃வத்₃ப₄க்தி என்று ஓர் நிர்வாஹம். ஸகலப்ராயச் சித்தங்களுக்கும் ப₄க₃வத்₃ப₄க்தி ஸஹகாரிகாரணமாகும் என்று மற்றோர் நிர்வாஹம். இப்படி ஸ்ரீபராஶரர் அருளிச்செய்ய. ஸ்ரீபாராஶர்யரான வ்யாஸர் ப₄க₃வத்₃ப₄க்தியே ப்ராயச்சித்தம் ஆகும் என்றருளிச்செய்கிறார். 'க்ருஷ்ணாநுஸ்மரணம்' என்ற விடத்தில் 'அநுஸ்மரண' ஶப்₃த₃த்துக்கு. 'அநுஸ்மரணம்— அநு: நிஹீநே. ஶேஷத்வாநுஸந்த₄ாநம்' என்று ஸ்ரீவிஷ்ணு சித்தரான எங்களாழ்வான் வ்யாக்₂யாநம் அருளிச்செய்தார்.

இப்பாத₃த்தில் இரண்டாவது அதி₄கரணம் ஆத்மத்வோ பாஸநாதி₄கரணம். இவ்வதி₄கரணத்தில் ப்₃ரஹ்மத்தை உபா ஸிக்கவேண்டிய முறை கூறப்படுகிறது. 'ப்₃ரஹ்மம் நானே' என உபாஸிக்கவேண்டும் எனப்படுகிறது. இவ்விடத்தில் ஓர் ஶங்கை எழும்—அதாவது—கீழ்மூன்று அத்₃யாயங்களாலே ஜீவபரபே₄த₃மே ஸித்₃த₄ாந்திதம். ஜிஜ்ஞாஸ்யமாய், ஜக₃த் காரணமாய் ப்ரப₃லப்ரமாணக₃ம்யமாய். ஸகலபரவித்₃யோ பாஸ்யமாயிறே ப்₃ரஹ்மம் நிரூபிதம். தன்னுடைய ஶரீரபூ₃தனான உபாஸகனான ஜீவாத்மாத்மாவைக்காட்டிலும் உபாஸ்யனான பரமாத்மா, இருளைக் காட்டிலும் தேஜஸ்ஸுபோலே, பாபத்தைக் காட்டிலும் புண்யம்போலே, சரீரத்தைக்காட்டிலும ஆத்மா போலே. ஒளியைக்காட்டிலும் ரத்நம்போலே. க₄டத்வாதி₃ஜாதி யைக்காட்டிலும் க₄டாதி₃ வ்யக்திபோலே, அத்யந்தபி₄ந்நனிறே. ஆக ஆத்மத்வோபாஸநம் என்பது பொருந்துமா என்னில் என்றபடி, இங்ஙனேயிறே பரிஹாரம். இங்கே அப்₃ரஹ்மத்தை ப்₃ரஹ்மமாக உபாஸிப்பது அர்த்த₂மல்ல. த்₃ருஷ்ட்யுபா ஸநத்துக்கு மோக்ஷம் ப₂லமாகாதிறே. ஜீவபரர்களுக்கு ஸ்வரூபைக்யமே சொல்லப்படுகிறது என்னவும் ஒண்ணாது.

ஜீவபரஐக்யஜ்ஞானம் ப்4ராந்தியாகையால் மோக்ஷஹேதுவாகாது ஆகையால் இவையிரண்டும் ஆத்மத்வோபாஸநம் அல்ல— உபாஸகன் தனக்கு ஆத்மாவாக (அந்தராத்மாவாக) உபாஸிப்பதே ஆத்மத்வோபாஸநம் ஆகும். இஃது கீழே உக்தமான ஜீவபரஸ்வரூபபே4த3த்துக்கு அவிருத்3த4மிறே. இஃதே அஹம்க்3ரஹ உபாஸநம் எனப்படுகிறது. தே3ஹவாசியான தே3வாதி3 ஶப்3த3ம் தே3ஹாதி4ஷ்டாதாவான ஆத்மாவை முக்2யமாக வசிக்கும். அவ்வோபாதி, ஜீவவாசியான அஹம்ஶப்3த3ம் தத3ாத்மாவான பரமாத்மாவினிடத்தில் முக்2யம் என்பது ஆக்ருத்யதி4கரணந்யாய ஸித்3த4மிறே. இங்ஙனேயநுஸந்தா4நம் செய்வதின் ப்ரயோஜநமாவது பரப்3ரஹ்மத்துக்குத் தான் அத்யந்தபரதந்த்ரன் என்ற ஜ்ஞாநலாப4மேயாகும்.

"அஹங்க்3ரஹோபாஸநம் ஜீவபர அத்3வைதஜ்ஞாநம்" என்பர் ம்ருஷாவாதி3கள். அது அயுக்தம். அத்3வைத ஶப்3த3த்துக்கு த்3வைதவிரோதி4 த்3வைதாந்யம் த்3வைதாபா4வம் என்று எப்படி அர்த்த2ம் கூறினாலும் த்3வைதம் ஸித்3தி4த்தே தீரும். த்3வைதமில்லாது போனால், அத்3வைதம் இல்லை என்பர் ஶாஸ்த்ரகாரர்கள். வேதா3ர்த்த2நிர்ணாயகங்களான ப்3ரஹ்ம ஸூத்ரங்கள் ஜீவப்3ரஹ்ம ஸ்வரூபபே4த3த்தையே தெரிவிக்கின்றன. ஜீவப்3ரஹ்மைக்ய ப்ரதிபாத3கஸூத்ரம் ஒன்றுகூட இல்லை. அத்3வைதிகளும்கூட 'ஶாஸ்த்ர த்3ருஷ்ட்யா' 'ஆத்மேதி து' 'அவிபா4கே3ந' என்ற ஸூத்ரத்ரயத்தையே ஜீவபர அபே4த3 ப்ரதிபாத3கமாகக் கருதுகின்றனர். அந்த ஸூத்ரத்ரயமும் ஜீவபரபே4த3த்தையே ப்ரதிபாதி3க்கின்றன என்பது பே4த3வாதி3களின் கொள்கை. 'ஶாஸ்த்ரத்3ருஷ்ட்யா' என்ற ஸூத்ர வ்யாக்2யாநமான 'ப்ரதிபாத்3யம் து ஶாஸ்த்ரார்த்த2ம் ஆத்மைகத்வமேவ த3ர்ஶயதி ஶாஸ்த்ரத்3ருஷ்ட்யா இதி' என்ற ஶாங்கரபா4ஷ்யத்தையும், 'ஜீவப்3ரஹ்மணோ: ஐக்யம் ந க்வாபி

ஸூத்ரகார: முக2ந: வத3தி. கிந்து ஸர்வத்ர பே4த3மேவ, அத: நைக்யம் இஷ்டம். தத்ராஹ 'ப்ரதிபாத்3யம் த்விதி' என்ற ஆநந்த3கி3ரி டீகையையும், "ஸூத்ரேஷு அபே4த3: நோக்த; இதி ப்4ராந்திம் நிவாரயதி ப்ரதிபாத்3யம்த்விதி" என்ற ரத்ந ப்ரப4ாவாக்யத்தையும் காண்போர்க்கு இஃது ஸ்பு2டமிறே. இந்த ஸூத்ரத்ரயத்திலும் ஸ்ரீவேத3வ்யாஸர் ஶரீராத்மபா4வத்தாலே வந்த ஜீவபரதாத3ாத்ம்யத்தையே ஆக்ருதிந்யாயத்தாலே திருவுள்ளம் பற்றுகிறுர் என்று கொள்ளும்போது பே4த3ஶ்ருதிக்கும், அபே4த3ஶ்ருதிக்கும். பே4தா3பே4த3ஶ்ருதிக்கும் விரோத4ம் இன்றிகக்கே ஸர்வஸாமஞ்ஜஸ்யம் கூடும். 'இதி ஸர்வம் ஸமஞ்ஜஸம்' என்றிறே ஸ்ரீப4ாஷ்யஸமாப்தி. இப்படி வித்3யா ஸ்வரூபவிரோத4நம் செய்து, ஸ்ரீவேதவ்யாஸர், 'தத3தி4க3மாதி4 கரணம்' தொடக்கமாக ஐந்து அதி4கரணங்களால் வித்3யா ப2லத்தை நிரூபிககிறுர் என்பது ஸ்ரீ ப4ாஷ்யஸாரம்.

'தத3தி4க3மே'—ஸாக்ஷாத்காரத3ஶாபந்நப்3ரஹ்ம வித3யாப் ராப்தி ஏற்படும்போது, 'உத்தர பூர்வாக4யோ:'- மேலில் பாபங்களுக்கும், கழிந்த பாபங்களுக்கும், 'அஶ்லேஷ விநாஶௌ'— ஒட்டாமையும் அழிவும் என்று ஸூத்ரார்த்த2ம். 'நாபு4க்தம் க்ஷீயதே கர்ம' என்ற வசநம் கர்மங்களினுடைய ப2லஜநந ஶக்தி ப2லாநுப4வபர்யந்தம் நிலே நிற்கும் என்ற அர்த்த2த்தைக் காட்டுகிறது. ப்3ரஹ்மவித்3யையினுல் பூர்வோத்தரபாபங்களுககு அஶ்லேஷவிநாஶங்களும் ஶாஸ்த்ர ஸித்3த4ங்கள். இவ்வசநத்துக்குக் கருத்தாவது—கர்மங்களினுடைய ப2லஜநந ஶக்தியை ப்3ரஹ்மவித்3யை அழிக்கும். ப்3ரஹ்மவித்3யை கர்மங்களுக்கு ப2லஜநந ஶக்தியே உண்டாகாமல் தடுத்துவிடும் என்று கருத்தாகும். 'அக்3நி கொளுத்துகிறது' என்ற வசநத்துக்கும், 'ஜலம் அதனே ஶாந்தமாக்குகிறது' என்ற வசநத்துக்கும் விரோத4ம் இல்லாதாப்போலே, இங்கும் கொள்ள ப்ராப்தம், ஆழ்வாரும் 'மாதவனென்றென்று ஓதவல்லீரேல் தீதொன்றும் அடையா ஏதம் சாராவே' (10-5-7) என்றருளிச்செய்தாரிறே.

ப்₃ரஹ்மவித்₃யாநிஷ்ட₂னுடைய கர்மங்களுக்கு நான்கு அவஸ்த₂ாவிஶேஷங்கள் ஶ்ருதி ஸித்₃த₄ங்கள். அவையாவன— விநாஶம், அஶ்லேஷம், தூநநம், உபாயநம் என்பவை. க்ரியா ஸாமாந்யம் அழிவடைவதை நாம் ப்ரத்யக்ஷமாகக் காண்கிறோம். ஆகையாலே, விநாஶ அஶ்லேஷ தூ₄நந ஸங்க்ரமணங்களை கர்மங்களான க்ரியைகளுக்குக் கூறாமல் க்ரியா ஶக்திக்குக் கூறுவது பொருந்தும். அந்த ஶக்தியும் ப₄க₃வத் ப்ரீத்யப்ரீதிரூபையாம். ஆக, வித்₃யை—பூர்வபாபநாஶத்திலும், உத்தர பாபாஶ்லேஷத்திலும், வித்₃யாநிஷ்ட₂னுடைய அநுகூலப்ரதி கூலாதி₄காரிகளிடத்தில் ஸஜாதீயாத்₃ருஷ்ட ஜநநத்திலும் ஸமர்த்தை₂ என்று தேறியது. முமுக்ஷுக்களுக்கு பாபம்போல புண்யமும் மோக்ஷவிரோதி₄யாகையால், புண்யங்களுக்கும் அஶ்லேஷவிநாஶங்கள் என்பதனை வ்யாஸர் 'இதராதி₄கரணத்தில் ஸ்த₂ாபிக்கிறார். 'காராக₃ாரோபருத்₃தே₄ நிக₃ல யுக₃லத: ஸார்வபௌ₄ளமஸ்ய ப்₄ருத்யே ஹைமம் கார்ஷ்ணாயஸம் ச ப்ரஸத₃ந ஸமயே ப₄ஞ்ஜநீயம் ஸஹைவ' என்று தேசிகன் அதி₄கரண ஸாராவளியிலே, புண்யம் பொன்விலங்கு, பாபம் இருப்பு விலங்கு. இரண்டுமே இஷ்டவிரோதி₄—கழிக்கப்பட வேண்டியவையே என நிரூபித்துள்ளார். 'உத்தரபூர்வாக₄யோ:' என்ற (4-1-13) ஸூத்ரம் பாபபரம், 'இதரஸ்யாபி' (4-1-14) என்ற ஸூத்ரம் புண்யபரம், 'அநாரப்₃த₄கார்யே' (4-1-15) என்ற ஸூத்ரம் புண்யபாபபரம் என்றும் ஸ்ரீபாஷ்யகாரர் திருவுள்ளமாகும். உபாஸகன் ப்ராரப்₃த₄கர்மங்களின் ப₂லத்தை அநுப₄வித்தேதீரவேணும். பிறகே இஷ்டப்ராப்தியாகும். ஆழ்வார் 'ஒடுங்க அவன் கண் ஒடுங்கலும் எல்லாம் விடும்' என்றருளிச் செய்தார். 'ஒடுங்க அவன் கண்'—ப்ரகாரபூ₄தரான நீங்கள் ப்ரகாரியான அவன் பக்கலிலே சென்றுசேர. 'ஒடுங்கலும் எல்லாம் விடும்' ப்ராப்தத்தைச்செய்யவே அப்ராப்தம் எல்லாம் விடும். ஸ்வரூபாநுரூபத்தைச்செய்யவே ஸ்வரூபவிரோதி₄கள் அடங்க விட்டுப்போம். 'ஒடுங்க' என்று வித்₃யையும், 'விடும்' என்று வித்₃யாப₂லமும் கூறப்பட்டதிறே.

ஆவ்ருத்திபாத₃ம் முற்றிற்று.

## உ த் க் ரா ந் தி பா த₃ ம்

கீழ்ப்பாத₃த்திலே, ப்₃ரஹ்ம வித்₃யா நிஷ்ட₂னுக்கு தே₃ஹம் இருக்கும் காலத்தில், வித்₃யாமாஹாத்ம்யத்தாலே விளையும் ப₂லம் கூறப்பட்டது. அதாவது—வித்₃யாரம்ப₄த்துக்கு முன்னமே அநாதி₃காலமாக இவனால் செய்யப்பட்ட, ப்ராரப்₃த₄பி₄ந்நங்களான புண்யபாபங்களுக்கு நிஶ்ஶேஷவிநாஶம் ஆகும். நெருப்புப்பட்ட பஞ்சுபோல நசிக்கும் என்றபடி. வித்₃யாரம்ப₄த்துக்குமேல் செய்யப்படுகிற ப்ராமாதிக₃ங்களான து₃ஷ்கர்மங்களுக்கு ப₂லாஶ்லேஷம் ஆகும். தாமரையிலைத்தண்ணீர் போலே ஒட்டாமை என்றபடி. அவித்₃யாஸ்த₂ாநீயையான தாடகை அழிவுபட அவித்₃யாகார்ய கர்மஸ்த₂ாநீயரான மாரீசஸுப₃ாஹுக்களிலே ஒருவனான ஸுப₃ாஹுவுக்கு நாஶமும், மற்றொருவனான மாரீசனுக்கு அஶ்லேஷமும் இறே வேதோ₃பப்₃ரும்ஹணமான ஸ்ரீராமாயணத்திலே உபப்₃ரும்ஹிதம். வித்₃யா நிஷ்ட₂னுடைய புண்யம் தத₃நுகூலனிடத்தும். பாபம் தத்ப்ரதிகூலனிடத்தும் ஸங்க்ரமிக்கும். இப்படியிறே வித்₃யாமாஹாத்ம்யம். புண்யபாபங்களுக்கு நாசமாவது—இவற்றின் ப₂லனை இவனுக்குத் தருவதில்லை என்ற ப₄க₃வத் ஸங்கல்பம். புண்யாபுண்ய ஸங்க்ரமணமாவது—இவற்றின் ப₂லனை மற்றொருவரிடத்தில் கொடுப்பதற்கநுகு₃ணமான ப₄க₄வத்ஸங்கல்பம்.

இனி நான்காம் அத்₄யாயத்தில் இரண்டாவதான உத்க்ராந்தி பாத₃த்தின் அர்த்த₂ங்களை அநுப₄விப்போம். இப்பா₃தத்திலே ஸ்தூ₂லதே₃ஹநிவ்ருத்தி வித்₃யாப₂லமாக நிரூபிக்கப்படுகிறது.

இரண்டாவது அத்₄யாயத்தில் ஜீவதத்வம் நித்யமாய், ஜ்ஞாநஸ்வரூபமாய் ஜ்ஞாநகு₃ணகமாய், அணுவாய், ப₄க₃வத₃ம்ஶமாய் நிரூபிதம். ஜாக்₃ரத₃ாத்₃யவஸ்தை₂களில் ஸம்ஸாரி ஜீவன் படும்பாடு நிரூபிக்கப்பட்டது மூன்றும் அத்₄யாயத்தில்,

ஸம்ஸாரிஜீவாத்மா வித்$_3$யாநிஷ்ட$_2$னுனல், அவனுக்கு ஏற்படும் வித்$_3$யாப$_2$லம் நிரூபிதம் கீழே. இனி வித்$_3$வானுக்கும் மரணம் உண்டு என்று நிரூபிக்கப்படுகிறது. ஜீவனுடைய ஜாக்$_3$ரத$_3$ாத்$_3$யவஸ்தை$_2$களை மூன்ரும் அத்$_1$யாயத்தில் நிரூபித்த ஸ்ரீவேத$_3$வ்யாஸர், அவனுடைய மரணத்தையும் அங்கே நிரூபியாதே. ப$_2$லாத்$_4$யாயத்தில் நிரூபிப்பானென்? என்னில்:-ப்$_3$ரஹ்மவித்துக்களுக்கு மரணம் ஸுக$_2$ரூபமாகையாலும், ப்$_3$ரஹ்மவித்துக்கள் மஹாநுபா$_4$வர்களாகையால், அவர்களுக்கு மரணமே இல்லை என்ற ப்$_4$ராந்தியைப் போக்குகை ப்ரயோஜநம் ஆகையாலும், மரணசிந்தை செய்கிருர் இங்கே ஸ்ரீவேத$_3$வ்யாஸர். ப்ராரப்$_3$த$_4$ாவஸாநத்தில் ப்$_3$ரஹ்மவித்$_3$யாநிஷ்ட$_2$னுன உபாஸகனுக்கு மரணம் என்று நிரூபிக்கிருர்.

இந்த உத்க்ராந்திபாத$_3$ம் ஜீவந்முக்திவாதி$_3$களான ஸாங்க்$_1$யர்க்கும் ம்ருஷாவாதி$_3$களுக்கும் அஸங்க$_3$தமாகும்:— எங்ஙனேயென்னில்:- ஜீவந்முக்தனுவான்—ஜீவித்துக்கொண்டே முக்தனுனவனிறே. இது 'என்னுடைய தாயார் மலடி' என்ருப்போலே வ்யாஹதபா$_4$ஷணமாகும். 'ஜீவித்துக்கொண்டு' என்று ஸம்ஸார ஸம்ப$_3$ந்த$_4$மும், 'முக்தன்' என்று ஸம்ஸார நிவ்ருத்தியும் ஏககாலத்திலே கூறுவது அஸங்க$_3$தமிறே. ஜீவந்முக்தர்களாகக் கருதப்படுவர்களுக்கு தே$_3$ஹாநுப$_3$ந்தி$_4$யான பசி, தாபம், கோபம் இவற்ருல் விளையும் து$_3$க்க$_2$ம் இவற்றைக் காண்கிருேமிறே. து$_3$க்க$_2$மில்லாமையன்ருே மோக்ஷம். ஆகையால் ஜீவந்முக்திவாத$_3$ம் அஸங்க$_3$தம். 'பு$_3$த்$_3$தே$_4$ க்ஷேமப்ராபணம். தச்சா$_2$ஸ்த்ரவிப்ரதிஷித்$_3$த$_4$ம். பு$_3$த்$_3$தே$_4$ சேத் க்ஷேமப்ராபணம் இஹைவ ந து$_3$:க்க$_2$முபலபே$_4$த' என்று ஆபஸ்தம்ப$_3$ர் ஜீவந்முக்திவாத$_3$த்தைக் க$_2$ண்டி$_3$த்துள்ளார். ப்ரத்யக்ஷவிரோத$_4$த்துக்குமேலே சாஸ்த்ரவிரோத$_4$மும் உண்டு. வேதா$_3$ந்தங்கள் உபாஸநத்தை விதி$_4$த்துள்ளபடியாலும், ப்ராணப்ரயாணம் வரை உபாஸநாநுவ்ருத்தி கூறப்பட்டுள்ளதாகையாலும்,

ஶரீரத்திலிருந்து ஜீவனுடைய உத்க்ரமணம் ஶ்ருதிஸித்3த4மா கையாலும். அர்ச்சிராதி3மார்க்க3க3மநம் ஶ்ருதிஸித்3த4மாகை யாலும், தே3ஶவிஶேஷமான தெளிவிசும்பு திருநாட்டையடைந்த வனுக்கே ஸர்வப3ந்த4 விமோக்ஷம் ஶ்ருதிஸித்3த4மாகையாலும், ஜீவந் முக்திவாத3ம் வேதா3ந்தவிருத்3த4மென்றபடி. ஜீவந்முக்தி வாத3த்தை ஸாக்ஷாத்தாக நிரஸிக்கும் ஸூத்ரம் 'நோபமர்தே3 நாத:' (4-2-10) என்பதாகும். இங்கே 'ஜீவந்முக்தி மதம் ந ஜீவதி யத: ஶஸ்த்ரேண ஶாஸ்த்ராத்மநா லூநம் லோகவிருத்3த4 ஸித்3தி4 ச யதஸ்தேநேத3மாத3ாவபி। ஆபஸ்தம்ப3நிரஸ்தமௌப நிஷத3ப்ரஸ்த2ாநமாதஸ்து2ஷாம் ஆசார்யோऽபி நிராசகார க2லு தத் த்3வைபாயநாக்2யோ முநி:॥' என்ற ஸ்ரீவாத்ஸ்யவரத3கு3ரு வான நடாதூர் அம்மாளருளிச்செய்த தத்வஸாரஶ்லோகம் அநுஸந்தே4யம். ஆக சரீராத் உத்க்ராந்தனுக்கு மோக்ஷம் என்று உத்க்ராந்திபாத3ம் அமைந்திருக்கிறபடியால் இப்பாத3ம் ஸாங்க்2யம்ருஷாவாதி3களுக்கு அஸங்க3தம் என்றதாயிற்று.

'அத்ர ப்3ரஹ்ம ஸமஶ்நுதே' என்று ஶ்ருதியில் வித்3யா நிஷ்ட2னுக்கு இங்கேயே ப்3ரஹ்மாநுப4வம் ஓதப்பட்டிருக்கிற படியால், வித்3வான்களுக்கு உத்க்ராந்தி இல்லை என்ற பூர்வ பக்ஷத்தை நிரஸிக்கிறார்—'ஆஸ்ருத்யதி4கரணத்தில்' ஸ்ரீவேத3 வ்யாஸர், கடோ2பநிஷத்தில் மூர்த்த4ந்யநாடி வழியாக வித் வான்களுக்கு க3தி கூறப்பட்டுள்ளபடியால் உத்க்ராந்தி இல்லை என்ன ஒண்ணாது. நாடீ3விஶேஷமான மூர்த்த4ந்ய நாடீ3ப்ர வேஶத்துக்கு முன்னமே, உத்க்ராந்தியிலே விஶேஷம் கூறப்பட வில்லை யாகையால், வித்3வான் அவித்3வான் என்ற வாசி யின்றிக்கே ஸர்வர்க்கும் உத்க்ராந்தி ஸமானை என்றபடி. 'அத்ர ப்3ரஹ்ம ஸமஶ்நுதே' என்ற ஶ்ருதிக்கு அர்த்த2த்தை வ்யாஸர் 'அம்ருதத்வம் ச அநு போஷ்ய' (4-2-7) என்று அருளிச்செய்கிறார். 'அநுபோஷ்ய ஏவ அம்ருதத்வம்' என்றபடி அதாவது—உபாஸக ஶரீரம் கொளுத்தப்படாமல் இருக்கச்

செய்தேயே, உபாஸந காலத்தில் உள்ளதொரு ப்₃ரஹ்மாநு பு₄வத்தைச் சொன்னபடியல்லது, விதே₃ஹ த₃ஶாப்ராப்யத்தை (தே₃ஹம் கழிந்த பிறகு கிடைக்கும் ப்₃ரஹ்மாநுப₄வத்தை)ச் சொன்னபடியன்று. நாடீ₃விஶேஷப்ராப்தி பர்யந்தம் உள்ள உத்க்ராந்தி வித்₃வத₃வித்₃வத் ஸாதாரணீ என்று கீழே கூறிய வ்யாஸர், மேலே, ததோ₃கோऽதி₄ கரணத்தில், ப்₃ரஹ்ம வித்₃யா நிஷ்டனுக்கு அஸாத₄ாரணமான நாடீ₃விஶேஷ ப்ராப்தியாகிற விஶேஷத்தைக் கூறுகிறார். அந்த நாடீ₃விஶேம் வித்₃வானுக்கு து₃ர்விவேசமாயினும், ஹ்ருத₃ய கு₃ஹாவர்த்தியான புருஷோத் தமன் ப்ரஸந்நனாய் ப்ரகாஶிப்பிக்கிறான் என்றும் கூறுகிறார். 'ஹார்த₃ாநுக்₃ரஹ லப்₃த₄மத்₄யத₄மநித்₃வாரா ப₃ஹிர்நிர்க₃த:' என்றருளிச் செய்தாரிறே நடாதூர் அம்மாள்.

'ஸ்ரீபீ₄ஷ்மாசார்யர் உத்தராயணத்தை எதிர்பார்த்திருந்தார், ஆகையாலே த₃க்ஷிணாயநத்தில் மரித்தவனுக்கு மோக்ஷப்ராப்தி யில்லை' என்ற பக்ஷத்தை நிரஸிக்கிறார் வ்யாஸர்—த₃க்ஷிணாய நாதி₄கரணத்தில். இவ்விடத்தில் ஸித்₃த₄ாந்தஸாரமிருக்கும் படி—ஒருவனிடத்தில் அஸாத₄ாரணமாக உள்ளதொரு த₄ர்மத் தைக்கொண்டு, எவ்விடத்திலும் அதனைக்கொள்ளப் பார்ப்பது அயுக்தம். பாண்டவர்கள் ஐவருக்கும் த்₃ரௌபதீ₃ ஒருத்தியே த₄ர்மபத்நி என்ற ந்யாயத்தை நாம் எல்லாவிடத்திலும் கொள்ள இயலாது. கர்ணனும் வ்யாஸரும் கந்யகாஸுதர் என்ற ந்யா யத்தை ப்ரதிநியதமாகவே கொள்ள ப்ராப்தம். அவ்வோபாதி பீ₄ஷ்மருடைய சரித்ரத்தை எல்லா வித்வான்களுக்கும் அதி தே₃ஶம் பண்ண இயலாது. அவர் உத்தராயண ப்ரதீக்ஷணம் செய்தது—உத்தராயண காலத்தின் மேன்மையை உலகுக்குக் காட்டுவதற்காகவும் ஆகலாம். வஸ்துத:, பீ₄ஷ்மர் ஸாக்ஷாந் முக்தி பெறவும் இல்லை. ஆகையால் அவருடைய சரித்ரமே ப்ரக்ருத விஷயத்தில் அப்ரக்ருதமிறே. ஆகையால் நர பித்ரு

தி₃விஷத்₃ராத்ரியில் மரித்தவராயினும் வித்₃வான்கள் பர ப்₃ரஹ்மப்ராப்தி உள்ளவரே என்றதாயிற்று. நராத்ரி—இரவு. பித்ருராத்ரி—க்ருஷ்ணபக்ஷம். தே₃வராத்ரி—த₃க்ஷிணாயநம் என்றபடி. 'நைதே ஸ்ருதீ பார்த்த₂ ஜாநந் யோகீ₃ முஹ்யதி கஶ்சந| தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு யோக₃யுக்தோ ப₄வார் ஜுந॥ (கீ₃தை 8-27) என்று மார்க்க₃சிந்தநம் கீ₃தம். வழி திகைத்து அலமராமல் செல்ல, மார்க்க₃சிந்தநம் ஆவஶ்யக மிறே. 'யோக₃யுக்த:' என்றவிடத்தில் 'யோக₃ம்' ப₄க்தியோக₃ மல்ல—மார்க்க₃சிந்தநமே என்பதனை 'தஸ்மாத் அஹரஹ: அர்ச்சிராதி₃க₃திசிந்தநாக்₂ய யோக₃யுக்தோ ப₄வ' என்று கீ₃தா ப₄ாஷ்யத்தில் எம்பெருமானார் அருளிச்செய்தார். நம்மாழ்வாரும் 'பின்னும் ஆக்கை விடும்பொழுது எண்ணே' என்றருளிச் செய்தார்.

உத்க்ராந்திபாத₃ம் முற்றிற்று.

## க₃திபாத₃ம்

கீழே முமுக்ஷுவான வித்₃வானுக்கு ஸ்தூ₂லதே₃ஹம் இருக்கும் காலத்தில் உண்டாகும் ப₂லத்தை, உத்தரபூர்வாக₄ அஶ்லேஷவிநாஶமாகவும், எக்காலத்திலே மரணம் அடைந் தாலும் ப்₃ரஹ்மவித்₃யாநிஷ்ட₂னுக்கு ப்ராரப்₃த₄ கர்மம் முடியு மானால், ஸுஷும்நாநாடி வழியாக உத்க்ராந்தியாகவும் நிரு பித்தார். இப்படி ப₂லாத்₄யாயத்தில் ப்ராத₂மிக பாத₃த்₃வ யார்த்த₂ம் உக்தம். இஃது ஒரு பேடிகை. மேலே இரண்டு பாத₃ங்களால் தே₃ஹாத் உத்க்ராந்தனுக்கு ஏற்படும் ப₂லத்தை அர்ச்சிராதி₃மார்க்க₃த்தாலே ப்₃ரஹ்மலோக ப்ராப்தியாகவும். புநராவ்ருத்தி யின்றிக்கே பரிபூர்ணப்₃ரஹ்மாநுப₄வமாகவும் நிருபிக்கிறார் ஸ்ரீவேத₃வ்யாஸர். இது மற்றொரு பேடிகையாகும்.

அதிலே க3திபாத3மான இப்பாத3த்திலே, முமுக்ஷுவை ப்3ரஹ்மலோகம் அழைத்துச் செல்லுமவர்கள் யாவர், அதிலே எப்படி க்ரமம், அழைத்துச் செல்லுமவர் ஸ்வரூபம் எது, அழைத்துச் செல்லப்படும் ஸ்த2ாநம் எது, என்ற விஷயங்கள் ஆராயப்படுகின்றன.

*'அர்ச்சிரஹஸ்ஸிதபக்ஷாந் உத3க3யநாப்3த3மருத3ர்க்கேந்து3ந் ।*
*அபி வைத்3யுதவருணேந்த்3ர ப்ராஜாபதீந் ஆதிவாஹிகாந் ஆஹு:॥'*

என்ற ஸ்ரீவரத3கு3ரு ஶ்லோகம் ஶ்ருதப்ரகாஶிகையில் காட்டப் பட்டுள்ளது. இங்கே,

*'ஸத்ஸங்கா3த் ப4வநிஸ்ப்ருஹ: கு3ருமுகா2த் ஸ்ரீஶம் ப்ரபத்3யாத்மவாந்*
*ப்ராரப்3த4ம் பரிபு4ஜ்ய கர்மஶகலம் ப்ரக்ஷீண கர்மாந்தர:।*
*ந்யாஸாதே3வ நிரங்குஶேஶ்வர த3யா நிர்லூந மாயாந்வய:*
*ஹார்த்3தா3நுக்3ரஹலப்3த4மத்4யத4மநி த்3வாரா ப3ஹிர் நிர்க3த:॥'*

*முக்தோऽர்ச்சிர் தி3ந பூர்வபக்ஷ ஷடு3த3க் மாஸாப்3த3வாதாம்ஶுமத்3*
*க்3லௌ வித்3யுத்3 வருணேந்த்3ர தா4த்ருமஹித: ஸீமாந்த ஸிந்த்4வாப்*
*ஸ்ரீவைகுண்ட2முபேத்ய நித்யமஜட3ம் தஸ்மிந் பரப்3ரஹ்மண: [ப்லுத:।*
*ஸாயுஜ்யம் ஸமவாப்ய நந்த3தி ஸமம் தேநைவ த4ந்ய: புமாந்॥*

என்ற ஸ்ரீவாத்ஸ்ய வரத3கு3ரு ஶ்லோகத்3வயம் அநுஸந்தே4யம். ரஹஸ்யத்ரயஸாரத்தில் தேஶிகனும்,

*'[illegible] தே3வஸ்திஷ்ட2ந் நிஷத்3வர தீ3ர்கி4கா-*
*[illegible] ஸாவதீர்ண பித்ருக்ரமாத்।*
*[illegible] காலே ஸ ஏவ ஶோதாதி4காம்*
*[illegible] த2ம் ப்ரவேஶயதி ப்ரபு4:॥'* என்றும்

*'[illegible] த்தராயண வத்ஸராந்*
*[illegible] க்ரமாத் அசிரத்3யுதிம்।*
*[illegible] ஆக3த:*
*[illegible] கம்॥'*

என்றும் அருளிச்செய்தாரிறே.

அர்ச்சிராதி3யிலே [illegible] உலகாரியனும் விஸ்தரேண [illegible] அருளிச்செய்தாரிறே.

க3திபாத3ம் முற்றிற்று.

## ப்ராப்தி பாத3ம்

இப்பாத3த்திலே, அர்ச்சிராதி3மார்க்க3த்தாலே திருநாட்டை யடைந்தவனுடைய பரிபூர்ணப்3ரஹ்மாநுப4வத்தையும், திரும்பி வாராமையையும் ஸ்ரீவேத3வ்யாஸர் நிரூபிக்கிறார்.

இந்த க3திவிசேஷத்தாலே சென்றவனுடைய பரிபூர்ண ப்3ரஹ்மாநுப4வம் இருக்கும்படி எங்ஙனே? என்னில்:—'அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனைத் தினைத்தனையும் விடாள்' இத்யாதி3களிற்படியே ஸர்வதே3ச ஸர்வகால ஸர்வாவஸ்தை2களிலும், ஸர்வேச்வரனை அநந்தங்களான விக்3ரஹகு3ண விபூ4திசேஷ்டிதங்களில் ஒன்றும் குறையாமே நிரதிசயபோ4க்3யமாக விஷயீகரித்துக்கொண்டிருக்கும்.

ப4க3வத் ஸ்வரூபம் போ4க்3யமாக ப்ராப்தம். மற்றுள்ளவை போ4க்3யமாம்படி எங்ஙனேயென்னில்:—ராஜமஹிஷிக்கு ராஜா போ4க்3யனானால், அவனுக்கு அபி4மதங்களாய், அவனுடைய போ4க3த்துக்குறுப்பான போ4கோ3பகரண போ4க3ஸ்தா2நங்களும் இவளுக்கு அநுகூலமாமாப்போலே

இவற்றில், நிரதிசயாநுகூல்யத்தாலே பரமப்ராப்யமாகையாலே ப4க3வத் ஸ்வரூபத்தைப் பரமபத3ம் என்கிறது.

பரிபூர்ண ப்3ரஹ்மாநுப4வம் போ4க்3யதமமாகப் பெறுவது ஒரு ஸர்வோத்தர ஸ்தா2நவிசேஷத்திலேயாகையாலே, அந்த ஸர்வோத்தர ஸ்தா2நத்தைப் பரமபத3ம் என்கிறது.

இவ்வநுப4வத்துக்காச்ரயமாய்க்கொண்டு அநுபா4வ்யமாகையாலே ப4க3வத்3விபூ4திபூ4தமாய், ஜ்ஞாநாநந்த3லக்ஷணமாய்க்கொண்டு விளங்குகிற ஸ்வஸ்வரூபத்தைப் பரமபத3ம் என்கிறது.

லீலாவிபூ4தியில் பதா3ர்த்தங்கள் அநுபா4வ்யங்களோ? என்னில்:—பித்தோபஹதனுக்கு ப்ரதிகூலமான பால் பித்தம் ஶமித்தால் அநுகூலமாமாப் போலேயும், ஸார்வ பௌ4மனுன பிதாவினுடைய சிறைக்கூடம், சிறைகிடக்கிற ராஜகுமாரனுக்கு அப்போது ப்ரதிகூலமாய். ராஜா சிறைக்கூடத்தினின்றும் புறப் படவிட்டு, உகந்து துல்ய போ4கனுக வைத்தவளவில், சிறைக் கூடம் கோப்புக் குலையா திருக்கச்செய்தே 'பிதாவின் விபூ4தி என்று அநுகூலமாமாப்போலேயும் ஆம். ப4க3வத்ஸம்ஶ்லேஷ மின்றிக்கே தான் நின்றபோது, கர்மாநுகு3ணமாகத் தனக்கு ப்ரதிகூலமே அல்பாநுகூலமாகத் தோன்றி, முக்தனுன காலத் திலே நிரதிஶயபோ4க்3யமாகத்தோன்றும். ப3ந்த4காலத்தில் ப்ரதிகூலமாகவும், ப3ந்த4 நிவ்ருத்தி காலத்தில் அநுகூலமாகவும் இருக்கக்கடவதாயிறே ப4க3வத்சங்கல்பமுள்ளது. இப்படியாகை யாலிறே ஓரே காலத்தில் ஓரே வஸ்து பி4ந்நபி4ந்நாதி4காரிகளைப் பற்ற. அநுகூலமாகவும் ப்ரதிகூலமாகவும் தோற்றுகிறது.

ஸர்வப்ரகாரவிஶிஷ்டநாராயணன் ப்ராப்யன் என்னுமது மூலமந்த்ரத்திலும், த்3வயோத்தர வாக்யத்திலும், சதுர்த்2யந்த பத3ங்களாலே உக்தம்.

முக்தனுக்கு ஜக3த்3வ்யாபாரம் இல்லையேயாகிலும், க்ருஷி பண்ணின பிதாவு(ம்), நிர்வ்யாபாரரான புத்ராதி3களும் க்ருஷி ப2லத்தை பு4ஜிக்குமாபோலே ஜக3த்3வ்யாபாரத்தால் வரும் ரஸம், வ்யாபரிக்கிற ஸர்வேஶ்வரனுக்கும், பார்த்திருக்கிற முக்த னுக்கும் துல்யம். 'ஜக3த்3வ்யாபாரவர்ஜம்' 'போ4க3மாத்ரஸாம்ய லிங்கா3ச்ச' என்றிறே ஸூத்ரகாரரான ஸ்ரீவேத3வ்யாஸர்.

ஶப்3த3ஶக்தியின்றிக்கேயிருக்க, 'போ4க3ஶ்ருதிகளும் விரோதி4க்க, ஸாயுஜ்யஶப்3த3த்துக்கு ஐக்யம் பொருளாக நினைத்திருப்பார்க்கு 'முக்தன் பரமஸாம்யத்தையடையும்' என்

றும், 'தாத்3ருகே3வ' என்றும் சொல்லுகிற ஶ்ருதிகளும் விரோதி4க்கும். 'மமஸாத4ர்ம்யமாக3தா:' என்று கீ3தாசார்யனும் அருளிச்செய்தான். இப்படி ஸாம்யம் கண்டோ2க்தமாகையால். முக்தத3சையில் ஐக்யம் தோற்றினவிடங்களெல்லாம், 'ராம ஸுக்3ரீவயோரைக்யம்' இத்யாதி3களிற்படியே, பே4த3 ச்ருத்ய விரோதே4ந கண்டுகொள்வது. முக்தனை ஸ்வதந்த்ரன் என்கிறது கர்மவச்யனன்று என்றபடி. ஸ்ரீவேத3 வ்யாஸரும் 'அத ஏவ ச அநந்யாதி4பதி:' (4-4-9) என்றருளிச்செய்தாரிறே. இங்கே, 'அத்ர அநதி4பதி: இதி நோக்தம்: கிந்து அநந்யாதி4பதிரிதி. அத்ராயம் அபி4ப்ராய:, ஸ்வாப4ாவிக சேஷிண: பரமபுருஷா த3ந்யோ நாதி4பதி: முக்தஸ்ய இதி' என்றிறே ச்ருதப்ரகாசிகா வாக்யம். ஈச்வரனுக்கு ச2த்ரசாமராதி3களைப்போலே லக்ஷண மாகச் சொன்ன ஜக3த்காரணத்வ மோக்ஷப்ரத3த்வ ஸர்வா த4ாரத்வ ஸர்வநியந்த்ருத்வ ஸர்வஶேஷித்வ ஸர்வசரீரித்வ ஸர்வ ஶப்3த3வாச்யத்வ ஸர்வவேத3வேத்3யத்வ ஸர்வலோக ஶரண்யத்வ ஸர்வமுமுக்ஷூபாஸ்யத்வ ஸர்வப2லப்ரத3த்வ லக்ஷ்மீ ஸஹாயத்வாதி3கள் ப்ரதிநியதங்கள். முக்தனுக்கும் ஆதே4யத்வ விதே4யத்வ ஶேஷத்வ அணுத்வங்கள் வ்யவஸ்தி2தங்கள். ஆக பே4ாக3ஸாம்யமே ஐக்யம் என்று கண்டுகொள்வது.

ப்ராப்தி பாத3மான இப்பாத3த்தில், முக்தனுக்கு ஸ்வஸ்வ ரூபாவிர்ப4ாவத்தைப் ப2லமாக முதலதி4கரணத்திலும், பரமாத் மாவோடு ஆநந்த3த்தில் பரம ஸாம்யாபத்தியை அந்திமாதி4கர ணத்திலும் நிரூபித்தார் ஸ்ரீவேத3வ்யாஸர். முக்தனுக்கு அபுநரா வ்ருத்தியை அந்திம ஸூத்ரத்தாலே நிரூபிக்கிறார். 'மீட்சியின்றி வைகுந்தமாநகர்' என்றும் "நாரணன் திண்கழல்" என்றுமிறே ஆழ்வார் அருளிச்செய்தார். "அநாவ்ருத்தி: ஶப்3த3ாத்" என்பது அந்திம ஸூத்ரம். முக்தனுடைய அபுநராவ்ருத்தியைத் தெரிவிக்கும் ப்ரமாணங்கள் மூன்று ஸ்ரீபாஷ்யகாரராலே உத3ா

ஹரிக்கப்பட்டன. ப்ரமாணமான ஶப்3த3ம்—ஶ்ருதி, ஸ்ம்ருதி என்று இருவகைப்படும். மேலும் ஸாக்ஷாத்தாக அநாவ்ருத்தியைத் தெரிவிக்குமது என்றும், அநாவ்ருத்திக்கு ஆக்ஷேபகமான அர்த்தத்தைத் தெரிவிக்குமது என்றும் இருவகைப்படும். "ஸ க2லு" என்ற ஶ்ருதியும், "மாமுபேத்ய" என்ற ஸ்ம்ருதியும் அநாவ்ருத்தியை ஸாக்ஷாத்தாகத் தெரிவிக்கும் ப்ரமாணங்கள். 'ப்ரியோ ஹி' என்ற ஸ்ம்ருதி அநாவ்ருத்திக்கு ஆக்ஷேபகமான ப4க்தனுடைய ப4க3வத் ப்ரியத்வத்தைத் தெரிவிக்கும் ப்ரமாணம். 'அத்யர்த்த2 ப்ரியம் ஜ்ஞாநிநம் லப்3த்4வா' என்று ஸ்ரீபா4ஷ்யகாரர், 'சேதநலாப4ம் ஈஶ்வரனுக்கு' என்ற ஸத்ஸம்ப்ரதா3ய தாத்பர்யார்த்த2த்தை வெளியிட்டருளினாரிறே. 'கு3ஹேந ஸஹிதோ ராம:' 'கு3ஹமாஸாத்3ய த4ர்மாத்மா' 'ஹநுமதா ஸங்க3த:' ஸுக்3ரீவேணாபி ஸங்க3த:' 'விபீ4ஷணோ ஆஶு ஜகா3ம ஸங்க3மம்' 'அங்கே ப4ரதம் ஆரோப்ய முதி3த:' என்றிறே ஸ்ரீராமாயண நிஷ்கர்ஷமிருக்கும்படி.

அத்4யாயந்தோறும் ஸூத்ரக2ண்டா3ப்4யாஸம் அத்4யாய ஸமாப்தியைக் காட்டும். இங்கே ஸூத்ராப்4யாஸம் ஶாஸ்த்ர ஸமாப்தியைக் காட்டும் என்பது ஸ்ரீபா4ஷ்யஸாரம்.

ஆக மூலமந்த்ர த்ருதீயபதா3ர்த்த2மான ப2லம் நிரூபிதம்.

ஆக முதலிரண்டு அத்4யாயங்களாலே ப்ரணவார்த்த2த்தையும், மூன்றாமத்4யாயத்தாலே 'நம:' ஶப்3தா3ர்த்தத்தையும் நான்காமத்4யாயத்தாலே 'நாராயணாய' ஶப்3தா3ர்த்த2த்தையும் அருளிச்செய்தாராயிற்று.

ஸ்ரீவேத3வ்யாஸர் ஶாரீரகமீமாம்ஸாஶாஸ்த்ரத்தில் விசிஷ்டாத்3வைத ஸித்3தா4ந்தத்தையே ஸ்வஸித்3தா4ந்தமாக அறுதியிட்டுள்ளார்.

ஸூக்ஷ்மசேதநாசேதநவிசிஷ்டப்₃ரஹ்மம் காரணமாய், ஸ்தூ₂ல சேதநாசேதந விசிஷ்டப்₃ரஹ்மம் கார்யமாய், காரண கார்யங்களான விசிஷ்டப்₃ரஹ்மங்களுக்கு ஐக்யம் சொல்லுமது விசிஷ்டாத்₃வைத ஸித்₃தா₄ந்தமாகும். காரண கார்யங்களுக்கு நாமபே₄த₃ம், ஆகாரபே₄த₃ம், வ்யாபாரபே₄த₃ம் உள்ளதாயினும், வஸ்துபே₄த₃ம் இல்லை. கார்யகாரணங்களுக்கு அநந்யத்வமே என்ற ஸத்கார்யவாத₃த்தை ஸ்த₂ாபித்து, அஸத் கார்யவாத₃மான வைஶேஷிக மதத்தைக் க₂ண்டித்தார்—'தத₃நந்யத்வம்' என்று ஆரம்ப₄ணாதி₄கரணத்திலே ஸ்ரீ வேத₃வ்யாஸர். பரமாத்மா தான் நிர்விகாரனாய், தன் சரீரபூ₄தமான சேதநாசேதநமாத்ரத்திலே ஸங்கோசவிகாஸமான விகாரங்களை ஜநிப்பிக்கிறான் என்பதற்கு உபநிஷத்து 'யதோ₂ர்ணநாபி₄: ஸ்ருஜதே' என்று சிலந்தியை த்₃ருஷ்டாந்தமாகக் கூறியது. தத்வத்ரயத்தில் பிள்ளை உலகாரியனும் 'இவன் தானே ஜக₃த்தாய்ப் பரிணமிக்கையாலே உபாத₃ாநமுமாயிருக்கும். ஆனால் நிர்விகாரன் என்னும்படி யென்னென்னில்:—ஸ்வரூபத்துக்கு விகாரம இல்லாமையாலே, ஆனால் பரிணாமம் உண்டாகும்படி என்? என்னில்:—விசிஷ்டவிஶேஷண ஸத்₃வாரகமாக, ஒரு சிலந்திக்குண்டான ஸ்வபா₄வம் ஸர்வஶக்திக்குக் கூடாதொழியாதிறே' என்றருளிச்செய்துள்ளார். திருமழிசைப்பிரான் 'கடல் தன்னுள்ளே திரைத்தெழுந்து அடங்குகின்ற' என்று கடலை த்₃ருஷ்டாந்தமாக அருளிச்செய்தார். ஸ்ரீ பராஶரபட்டர் 'அநுபிஜிபி சிசூ₂வ' என்று ஆண்மயிலை த்₃ருஷ்டாந்தமாக அருளிச்செய்தார். முதலத்₄யாயத்தில் ப்ரக்ருத்யதி₄கரணத்தில் ஸ்ரீ வேத₃வ்யாஸர் ப்₃ரஹ்மத்தினுடைய அபி₄ந்ந நிமித்தோபாத₃ாநத்வத்தை ஸித்₃தா₄ந்தீகரித்தாரிறே. மேலும் ஜீவவாசிஶப்₃த₃த்துக்கு பரமாத்ம பரத்வத்தை நிரூபிக்கும் இடத்தில், ஆஶ்மரத்₂யமதத்தையும், ஔடு₃லோமிமதத்தையும் பூர்வபக்ஷமாகக் காட்டி, காஶக்ருத்ஸ்ந மதத்தையேயிறே ஸ்வஸித்₃

த₄ாந்தமாகக் காட்டியருளினர்—வாக்யாந்வயாதி₄கரணத்தில் ஸ்ரீ வேத₃வ்யாஸர். காஶக்ருத்ஸ்நமதத்தை ஆஶ்மரத்₂ய ஔடு₃லோமி மதங்களுக்கு முன்னமே கூறுமையாலும், காஶக்ருத்ஸ்நமதத்துக்கு மேற்பட ஒரு மதத்தைக் கூறுமையாலும் காசக்ருத்ஸ்ந மதமே ஸ்ரீ வேத₃வ்யாஸ ஸம்மதமாகும் என்றிறே ஸ்ரீ பா₄ஷ்ய ஶ்ருதப்ரகாஶிகைகளிலே உக்தம். ஶரீராத்மபா₄வத்தாலே ஜீவவாசி ஶப்₃த₃ம் பரமாத்மபரம் என்றிறே காஶக்ருக்ஸ்ந மதம். இதிறே விஶிஷ்டாத்₃வைதமதம். இதுவேயிறே ஸ்ரீவ்யாஸ ஸம்மதமாகிறது. மற்றையோர் மதத்தைக்காட்டிலும் ஸ்வமதம் விலக்ஷணமாயிருக்குமானல், ஸ்ரீவேத₃வ்யாஸர் அவ்வவ்விடங்களில் 'பா₃த₃ராயண:' என்று ஸ்வநாமத்தை நியமேந நிர்தே₃சிப்பர். ரிஷ்யந்தரமதம் ஸ்வஸம்மதமானல், அங்கு ஸ்வநாமநிர்தே₃ஶம் செய்யார் வ்யாஸர். மேலும் எது ஸித்₃த₄ாந்தமோ அதனைச் சரமமாகக் காட்டியருளுவார் என்பதும் ஶாரீரகமீமாம்ஸா ப்ரஸித்₃த₄ம். ஆகையால் காஶக்ருத்ஸ்ந மதமே வ்யாஸஸம்மத மென்றதாயிற்று.

மேலும் விசிஷ்டாத்₃வைத ஸித்₃த₄ாந்த ப்ரத₄ாந ப்ரமேயமான ப்ரஹ்மஸகு₃ணத்வத்தையும், ஜீவபர பாரமார்த்தி₂கபே₄தத்தையும், த₄ர்மத₄ர்மிபே₄த₃த்தையும், ஜீவாத்மாவுக்கே அஜ்ஞாநஸ்ம்ப₃ந்த₄ம் என்பதனையும், ஜீவாத்மாவுக்கு ஜ்ஞாநஸங்கோசவிகாஸங்களே ஸம்ஸார மோக்ஷங்கள் என்பதனையும், ஜீவகர்த்ருக பரமாத்மோபாஸநமே மோக்ஷஸாத₄நம் என்பதனையும், பரமாத்மாநுக்₃ரஹத்தாலே ஜீவனுக்கு மோக்ஷம் என்பதனையும், அதுவும் அர்ச்சிராதிமார்க₃த்தாலே தே₃ஶவிஶேஷப்ராப்தி பூர்வக ஸ்வஸ்வரூபாவிர்பா₄வபூர்வக பரிபூர்ண ப்₃ரஹ்மாநுப₄வம் என்பதனையும், பரனேடு ஆநந்த₃ஸாம்யமே ஜீவனுக்கு மோக்ஷம் என்பதனையும், அங்கு நின்றும் மீட்சியில்லை என்பதனையும் ஸ்ரீ வேத₃வ்யாஸர் ஶாரீரக மீமாம்ஸா ஶாஸ்த்ரத்தில் பலவிடங்களில் நிருபித்திருக்கிறபடியால், ஸ்ரீ வ்யாஸ ஸம்மதம் விசிஷ்டாத்₃வைதமதமே என்பது தெளிவு.

'ப்ரஹ்மம் நிர்குணம். அஜ்ஞாநம் ப்ரஹ்மநிஷ்டம். ஸம்ஸார மோக்ஷங்கள் ப்ரஹ்மத்துக்கு, ஐக்யஜ்ஞாநமே மோக்ஷ ஹேது. இங்கேயே முக்தியாகும். ஐக்யாபக்தி மோக்ஷம்' என்றிறே ம்ருஷாவாதிமதம். இது ஸ்ரீவேதவ்யாஸஸம்மதமன்று. ஆக, இது ஶாரீரகமீமாம்ஸா ஶாஸ்த்ரமான ப்ரஹ்மஸூத்ராத்யாய சதுஷ்டயத்தில் அந்தர்கதமன்று, உத்ஸூத்ரம் என்றதாயிற்று.

ஜகத்காரணமான பரப்ரஹ்மத்தை உபாஸித்தவன். பகவதநுக்ரஹத்தாலே அபுநராவ்ருத்திலக்ஷணமோக்ஷம் பெற்று, பரிபூர்ணப்ரஹ்மாநுபவம்செய்து, ஆநந்தமயனோடு போகமாத்திரத்திலே பரமஸாம்யம் பெறுகிறான் என்று ஸ்ரீவேதவ்யாஸர் நான்கு அத்யாயங்கள் கொண்ட ஶாரீரக மீமாம்ஸா ஸாஸ்த்ரத்தில் அறுதியிட்டாராகையால், பரனோடு ஜீவனுக்கு ஸ்வரூபைக்யாபத்தியே மோக்ஷம் என்னுமவர்களுடைய வாதம் ப்ரஹ்ம ஸூத்ரத்திற்குப் புறம்பானது என்றபடி.

'இதி ஸர்வம் ஸமஞ்ஜஸம்' என்று ஸ்ரீ பாஷ்யந்திம வாக்யம். பேதஶ்ருதி அபேதஶ்ருதி கடகஶ்ருதி ஸகுணஶ்ருதி நிர்குணஶ்ருதி என்ற ஸர்வஶ்ருதிகளும் அவிருத்தார்த்த ப்ரதிபாதகங்கள், முக்யார்த்த யுக்தங்கள் என்று நிரூபிக்கப் பட்டபடியால், ஸர்வஶ்ருதிஸாமஞ்ஜஸ்யம் என்றபடி. 'இதி' என்று, 'அகிலபுவந ஜந்ம' என்று தொடங்கிச் சொல்லப்பட்ட ஸர்வத்தையும் பராமர்சிக்கிறது. 'ஸர்வம்' என்று, உதாஹரிக்கப்படாத ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸபுராண வாக்யங்களைப் பராமர்சிக்கிறது. இயற்றையும் கீழ்க்காட்டிய வழியாலே பொருந்தவிடவேண்டும் எனறு திருவுள்ளம்.

'தஸ்மை ராமாநுஜார்யாய நம: பரமயோகி$_3$நே|
ய: ஶ்ருதி ஸ்ம்ருதி ஸூத்ராணாமந்தர்ஜ்வரமஶீஶமத்||

ஜயதி யதிராஜவாணீ ப்ரதிப$_4$டஸித்$_3$தா$_4$ந்த க்ருந்தந க்ருபாணீ|
ஶ்ருதியுவதீநாம் வேணீ தி$_3$வ்யபதா$_3$ரோஹப$_4$வ்ய நிஶ்ரேணீ|'

'சண்ட$_3$மாரு வேதா$_3$ந்த விஜயாதி$_3$ஸ்வஸூக்திபி$_4$:|
வேதா$_3$ந்த ரக்ஷகாயாஸ்து மஹாசார்யாய மங்களம்||

ஸ்ரீ வேங்கடார்ய ஶிஷ்யேண வரதா$_3$ர்யேண தீ$_4$மதா|
ஸ்ரீபா$_4$ஷ்யஸாரோ லிகி$_2$த: ஸ்ரீவைஷ்ணவஸதாம் முதே$_3$||

ஸ்ரீ பா$_4$ஷ்யஸாரம் நிறைவு பெற்றது.



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஶாரீரகத்தில் பேடிகாவிபாகம்

## ஸ்ரீ பாஷ்யஸாரம்

ஸ்ரீ உ. வே. வேளுக்குடி K வரதாசார்ய ஸ்வாமி

ஸ்ரீ வேதவ்யாஸர் அருளிச்செய்த ப்ரஹ்ம மீமாம்ஸா ஶாஸ்த்ரம் ஶாரீரகம் எனப்படும். இதில் அதிகரணங்கள் 156 ஆகும். அவற்றில் பேடிகாவிபாகம் பெரியோர்களால் காட்டப்பட்டுள்ளது. அதனை ஈண்டு அநுபவிப்போம்.

ஶாரீரகம்

ஶாரீரகம் நான்கு அத்யாயங்கள் கொண்டது. இவை நான்கும் பூர்வத்விகம் உத்தரத்விகம் என்று இரண்டு பேடிகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

பூர்வத்விகம் (முன் இரண்டு அத்யாயங்கள்) விஷயத்விகம் என்றும் ஸித்தத்விகம் என்றும் கூறப்படுகிறது. ப்ரஹ்மமாகிற பகவத் விஷயத்தைப்பற்றிக் கூறுகிறபடியாலும் ப்ரஹ்மமாகிற ஸித்தவஸ்துவைக் கூறுகிறபடியாலும் அப்படி வழங்கப்பெறுகிறது.

உத்தரத்விகம் (பின் இரண்டு அத்யாயங்கள்) விஷயித்விகம் ஸாத்யத்விகம் என்றும் கூறப்படுகிறது. மூன்றாவது அத்யாயத்தில் ப்ரஹ்ம வித்யை (உபாஸநம்) விசாரிக்கப்படுகிறபடியாலும் நான்காவது அத்யாயத்தில் ப்ரஹ்மாநுபவம் கூறப்படுகிறபடியாலும் அவ்வாறு வ்யவஹரிக்கப்படுகிறது. ப்ரஹ்மமாகிற பகவத் விஷயத்தைப்பற்றிய உபாஸநம் விஷயியாகும். அது ப்ரயத்நஸாத்யமேயன்றி ஸித்தமன்று. அவ்வோபாதி

ப்ரஹ்மாநுபவமும் பகவத் விஷயத்தைப் பற்றியதாகையால் விஷயியேயாகும். விஷயத்தைப்பற்றியது விஷயி ஜ்ஞாநம் என்றபடி. ப்ரஹ்ம வித்யையும், ப்ரஹ்மாநுபவமும் ஜ்ஞாநரூபமே யன்றோ. தேஶவிஶேஷமான தெளிவிசும்பு திருநாட்டிலே அப்ரா கருத விக்ரஹம் பெற்று பரிபூர்ணமாக ப்ரஹ்மத்தை யநுபவிப் பது இனி ஸாத்யமேயன்றி ஸித்தமன்று. ஆகையால் உத்தர த்விகம் விஷயித்விகம் என்றும் ஸாத்ய த்விகம் என்றும் கூறப் படுகிறது. இவ்வாறு நான்கு அத்யாயங்களில் பேடிகாவிபாகம்.

முதலத்யாயம் ஸமந்வயாத்யாயம் என்றும், இரண்டாமத் யாயம் அவிரோதாத்யாயமென்றும் மூன்றுமத்யாயம் ஸாதனாத் யாயமென்றும் நான்காமத்யாயம் பலாத்யாயம் என்றும் கூறப்படுகிறது.

பூர்வத்விகம்

ப்ரமேயத்வ வ்யாபக கார்யதா நிரூபிதகாரணத்வம் ப்ரஹ்ம லக்ஷணம் என்ற அர்த்தமே பூர்வத்விக ப்ரதிபாத்யமாகும் காரணத்வம் லக்ஷணமாகும்போது அது அஸம்பவ அதிவ்யாப்தி ரூப தோஷரஹிதமாய் ஸல்லக்ஷணமாய் அமையவேண்டும். ச்ருதி விப்ரதிபத்தி ப்ரயுக்த அஸம்பவ சங்கை ஏற்படும். (சிதசித் விலக்ஷண ப்ரஹ்மவஸ்துவே இல்லை—என்ற சங்கை) (லக்ஷ்யா ஸம்பவ ப்ரயுக்த லக்ஷணாஸம்பவ சங்கை என்றபடி) அதற்குப் பரி ஹாரம் முதற்பாதத்தால் செய்கிறார் வ்யாஸர். ச்ருதி விப்ரதி பத்தி ப்ரயுக்த அதிவ்யாப்தி சங்கை ஏற்படும். (ப்ரஹ்மமும் ஜகத் காரணமாயிருக்கட்டும். சேதநாசேதநங்களும் அங்ஙனமாயிடுக என்ற சங்கை) அதனைப் பரிஹரிக்கிறார் வ்யாஸர் த்ரிபாதி (மேல் மூன்று பாதங்கள்)யால் என்று பேடிகா விபாகம்.

வாதி விப்ரதிபத்தி ப்ரயுக்த அஸம்பவ அதிவ்யாப்தி ஶங்கை யேற்பட அதனை நிரஸிக்கிறார் வ்யாஸர் இரண்டாமத் யாயம் பூர்வ பாதத்வயத்தால்—

கார்யத்வம் ப்ரமேயத்வ வ்யாபகம். அதாவது எந்த ப்ரமேயமும் ப்ரஹ்ம கார்யமே என்று ஸ்தாபிக்கிறார் இரண்டாமத்யாயம் உத்தர பாதத்வயத்தால் என்றபடி.

இப்படி முதலிரண்டு அத்யாயங்களால் (பூர்வத்விகம்) சிதசித் விலக்ஷணப்ரஹ்மம் ஜகதேககாரணம் என்று அறுதியிட்டாராயிற்று.

## முதலத்யாயம்

இது ஸமந்வயாத்யாயம் எனக் கூறப்படுகிறது. வேதாந்தங்களில் ஜகத்காரண வஸ்துவைக் குறிக்கும் வாக்யங்கள் காரணவாக்யங்களாகும். அவற்றுக்கு சிதசித் விலக்ஷண ப்ரஹ்மத்திலே ஸமீசீநாந்வயத்தைக் கூறும் அத்யாயம் ஆகையால் முதலத்யாயம் ஸமந்வயாத்யாயம் என்று கூறப்படுகிறது. அதாவது காரணவாக்ய விசாரம் செய்து இவ்வாக்யங்கள் சிதசித்விலக்ஷண ப்ரஹ்மத்தையே ஜகத்காரணமாகக் கூறும், சேதந வஸ்துவையோ அசேதநவஸ்துவையோ ஜகத்காரணமாக இவ்வாக்யங்கள் கூறா என்று வ்யாஸர் அறுதியிடுகிறார் என்றபடி.

முதலத்யாயம் முதற்பாதம் அயோக வ்யவச்சேதபரம். மேல் மூன்று பாதங்கள் (த்ரிபாதீ) அந்ய யோக வ்யவச்சேத பரங்கள் என்று பேடிகாவிபாகம்.

யோகமாவது ஸம்பந்தம் — காரணத்வ ஸம்பந்தம். அயோகம் காரணத்வாஸம்பந்தம். அதனை வ்யவச்சேதம் செய்கிறது முதற்பாதம். அதாவது ப்ரஹ்மத்துக்கு ஜகத்காரணத்வம் இல்லை என்பதில்லை என்றபடி. ப்ரஹ்மம் ஜகத்காரணமே என்று முதற் பாதத்தில் ஸ்தாபிக்கப்படுகிறது என்றபடி.

ஜகத்காரணமாக ப்ரஹ்மம் என்ருெரு வஸ்து உண்டு என்று ஸ்தாபிக்கப்படுகிறது என்றவாறு.

ப்ரஹ்ம பிந்நத்துக்குக் காரணத்வமில்லை என்ற அர்த்தம் த்ரிபாதீ ஸாரமாகும். அந்யத்ர யோகத்தை வ்யவச்சேதம் செய்கிறது த்ரிபாதீ என்றபடி. ப்ரஹ்மமே ஜகத்காரணம் என்றபடி. இதஞல் ஜகத்காரணத்வரூப ப்ரஹ்ம லக்ஷணத்துக்கு அதிவ்யாப்தி ரூபதோஷமின்மை கூறப்படுகிறது.

சிதசித் விலக்ஷண ப்ரஹ்ம தத்வமே இல்லை என்று ப்ரதமபாதத்தில் பூர்வபக்ஷம். ஆகையால் நிகிலவேதாந்த வாக்யாக்ஷேபம் முதற்பாதத்தில் செய்யப்படுகிறது. இதுவே அஸம்பவ சங்கா. லக்ஷ்யாஸம்பவ ப்ரயுக்த லக்ஷணுஸம்பவ சங்கா என்பர் பெரியோர். இதனை நிரஸிக்கிருர் வ்யாஸர் முதற்பாதத்தில். சித்சிதவிலக்ஷண ப்ரஹ்மமாகிற ஜகத் காரண வஸ்து உண்டு என்று ஸ்தாபிக்கிருர் முதற்கண். ஆகையால் ப்ரதமபாதம் அஸம்பவ சங்கா பரிஹாரபரம். மேலே த்ரிபாதீ அதிவ்யாப்தி சங்கா பரிஹாரம் செய்கிறது. அதாவது அந்ய யோக வ்யவச்சேதம் செய்யப்படுகிறது த்ரிபாதியில் என்றபடி. ப்ரஹ்மம் வேதாந்த வேத்யமாகப்படும். ஆயினும் இந்த வேதாந்த வாக்ய விசேஷம் ப்ரஹ்ம பிந்நத்தையும் ஜகத் காரணமாகக் கூறுகிறதே என்று வாக்ய விசேஷத்தைக்கொண்டு ஆக்ஷேபம் விஞய, அதனைப் பரிஹரிக்கிருர் த்ரிபாதியில். அந்த வாக்ய விசேஷங்களும் சிதசித் விலக்ஷண ப்ரஹ்மபரங்களே என்று த்ரிபாதியில் நிர்ணயிக்கப்படுகிறது என்றபடி. த்ரிபாதியில் (முதலத்யாயம் நான்காவது பாதம் முதலதிகரணத்தில்) "ஆநுமாநிகமபி" என்று அபி ஶப்தப்ரயோகம் செய்கிற வ்யாஸ ஹ்ருதயம் இதுதான் என்று தெரிகிறது ஆநுமாநிகமும் (ப்ரக்ருதி) ஜகத்காரணமாக ஆகட்டும் என்று ஆக்ஷேபம் விஞய அதனை நிரஸிக்கிருர் என்றபடி. இப்படி ப்ரதம பாதத்ரிபாதீ விபாகம். இது ப்ராயிகம்.

ஜீவாதி லிங்கங்கள் அஸ்பஷ்டதரங்களாக உள்ள காரண வாக்யங்களை முதலத்யாயம் முதற்பாதத்தில் விசாரித்து, அவை அஸ்பஷ்டங்களாக உள்ள காரண வாக்யங்களை முதலத்யாயம் இரண்டாம் பாதத்தில் விசாரித்து, அவை ஸ்பஷ்டங்களாக உள்ள காரண வாக்யங்களை முதலத்யாயம் மூன்றும் பாதத்தில் விசாரித்து, அவை ஸ்பஷ்டதரங்களாகவுள்ள காரண வாக்யங்களை முதலத்யாயம் நான்காம்பாதத்தில் விசாரித்து, அவை சிதசித் பரங்களல்ல—அவை சிதசித்விலக்ஷண ப்ரஹ்ம பரங்களே யென்று ஸித்தாந்தீகரிக்கிருர் வ்யாஸர் என்றும் கூறலாம். ஆக முதலத்யாயம் 35 அதிகரணங்களில் முதற்கண் 4 அதிகரணங்கள் உபோத்காதம் என்றும், மேல் 31 அதிகரணங்களில் சிதசித்விலக்ஷண ப்ரஹ்மம் ஜகத்காரணம் என்றும் நிரூபிக்கப்படுகிறது என்று பேடிகாவிபாகம்.

முதலத்யாயம் இரண்டாம் பாதத்தில் ஜகத்து ப்ரஹ்மத்துக்குச் சரீரம் என்று கூறும் வாக்யங்களையும்,

முதலத்யாயம் மூன்றும் பாதத்தில் ஜகத்துக்கு ப்ரஹ்மம் ஆத்மா என்று கூறும் வாக்யங்களையும்,

முதலத்யாயம் நான்காம் பாதத்தில் ஸாங்க்யாதி பக்ஷ ப்ராந்தி ஜநக வாக்யங்களையும் விசாரித்து ப்ரஹ்மபரத்வ ஸ்தாபநம் செய்கிருர் என்றும் கூறலாம்.

முதலத்யாயம் முதற்பாதத்தில் சிதசித்விலக்ஷண பரம காரணபூத பரமபுருஷ நிர்ணயம். இரண்டாம் பாதத்தில் ஜகச்சரீரகத்வமும், மூன்றும் பாதத்தில் ஜகதாத்மத்வமும் கூறப்பட்டன. நான்காம் பாதத்தில் அதத்கார்யமாய் அதச்சரீரமாய் அததாத்மகமாய் ஒரு வஸ்துவும் இல்லை என்று கூறுகிருர். ப்ரஹ்மைக காரணத்வ ஸ்திரீ கரணம் நான்காம் பாதத்தில் செய்யப்படுகிறது என்றிங்ஙனே கூறுவதும் ஸாம்ப்ரதாயிகமேயாம்.

இப்படி பாதத்ரிபாதீபேடிகாவிபாகம்

## முதலத்யாயம் முதற்பாதம்

இப்பாதம் 11 அதிகரணங்கள் கொண்டது. 4+7=11 என்றும் 4+3+4=11 என்றும் கணக்கிடும்படி அமைந்து உள்ளது இப்பாதம்.

முதற்கண் நான்கு அதிகரணங்கள் (ஜிஜ்ஞாஸாதிகரண ஜந்மாத்யதிகரண ஶாஸ்த்ர யோநித்வாதிகரண ஸமந்வயாதி கரணங்கள்) உபோத்காதம்.

மேல் 7 அதிகரணங்களில் சிதசித்விலக்ஷண ப்ரஹ்மத்தை ஜகத்காரணமாக ஸ்தாபிக்கிறார் என்று பேடிகாவிபாகம்.

முதல் நான்கு அதிகரணங்கள் அமைந்த உபோத்காத ப்ரகரணத்தை இரண்டு பேடிகைகளாகப் பிரிக்கலாம்.

2+2=4 என்று கணக்கு.

வேதாந்தங்கள் ப்ரஹ்ம விஷயகப்ரதீதியைப் பிறப்பியாது என்ற சங்கையைப் பரிஹரிக்கிறது முன் அதிகரணத்வயம்.

வேதாந்தத்தால் ப்ரஹ்மப்ரதீதி ஏற்பட்டாலும் வேதாந்தங் களுக்கு ப்ரஹ்ம விஷயத்தில் தாத்பர்யமில்லை என்ற சங்கையைப் பரிஹரிக்கிறது மேல் அதிகரணத்வயம் என்று பேடிகா விபாகம்.

முதலதிகரணத்தில் லக்ஷ்யவிசார ப்ரதிஜ்ஞை செய்கிறார். இரண்டாமதிகரணத்தில் லக்ஷ்யத்துக்கு லக்ஷணத்தை விசாரிக் கிறார். மூன்றாமதிகரணத்தில் லக்ஷண விஷயகசங்கையைப் பரிஹரிக்கிறார். நான்காமதிகரணத்தில் லக்ஷ்யவிஷயக சங்கையைப் பரிஹரிக்கிறார் என்று சதுஸ்ஸூத்ரீ ப்ரகரணம் உபோத்காதம். இப்படி லக்ஷ்ய விசாரப்ரதிஜ்ஞை செய்த வ்யாஸர் மேலே லக்ஷ்யமான ப்ரஹ்மத்தை விசாரிக்கிறார்.

மேல் 7 அதிகரணங்களையும் 2+5=7 என்றும் 3+4=7 என்றும் இரண்டு விதமாகப் பிரிக்கலாம்.

(A) முதல் இரண்டு அதிகரணங்களில், (ஈக்ஷத்யதிகரண ஆநந்தமயாதிகரணங்கள்) ஶாஸ்த்ரயோநித்வாதிகரண ஸமந்வயாதிகரண ஸித்தமான அநுமாநாத்யகம்ய து:காஸம் ஸ்பருஷ்ட ப்ரஹ்மம், ப்ரக்ருதி புருஷவிலக்ஷணம் என்று ஸ்தாபிக்கப்படுகிறது. அநுமாநகம்ய து:கஸம்ஸ்ப்ருஷ்டர் களன்றோ ப்ரக்ருதிபுருஷர்கள். மேல் 5 அதிகரணங்களால் ப்ரகருதி புருஷ விஶேஷ வைலக்ஷண்யம் ஸ்தாபிக்கப்டுகிறது என்று ஓர் பேடிகா விபாகம்.

(B) அதவா:—முதற்கண் மூன்று அதிகரணங்களால் (ஈக்ஷத்யதிகரண ஆநந்தமயாதிகரண அந்தரதிகரணங்கள்) ஸதாதி ஸாமாந்ய ஶப்த கடிதங்களான காரணவாக்யங்கள் ப்ரக்ருதி புருஷ விலக்ஷண காரண ப்ரஹ்ம பரங்களாக அறுதி யிடப்படுகின்றன.

மேலே ஆகாசாதிகரணம் தொடங்கி 4 அதிகரணங்களில் ஆகாச ப்ராணாதி விசேஷ சப்த கடித வாக்யங்கள் சிதசித் விலக்ஷண ப்ரஹ்மப்ரங்களாக ஸ்தாபிக்கப்படுகின்றன.

அதவா:—முதல் மூன்று அதிகரணங்களில் காரண வாக்யங்களால் ஏற்படும் ஸந்தேஹம் பரிஹரிக்கப்படுகிறது. அதாவது ஸம்ஶய ஜநகவாக்யங்களுக்கு அர்த்த நிர்ணயம் செய்யப்படுகிறது. என்றபடி-மேலே நான்கு அதிகரணங்களில் காரணவாக்யங்களால் ஏற்படும் விப்ரீதஜ்ஞாநம் பரிஹரிக்கப் படுகிறது. அதாவது விபர்யஜநக வாக்யங்களுக்கு ஸதர்த்த ஸ்தாபநம் செய்யப்படுகிறது என்றபடி.

ஈக்ஷத்யதிகரணத்தில் அசித்விலக்ஷண ப்ரஹ்மம் ஜகத் காரணமென்றும், ஆநந்தமயாதிகரணத்தில் சித்விலக்ஷண ப்ரஹ்மம் ஜகத்காரணமென்றும் அந்தரதிகரணத்தில் திவ்யமங் கள விக்ரஹவிசிஷ்டம் ப்ரஹ்மம் என்றும் நிர்ணயிக்கப்படுகிறது.

ஆநந்தமயாதிகரணத்தில் முதல் ஸூத்ரத்தால் ப்ரஹ்மம் ஜீவஸாமாந்ய விலக்ஷணமென்றும், ஐந்தாவது ஸூத்ரத்தால் ப்ரஹ்மம் முக்தஜீவ விலக்ஷணமென்றும் கூறுகிருர். ஈக்ஷத்யதிகரணத்தில் ப்ரஹ்மத்தை 'தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்' என்று மோக்ஷோபாயமாகவும், ஆநந்தமயாதிகரணத்தில் ப்ரஹ்மம் முக்தப்ராப்யம் பரமாநந்தமயமென்றும் ஸ்தாபிக்கிருர் வ்யாஸர். ஈக்ஷத்யதிகரண பூர்வபக்ஷியைச் சேர்ந்தவர்களை காரணத்வாதிகரண (1—4—4)த்திலும், ஆநந்தமயாதிகரண பூர்வபக்ஷியைச் சேர்ந்தவர்களை ஜகத்வாசித்வாதிகரண (1—4—5)த்திலும் நிரஸிக்கிருர் வ்யாஸர்.

ஈக்ஷத்யதிகரணத்தில் ப்ரஹ்மம் ஸர்வஜ்ஞமென்றும் ஆநந்தமயாதிகரணத்தில் ப்ரஹ்மம் ப்ரசுராநந்த விசிஷ்டமென்றும் அந்தரதிகரணத்தில் ப்ரஹ்மம் அமலம் என்றும் ஸ்த்தாபித்த ஸ்ரீவேதவ்யாஸர் ப்ரஹ்மம் உபயலிங்கவிஶிஷ்டம் என்று ஸ்த்தாபித்தருளினுராயிற்று. பரமாத்மாஸாதாரணம் உபயலிங்கம்—அகிலஹேயப்ரத்யநீகத்வ கல்யாணைகதாநத்வங்கள். இவை ப்ரஹ்மத்துக்கஸாதாரணங்கள். சேதநாசேதநங்களுக்கு அஸம்பாவிதங்கள். ஆகையிறே ப்ரஹ்மம் நிகிலசேதநாசேதந விலக்ஷணம் என்னப்படுகிறது.

மேல் நான்கு அதிகரணங்களை (ஆகாசாதிகரணுதி சதுஷ்டயம்) இரண்டு பேடிகைகளாகப் பிரிக்கலாம். 2+2=4 என்று கொள்க. ஆகாசப்ராணுதிகரணங்களிரண்டிலும் ஆகாச ப்ராண சப்தங்களுக்கு ரூட்யர்த்தத்தை விட்டு யௌகிகார்த்தத்தைக்கொண்டு தத்தச் சப்தங்கள் விலக்ஷணப்ரஹ்ம பரங்களாக நிர்ணீதங்கள். ஜ்யோதிரதிகரண இந்த்ர ப்ராணுதிகரணங்களிரண்டிலும் தத்தச்சப்தங்களுக்கு ரூடிபங்கமில்லாமலே தத்தத்ரூடார்த்த விஶிஷ்ட ப்ரஹ்மபரங்களாக அர்த்த நிர்ணயம் செய்யப்படுகிறது.

அதவா:—ஆகாச ப்ராணாதிகரணங்களிரண்டிலும் காரண வாக்யகத ஆகாச ப்ராண சப்தங்களுக்கு விலக்ஷண ப்ரஹ்ம பரத்வம் ஸ்தாபிதம்.

ஜ்யோதிரதிகரண இந்த்ரப்ராணாதிகரணங்களில் அப்படியன்று. ஸாக்ஷாத்காரண வாக்யங்கள் அங்கு விசாரிக்கப்படவில்லை. காரணத்வ வ்யாப்தலிங்கங்கள் நிரதிசய தீப்திமத்வம் முமுக்ஷூபாஸ்யத்வம். இவையுள்ள விடத்தேயே காரணத்வம் உள்ளது என்றபடி. தாத்ருசலிங்க ப்ரதிபாதக வாக்யங்களில் உள்ள ஜ்யோதிச்சப்த இந்த்ர சப்தங்கள் விலக்ஷண ப்ரஹ்மபரங்களாக ஸ்தாபிக்கப்படுகின்றன. இங்கே இந்த்ர சப்தம் என்றது இந்த்ரன் தன்னைச்சொன்ன 'மாம்' என்ற சப்தம் என்றபடி.

அதவா:—A. ஆகாசாதிகரணத்தில் வஸ்த்வந்தர ப்ரஸித்தமான ஆகாச சப்தத்தைக் கொண்டு (சப்தவிசேஷத்தைக் கொண்டு என்றபடி) அசேதநமே ஜகத்காரணமென்று ஆக்ஷேபம் விளைய, அர்த்த விரோதத்தைக்காட்டி ஆகாச சப்தம் அசித் விலக்ஷண ப்ரஹ்மபரம் என்கிறார்.

B. ப்ராணாதிகரணத்தில் அர்த்தவிரோதமின்மையைக் காட்டி அசேதநமே ஜகத்காரணம் என்கிறார்கள் பூர்வபக்ஷிகள். அதனையும் அர்த்தவிரோத ப்ரதர்சனத்தைக்காட்டிப் பரிஹரித்தார் வ்யாஸர்.

C. ஜ்யோதிரதிகரணத்தில் விரோதிலிங்கமின்மை, அல்பாநுகூலலிங்க ஸத்பாவம் இவைகளைக் கொண்டு ஆக்ஷேபம் விளைந்தது. அதனை 'வாக்யத்தில் விரோதமில்லாவிடினும் உபக்ரம வாக்யத்தில் விரோதம் உள்ளது' என்று கூறிப் பரிஹரித்தார்.

D. இந்த்ரப்ராணாதிகரணத்தில் உபக்ரமத்திலேயே விரோதமில்லாமையைக்கூறி பூர்வபக்ஷி ஆக்ஷேபிக்க, அதனை அர்த்த விரோதத்தைக்கூறிப் பரிஹரிக்கிறார் வ்யாஸர்,

இப்படி சிதசித்விலக்ஷண ஸத்பாவத்தை ஸ்த்தாபித்து, வ்யாஸர், முதற்பாதத்தில் லக்ஷ்யாஸம்பவ ப்ரயுக்த லக்ஷணா ஸம்புவ சங்கையைப் பரிஹரித்தார் என்றதாயிற்று.

## முதலத்யாயம் இரண்டாம்பாதம்

இப்பாதத்தில் அதிகரணங்கள் 6. இவற்றை 3+3=6 என்று கொள்க.

முதல் மூன்று அதிகரணங்களில் உபாஸக ஹ்ருதய ரூப பரிமித தேஶ பரிச்சிந்ந பரமாத்மவிசாரமும், மேல் மூன்று அதிகரணங்களில் விபுலதேசஸ்த்தித பரமாத்ம விசாரமும் செய்கிறார் வ்யாஸர் என்று பேடிகா விபாகம்.

ஆறு அதிகரணங்களுக்கும் ஸாதாரணார்த்தம்:—ப்ரஹ்ம ஆத்ம புருஷஶப்தங்கள் சிதசித்விலக்ஷண பரமாத்ம பரங்களென்று ஸ்த்தாபிப்பதேயாகும்.

---

## முதலத்யாயம் மூன்றாம்பாதம்

இப்பாதத்தில் அதிகரணங்கள் 10:—7+3=10 என்று கொள்க.

7 அதிகரணங்கள் ஸாக்ஷாத் ஸங்கதங்கள். இடையில் மூன்றும் (தேவதாதிகரண மத்வதிகரண அபசூத்ராதிகரணங்கள்) ப்ராஸங்கிகங்கள்,

ஆறாவது அதிகரணமான ப்ரமிதாதிகரணத்தில் கூறப்பட்ட ஸர்வேச்வரத்வத்தை உபபாதிக்கிறது மோக்ஷப்ரதத்வத்தைக் கூறும் முகத்தாலே பத்தாவது அதிகரணமான அர்த்தாந்தரத்வ வ்யபதேசாதிகரணம். ஆகையால் ஆறாவது

அதிகரணத்துக்கும் பத்தாவது அதிகரணத்துக்கும் ஸாக்ஷாத் ஸங்கதி. 7, 8, 9 இம்மூன்று அதிகரணங்களும் ப்ராஸங்கிகம். பத்தாவது அதிகரணத்தில் மூன்ருவது ஸூத்ரத்தால் பரமாத்மா ஜீவஸாமாந்ய விலக்ஷணன் என்றும், நான்காவது ஸூத்ரத்தால் பரமாத்மா முக்தஜீவ விலக்ஷணன் என்றும் கூறப்பட்டுள்ளது உற்று நோக்கத்தக்கது.

ப்ராஸங்கிகங்களான மூன்று அதிகரணங்களிலும் பகவத் குணங்களே கூறப்பட்டுள்ளன. ஶாரீரகமே ப்ரஹ்ம மீமாம்ஸை யன்ரே. ஆகையால் எவ்விடத்திலும் அவன் குணம் கூறப் பட்டதேயாம். தேவாதீனுமப்யுபாஸ்யத்வம் தேவதாதிகரணத் திலும், வஸுமுக தேவாநாமபி ஸ்வாத்மத்வேந உபாஸ்யத்வம் மத்வதிகரணத்திலும், சூத்ராதீனுமநுபாஸ்யத்வம் அபசூத்ராதி கரணத்திலும் கூறப்பட்டுள்ளன என்று கொள்க.

தேவதாதி கரணத்தில் தேவாதிகளுக்கு உபாஸ்யன் என்று பகவான் கூறப்பட்டுள்ளான். தேவாதிசப்தத்தில் ஆதிபத க்ராஹ்யர்கள். அஸுர ராக்ஷஸ கந்தர்வ பிசாசங்கள் என்பர் பெரியோர். ஸ்ரீப்ரஹ்லாதாதிகள் அஸுரர்கள், ஸ்ரீ விபீஷணு திகள் ராக்ஷஸர்கள், சித்ரஸேநாதிகள் கந்தர்வர்கள், கண்டா காணுதிகள் பிசாசங்கள். இவர்களுக்கும் உபாஸ்யனுகிருன் பரமாத்மா என்றபடி.

---

## முதலத்யாயம் நான்காம்பாதம்

இப்பாதத்தில் அதிகரணங்கள் 8:—6+2=8 என்று கொள்க.

முதல் ஆறு அதிகரணங்களில் ஸாங்க்யபக்ஷ ப்ரதிக்ஷேப மும், மேல் இரண்டு அதிகரணங்களிள் யோகபக்ஷ ப்ரதிக்ஷேப மும் என்று பேடிகா விபாகம்.

காரணத்வம் ப்ராதேசிகமேயன்றி ஸார்வத்ரிகமன்று என்ற வாதத்தை மேலிரண்டு பாதங்களால் நிரஸிக்கிறார் என்றும் கொள்ளலாம்.

அதாவது காரண விஷயத்தில் பரோக்த தோஷங்களை முதலிரண்டு பாதங்களால் பரிஹரித்து, கார்ய விஷயத்தில் பரோக்த தோஷங்களை மேலிரண்டு பாதங்களால் பரிஹரிக்கிறார் என்றபடி.

---

### இரண்டாமத்யாயம் முதலிரண்டு பாதங்கள்

ஸ்பக்ஷத்தில் பரர்களாலே கூறப்பட்ட தோஷங்களைப் பரிஹரிக்கிறார் முதற்பாதத்தில். பரபக்ஷங்களுக்குத்தான் தோஷம் கூறுகிறார் இரண்டாம் பாதத்தில்.

ஸ்வபக்ஷஸ்தாபநம் முதற் பாதத்தில், பரபக்ஷநிராகரணம் இரண்டாம் பாதத்தில் என்றபடி.

முதற் பாதத்தில் ஸ்ம்ருதியுக்தி விரோத பரிஹாரமும், இரண்டாம் பாதத்தில் சாஸ்த்ராந்தர விரோத பரிஹாரமும் செய்யப்படுவதாகக் கொள்க.

முதற் பாதத்தில் ஸ்ம்ருதி ந்யாயங்களால் வேதாந்தங்களுக்கு வரும்படும் பாதம் தவிர்க்கப்படுகிறது. இரண்டாம் பாதத்தில் சாரீரக ந்யாயத்தாலே பரபக்ஷங்களுக்கு பாதம் கூறப்படுகிறது என்றபடி.

---

### இரண்டாமத்யாயம் முதற்பாதம் (ஸ்ம்ருதிபாதம்)

இப்பாதத்தில் அதிகரணங்கள் 10. இவற்றை 2+8=10 என்று பிரித்துக்கொள்க.

முதலிரண்டு அதிகரணங்களில் ஸ்ம்ருதி விசாரம் செய்து மேலெட்டு அதிகரணங்களில் யுக்திவிசாரம் புரிகிறார் வ்யாஸர். ஸ்ம்ருத்யுபக்ரமமான படியால் இது ஸ்ம்ருதி பாதம் எனப்படுகிறது. ஸ்ம்ருதி விசார ப்ரதாநம் இப்பாதம். முதலிரண்டு அதிகரணங்களில் ஸ்ம்ருதி விரோத பரிஹாரத்தையும் மேலெட்டு அதிகரணங்களில் யுக்திவிரோத பரிஹாரத்தையும் செய்தவற்றால் பலித்தது ப்ரஹ்மத்தினுடைய ஜகதுபாதாநத்வமும் ஜகந்நிமித்தத்வமும் என்பர் பெரியோர். உபஸம்ஹாரதர்சந ப்ரயோஜநவத்வாதிகரணங்களில் (8, 10) நிமித்தத்வ ஸ்த்தாபநம். சிஷ்டாபரிக்ரஹாதிகரணத்திலும் (4) போக்த்ராபத்த்யதிகரணத்திலும் (5) உபயஸ்த்தாபநம். மற்ற (1, 2, 3, 6, 7, 9) அதிகரணங்களில் உபாதாநத்வ ஸ்த்தாபநம் என்று கண்டுகொள்க.

முதலாறு அதிகரணங்களில் ப்ரஹ்மத்தினுடைய ஜகதுபாதாநத்வத்தில் விரோத பரிஹாரமும், மேல் நான்கு அதிகரணங்களில் ப்ரஹ்மத்தினுடைய ஜகந்நிமித்தத்வத்தில் விரோதபரிஹாரமும் என்றும் பேடிகாவிபாகம் கொள்ளலாம்.

---

## இரண்டாமத்யாயம் இரண்டாம்பாதம் (தர்கபாதம்)

இப்பாதத்தில் அதிகரணங்கள் 8. 1+6+1=8 என்று இவற்றைப் பிரிக்கலாம்.

முதலதிகரணத்தில் ப்ரதாந காரணவாதியான ஸாங்க்யனை நிரஸித்து மேலாறு அதிகரணங்களில் பரமாணு காரணவாதிகளான வைசேஷிக பௌத்த ஜைந சைவர்களை நிரஸித்து எட்டாவது அதிகரணத்தில் சிதசித்விலக்ஷண ப்ரஹ்மத்தினுடைய ஜகதேக காரணத்வத்தை ப்ரதிபாதிக்கிற ஸ்ரீபாஞ்சராத்ரத்தை பரமப்ரமாணம் என்று ஸ்தாபிக்கிறார் பஞ்சம வேதமாகிய மஹா பாரதத்தையருளிய வ்யாஸர் என்று கொள்க.

இப் பாதஸூத்ரங்கள் நஞ் கடிதங்களாக வமைந்துள்ளன. இதுகொண்டே இப்பாதம் பரபக்ஷ ப்ரதிக்ஷேபம் என்று கொள்ளலாம்.

7+1=8 என்று பிரிக்கலாம். ஏழு அதிகரணங்களில் பரமத கண்டநம் செய்த வ்யாஸர், எட்டாமதிகரணத்தில் ஸ்ரீ பாஞ்சராத்ர ப்ராமாண்யத்தை ஸ்தாபித்து அதுதன்னை பூஷிக்கிறுர் என்றபடி.

முதலதிகரணத்தில் ஸாங்க்யமதமும் இரண்டாமதிகரணத்தில் வைசேஷிக மதமும் கண்டிக்கப்படுகின்றன.

த்ரவ்யம் அவஸ்த்தை இரண்டும் நித்யங்கள் என்பர் ஸாங்க்யர். இரண்டும் அநித்யங்கள் என்பர் வைசேஷிகர்.

ஈஶ்வராநதிஷ்டித ப்ரதான காரண வாதி ஸாங்க்யர்.

நிமித்தமாத்ர ஈஶ்வராதிஷ்டித பரமாணுகாரணவாதீ வைசேஷிகர்.

பௌத்தாதிகளும் பரமாணு காரணவாதிகளேயாயினும் அவர்களுக்கு முன் வைசேஷிகர்களை நிர்தேசித்தது, இவன் வேதகுத்ருஷ்டி அவர்கள் வேதபாஹ்யர்கள் என்று கொண்டு, பாசுபதாதிகளில் பரமாணு காரணவாதிகள் ப்ரதாந காரண வாதிகள் என்று விபாகமிருந்தாலும் அவர்களெல்லோருமே வேதபாஹ்யர்கள்.

பாசுபதாதி கரணத்தில் முதல் ஸூத்ரத்தால் அந்த மதத்துக்கு ச்ருதிமூலத்வமில்லையென்றும், மேல் மூன்று ஸூத்ரங்களால் அதற்கு அநுமாந மூலத்வமுமில்லை என்கிறுர் வேதவ்யாஸர்.

பௌத்த நிராகரண ப்ரகரணத்தில் 'நாபாவ: உபலப்தே:' (2-2-27) என்று ஜகத்து இல்லையென்பது இல்லை என்று கூறும் முகத்தாலே வ்யாஸர் ப்ரச்சந்ந பௌத்தர்களை (அத்வைதிகள்) யும் நிரஸித்தாராகிறார்.

இதேபோன்று 'வைதர்ம்யாச்ச ந ஸ்வப்நாதிவத்' (2-2-28) என்று ஸ்வாப்நார்த்த வைஷம்ய ப்ரதர்சநமுகத்தாலே ஜகத் ஸத்யத்வத்தைக் கூறுகிறாராயிற்று வ்யாஸர். இதுவும் ம்ருஷாவாதிமத விபரீதமிறே.

இப்பாதத்தில் ஸாங்க்யாதி மதங்களுக்கு வேத ப்ரத்யர்தித்வமில்லை யென்கிறார் வ்யாஸர்.

ஸாங்க்யாதி மதங்கள் வேத விருத்தார்த்த ப்ரதிபாதகங்கள் ஆகையால் வேதத்துக்கு எதிரே நிற்கவியலா என்றும், ஸ்ரீபாஞ்சராத்ரம் வேதாநுகுண வசநமாகையாலே வேதவிரோதித்வமே யதற்கு இல்லை யென்றும் வ்யாஸர் திருவுள்ளம். பஞ்சமவேதமான மஹா பாரதத்திலே ஸ்ரீபாஞ்சராத்ரத்தை மிகவும் கொண்டாடுகின்ற ஸ்ரீவ்யாஸர், சாரீரகத்திலே அதனைக் கண்டிக்க ப்ரஸக்தியில்லை யென்றவாறு.

இப்படி ப்ரஹ்மம் ஜகதேககாரணம் என்று ஸ்தாபித்தபடி;

---

இரண்டாமத்யாயம் மூன்றுவது பாதம் (வியத்பாதம்)

ஆதிமுதல் இவ்வளவும்வர ஆறு பாதங்களால் ப்ரஹ்மத்தினுடைய காரணத்வம் உக்தம். இனி மேலிரண்டு பாதங்களால் ஜகத்தினுடைய கார்யத்வம் உச்யதே.

இந்த பாதத்திலும் அடுத்த பாதத்திலும் ஜகத்தினுடைய ப்ரஹ்மகார்யத்வம் ஸ்த்திரீகரிக்கப்படுகிறது என்றபடி.

ஸர்வம் நித்யம் என்கிறுன் ஸாங்க்யன். ஸர்வம் அநித்யம் என்கிறுன் பௌத்தன். ஸர்வம் நித்யாநித்யம் என்கிறுன் ஜைனன். நித்யா நித்யங்களை மாறுடிக் கூறுகிறுன் வைசேஷிகன். இந்நால்வர் பக்ஷங்களையும் நிரஸித்து வ்யாஸர் ப்ரஹ்மம் காரணமேயென்றும் ஜகத்து தத்கார்யமே என்றும் ஸ்த்தாபிக்கிறுர். இதிறே வைதிக மதம். அசித்துக்கு ப்ரஹ்மகார்யத்வம் ஸ்வரூபாந்யதா பாவமென்றும், சித்துக்கு ப்ரஹ்மகார்யத்வம் ஸ்வபாவாந்யதா பாவமென்றும் கொள்ளவேண்டும்.

இப்பாதத்தில் அதிகரணங்கள் ஏழு. இவற்றை 3+4=7 என்று பிரித்துக் கொள்க.

முதல் மூன்று அதிகரணங்களில் ஆகாசாதிகளுக்கும் ஜீவர்களுக்கும் ப்ரஹ்ம கார்யத்வத்தைக் கூறுகிறுர். இது பாத ப்ரதாநார்த்தம். மேல் நான்கு அதிகரணங்களில் ஜீவஸ்வரூப சோதநம் செய்கிறுர். இவை நான்கும் இப்பாதத்தில் ப்ராஸங்கிகங்களாகும். இங்கே ஜீவனே ஜ்ஞாதாவென்று கூறும் வ்யாஸர் அவனுடைய ஜ்ஞாத்ருத்வத்தை யிசையாத மாயாவாதிகளையும், நித்ய ஜ்ஞாதருத்வத்தை விசையாத நையாயிகர்களையும் நிரஸித்தாரென்பது குறிக்கொள்ளத் தக்கது.

---

### இரண்டாமத்யாயம் நான்காம்பாதம் (ப்ராணபாதம்)

இப்பாதத்தில் இந்த்ரியங்கள் ப்ரஹ்ம கார்யங்கள் என்று அறுதியிடப்படுகிறது.

இப்பாதத்தில் அதிகரணங்கள் எட்டு. இவற்றை 1+6+1=8 என்று பிரித்துக்கொள்க.

முதலதிகரணமும் சரமாதிகரணமும் இப்பாதத்தில் ஸாக்ஷாத்ஸங்கதங்கள். இடையே ஆறு அதிகரணங்களும் ப்ராஸங்கிகங்களென்று கொள்க.

வியததிகரண ந்யாயப்படி ப்ராணோத்பத்த்யதிகரணத்திலும் தேஜோऽதிகரண ந்யாயப்படி ஸம்ஜ்ஞாமூர்த்தி க்லுப்த்யதிகரணத்திலும் அர்த்த நிர்ணயம் செய்கிறார் வ்யாஸர்.

வியததிகரணம் தொடங்கி 14 அதிகரணங்களில் ஸமஷ்டி ஸ்ருஷ்டியைக்கூறி ஸம்ஜ்ஞாமூர்த்தி அதிகரணத்தில் (15 வியததிகரணம்தொடங்கி, 8 ப்ராணோத்பத்த்யதிகரணம் தொடங்கி) வ்யஷ்டி ஸ்ருஷ்டி நிரூபிக்கப்படுகிறது என்ற பேதம் காண்க. ஆக ஸமஷ்டி வ்யஷ்டி ஸ்ருஷ்டிகளுக்கும் ஸ்ரீமந் நாராயணனே காரணபூதன் என்று கூறப்பட்டது.

இவ்வாறு முதலத்யாயத்தில் கூறப்பட்ட ப்ரஹ்மத்தினுடைய ஸர்வகாரணத்வத்தை இரண்டாமத்யாயத்தில் ஸ்த்திரீகரணம் செய்தார் ஸ்ரீவேதவ்யாஸர் என்று தேறிய பொருள்.

முதலத்யாயம் ஸமந்வயாத்யாயம், இரண்டாமத்யாயம் அவிரோதாத்யாயமிறே.

இவ்வளவால் பூர்வத்விகார்த்தம் நிரூபிதம்.

### உத்தரத்விகம்

ப்ரஹ்மோபாஸநத்தையும் அதடியாக விளையும் மோக்ஷானந்தத்தையும் இவ்வுத்தர த்விகத்தால் கூறுகிறார் ஸ்ரீவ்யாஸர்.

### மூன்றாமத்யாயம்

இவ்வத்யாயம் நான்கு பாதங்களோடு கூடியது. மூன்றாம் பாதத்தில் உபாஸநத்தை விசாரிக்கப்புகுகிற வ்யாஸர், அதற்குறுப்பாக இதர வைராக்யத்துக்காக ஜீவதோஷங்களை முதற் பாதத்தாலும், பகவத் த்ருஷ்ணையை ஏற்பட அவன் குணங்களை இரண்டாம் பாதத்தாலும், ப்ரஹ்மவித்யைக்கு அங்கமான கர்மத்தை நான்காம்பாதத்தாலும் விசாரிக்கிறார்.

இப்படி பாதவிபாகம் இருக்கும்படி.

## மூன்ருமத்யாயம் முதற்பாதம் (வைராக்யபாதம்)

இப்பாதத்தில் ஜீவனுடைய ஜாக்ரதாதிதசைகளில உள்ள தோஷங்களைப் பூர்ணமாகக் கூறுகிருர். தோஷதர்சநம் ஏற்பட வைராக்யம் பிறக்குமிறே.

இப்பாதத்தில் ஜீவனுக்கு ஸம்ஸார ஸம்பந்தத்தையும் ஸம்ஸார பாரமார்த்த்யத்தையும் கூறுகிற ஸூத்ரகாரர் இவற்றை மறுத்த ஸாங்க்ய மாயாவாதிகளையும் நிரஸித்தாராயிற்று.

இப்பாதத்தில் அதிகரணங்கள் 6. 1+5=6 என்று பிரித்துக்கொள்க. முதலதிகரணத்தில் ஆரோஹணுவச்சேதோ தோஷங்களையும் மற்றைய 5 அதிகரணங்களில் அவரோஹணுவச்சேதோ தோஷங்களையும் கூறுகிருர்.

இப்பாதம் ஸம்ஸாரி ஜீவதோஷபரம்.

---

## மூன்ரும் அத்யாயம் இரண்டாம் பாதம் (உபயலிங்கபாதம்)

சாரீரகத்தில் முதலிரண்டு அத்யாயங்களில் ஜகதேக காரணமாகக் கூறப்பட்ட ப்ரஹ்மம் இந்த மூன்ருமத்யாயத்தில் மோக்ஷஸாதநமாகக் கூறப்படுகிறது. ஸித்தோபாயமிறே ப்ரஹ்மம். ஆக கீழே காரணமாகவும் இங்கு ஸாதநமாகவும் கூறப்பட்டபடியால் பௌநருக்த்ய தோஷமில்லையாம். ஸாத்யோபாயமிறே ப்ரஹ்மோபாஸநம். அதற்கு உபயுக்தம் ஜீவதோஷ தர்சநஜநித வைராக்யமும் பகவத் குணதர்சநஜநித த்ருஷ்ணையுமாகும். கீழே இதர வைராக்ய ஸித்த்யர்த்தம் இதர தோஷங்களைக்கூறிய வ்யாஸர் இப்பாதத்தில் பரமாத்மராக ஸித்த்யர்த்தம் பரமாத்ம குணங்களைப் பூர்ணமாகக் கூறுகிருர்,

பரப்ரஹ்மத்துக்கு உபயலிங்கத்வமாவது நிர்தோஷத்வமும் கல்யாணகதாநத்வமுமாகும். இதனைக் கூறும் இப்பாதம் உபயலிங்கபாதமிறே. ப்ரஹ்மம் நிர்தோஷம் கல்யாண குணாகரம் என்று கூறும் வ்யாஸர், ப்ரஹ்மம் நிர்தோஷம் நிர்குணம் நிர்வி ஶேஷம் என்று கூறுவார் கூற்றை அடியறுத்தாராயிற்று.

இப்பாதத்தில் அதிகரணங்கள் 8. 4+4=8 என்று பிரித்துக் கொள்க.

முதல் நான்கு அதிகரணங்களில் ஜீவனுடைய ஸ்வப்நஸுஷுப்த்யாதி தசைகளில் தோஷங்களையும், மேலில் அதிகரணங்கள் நான்கிலும் பரமாத்ம கல்யாணகுணங்களையும் கூறுகிறார். பரமாத்ம குணபரமான இந்த இரண்டாம் பாதத்தில ஜீவ தோஷங்களைக் கூறுவது ப்ரதானமன்று. அந்த நான்கு அதிகரணங்களிலும் பரமாத்ம குணங்களே கூறப்பட்டனவாகக் கொள்ளலாம் என்பர் பெரியோர்.

ஸ்வாப்நபதார்த்த ஸ்ரஷ்ட்ருத்வாநுகுண குணங்கள் கூறப் பட்டதாகக் கொள்ளுவது யுக்தம்.

ப்ரதமபாதசேஷம் த்விதீயபாத ஆத்யாதிகரண சதுஷ்டயம் என்று ஸ்ரீஸேநேஶ்வராசார்யர் திருவுள்ளம்.

இப்பாதத்தில் மேல் நான்கு அதிகரணங்களை இரு பேடிகை களாகப் பிரிக்கலாம்.

முன்னிரண்டு (5, 6) அதிகரணங்களில் பரமாத்மாவுக்கு தத்தத்ஸ்த்தாந ஸம்பந்தத்தால் தோஷம் தட்டாது ஸமஸ்த கல்யாணகுண பரிபூர்ணமே என்றும். ஜகத் ப்ரஹ்மைக்ய வசந ஸங்கத தோஷமுமில்லை. ப்ரஹ்மம் கல்யாணகுண பரிபூர்ணமே என்றும் கூறுகிறபடி.

மேலிரண்டு (7, 8) அதிகரணங்களில் பகவானுக்கு ஸர்வஸ்மாத் பரத்வத்தையும் பரமௌதார்யத்தையும் கூறி உபாஸ்யத்வத்தை ஸ்த்திரீகரிக்கிருர். பரத்வபூர்த்தியும் ஔதார்யபூர்த்தியுமில்லையாகில் உபாஸ்யத்வ பூர்த்தியில்லையிறே.

உபயலிங்காதிகரணத்தில் முதல் ஸூத்ரத்தால் ப்ரஹ்மம் உபயலிங்கவிசிஷ்டமென்றும், பதினொராம் ஸூத்ரத்தால் ப்ரஹ்மம் உபயவிபூதி விசிஷ்டமென்றும் கூறுகிருர்.

உபயலிங்க விசிஷ்டம் உபயவிபூதி விசிஷ்டம் ப்ரஹ்மம் என்பதே வேதாந்தபக்ஷம் என்ருர் பரம வைதிகரான வ்யாஸர்.

பராதிகரணத்தில் பரத்வமும் பலாதிகரணத்தில் ஔதார்யமும் கூறப்பட்டது. ஸகலாதிகாரிகளுக்கும் ப்ரயோஜநத்தை யுத்தேசித்தே ப்ரவ்ருத்தியுள்ளது. ப்ரயோஜநமும் பலப்ரதனை யொழியப்பெற விரகில்லை. பலப்ரதனுக்கு பலப்ரதத்வம் பரத்வ ஔதார்யங்கள் இல்லையேல் கூடாது. பரத்வ ஔதார்யங்கள் இரண்டும் உபயலிங்க விசிஷ்டனான நாராயணனுக்கேயன்றி மற்றொருவருக்கு இல்லையிறே.

கர்மகாண்டோக்த ஸர்வகர்ம ஸமாராத்யனும் தேவதாகாண்டோக்த ஸர்வதேவதாந்தராத்மாவாய் ப்ரஹ்மசப்தவாச்யனுமான நாராயணன் சித்சித்விலக்ஷண ஜகதேககாரணபூதன். உபாயோபேயபூதன் பரன் என்று இவ்வளவால் கூறி பலாதிகரணத்தில் அவனே ஸகல பலபரதன் என்கிருர் ஸ்ரீவேத வ்யாஸ பகவான்.

---

மூன்றாமத்யாயம் மூன்றாம் பாதம்

(குணோபஸம்ஹார பாதம்)

கீழே பத்து பாதங்களால் தத்வநிரூபணம் செய்தார். இனி மேல் ஆறு பாதங்களால் அனுஷ்டான நிரூபணம் செய்கிருர். என்று பேடிகா விபாகம்.

தத்வவிவேக ஜ்ஞாநத்தைப் பிறப்பித்த வ்யாஸர் இனி தத்வஜ்ஞாநாநுகுண ஹிதாசரணத்தைக் கூறுகிறுர் என்றபடி.

ஆக 10+6=16 பாதங்கள் என்று பேடிகாவிபாகம்.

ஹிதத்தை முன்னிரண்டு பாதங்களாலும் தத்பலத்தை மேல் நான்கு பாதங்களாலும் கூறுகிறுர் என்றபடி.

உபாயத்தைக் கூறுகிறது இம்முன்ரும் பாதம். ததங்கமான கர்மத்தைக் கூறுகிறது நான்காம் பாதம் என்ற விபாகம் காண்க.

குணோபஸம்ஹார பாதமென்றே இந்த மூன்ரும் பாதத்துக்கு வ்யவஹாரம். ப்ரஹ்மம் நிர்குணம் என்று கூறும் குண தஸ்கரர்களுக்கு இப்பாதம் ஸர்வாத்மநா துர்க்கடம். ஸ்ரீபராசர ஸ்ரீபாராசர்ய ஸ்ரீபராங்குச ஸ்ரீராமாநுஜாதிகள் குணபக்ஷபாதிகளிறே.

பல உபநிஷத்துக்களிலே கூறப்பட்ட வித்யைகளை விசாரித்து, வித்யைகளுக்கு ஐக்யம் தேறுமாஞல், ஓரிடத்தில் கூறப் படாத மற்ருேரிடத்தில் கூறப்பட்ட குணங்களை உபஸம்ஹரிக்க வேணும் என்று ஸ்தாபிக்கிருர் இப்பாதத்தில் ஸ்ரீவ்யாஸர். குணோபஸம்ஹார பாதமேயன்றி குணஸம்ஹார பாதமன்றிது.

இப்பாதத்தில் அதிகரணங்கள் 26. 19ஆம் அதிகரணத்தில் ஸர்வபரவித்யோபாஸ்யன் நாராயணனே என்று ஸ்தாபிக்கிருர் ஸ்ரீவ்யாஸர் ஸ்ரீவைஷ்ணவாக்ரேஸரர்.

---

### மூன்ருமத்யாயம் நான்காம் பாதம் (அங்கபாதம்)

இவ்வத்யாயம் முதற்பாதத்தில் பலத்வாரா கர்மம் த்யாஜ்யம் என்றது. ஸ்வரூபேண கர்மம் உத்தேச்யம் என்று இப்பாதத்தில் கூறப்படுகிறது.

இவ்வங்கபாதத்தில் உபாயமான உபாஸநத்துக்கங்கமான கர்மம் விசாரிக்கப்படுகிறது.

கர்மகாண்டத்தில் கர்மம் விசாரிக்கப்பட்டதாயினும் அது பலஸங்க யுக்தமாயின் அது கேவல கர்மமாகும். பகவத் கைங்கர்யத்வ விதுரமென்றபடி. அது அநித்யபலகம். அது த்யாஜ்யமாம். இங்கே கூறப்பட்ட கர்மம் உத்தேச்யமானது. உபாஸநாங்கமானது. கர்மகாண்டத்தில் ஸ்வர்காதி ஸாதநமாகக் கூறப்பட்ட கர்மங்களே இங்கு உபாஸநாங்கமாகக் கூறப்படுகின்றன. இதுவே விநியோக ப்ருதக்த்வ ந்யாயமாகும்.

இப்பாதத்தில் அதிகரணங்கள் 15.

முதலதிகரணத்தில் கர்மங்களின் அங்கத்வ ஸித்திக்காக வித்யையின் அங்கித்வத்தை ஸ்த்திரீக்கிறார்.

இரண்டாவது மூன்றாவது பதிமூன்றாவது அதிகரணங்கள் ப்ராஸங்கிகங்கள். மேல் அங்க விசாரம்.

கர்மங்களும் சமதமாதிகளும் பாண்டித்ய பால்யமௌநங்களும் அங்கமென அறுதியிடுகிறார் இப்பாதத்தில் வ்யாஸர்.

இப்படி அங்கசிந்தை செய்த வ்யாஸர் பதினான்காவது பதினைந்தாவது அதிகரணங்களில் அங்கிநிஷ்பத்தி ஸமய சிந்தை செய்கிறார் என்று பேடிகா விபாகம் கொள்க.

ப்ரஹ்ம வித்யைக்கு கர்மம் அங்கம் என்று இப்பாதத்தில் கூறும் வ்யாஸர் வாக்யார்த்த ஜ்ஞாநமாத்ரம் ஸாதநம் என்று கூறும் சாங்கரமதத்தையும், ஜ்ஞாநகர்ம ஸமஸமுச்சயவாதி யாதவப்ரகாசமதத்தையும், ஜ்ஞாநமே கர்மத்துக்கு அங்கமென்று கூறும் நிரீச்வரமீமாம்ஸக மதத்தையும், ஜீவர்கள் நித்ய முக்தர், மோக்ஷம் ஸாத்யமன்று என்று கூறும் ஸாங்க்ய மதத்தையும் நிரஸித்தாரிறே.

ப்ரஹ்மவித்யை மோக்ஷஸாதநம் அங்கி, கர்மம் ததங்கம் என்று ஸித்தாந்த ஸ்த்தாபநம் செய்தார் வ்யாஸர்.

---

### நான்காமத்யாயம் (பலாத்யாயம்)

இந்த அத்யாயத்தின் பாதங்கள் நான்கினையும் 2+2=4 என்று இரு பேடிகைகளாகப் பிரிக்கலாம். உத்தரபூர்வாக அச்லேஷ விநாசங்கள், உத்க்ராந்தி இவை இரண்டினையும் ப்ரஹ்மவித்யா பலங்களாக பூர்வ பாதத்வயத்தில் கூறுகிறார். இவையிரண்டும் ஸ்தூல தேஹ யுக்தகாலத்தில் ஏற்படும் பலங்களாகும்.

மேலிருபாதங்களில் அர்ச்சிராதி மார்க கமநமும் பகவத் ப்ராப்தியுமான பலங்களைக் கூறுகிறார். இவை ஸ்த்தூல தேஹத்தைத்துரந்தவனுக்கு ஏற்படும் பலங்களாகும். இப்படி பேடிகாவிபாகம்,

ஶாரீரகத்தில் 156 அதிகரணங்கள் உள்ளன. முதற்கண் நான்கு அதிகரணங்கள் உபோத்காதமாயமைந்தன. மேல் 125 அதிகரணங்களில் ப்ரஹ்மமும் ப்ரஹ்ம வித்யையும் நிரூபிக்கப் பட்டன. மேல் 27 அதிகரணங்களில் ப்ரஹ்ம வித்யாபலத்தை நிரூபிக்கிறார். ஆக ஶாரீரகம் 156 அதிகரணங்களும், உபோத்காதமும் ப்ரஹ்ம ப்ரஹ்ம வித்யாபல ப்ரதிபாதக பாகங்களென்றும் பேடிகாவிபாகம்.

---

### நான்காமத்யாயம் முதற்பாதம் (ஆவ்ருத்திபாதம்)

இப்பாதத்தில் அதிகரணங்கள் 11. 6+5=11 என்று பிரித்துக் கொள்க,

முதற்கண் ஆறு அதிகரணங்களில் வித்யாஸ்வரூப சோதநம் செய்கிறார். மேல் ஐந்து அதிகரணங்களில் வித்யா பலத்தைக் கூறுகிறார் என்றபடி.

ப்ரஹ்மவித்யை மோக்ஷஸாதநமேயாயினும் அதனை இந்த பலாத்யாயத்தில் வ்யாஸர் விசாரிப்பது கொண்டு நாமறியலாம், அதற்கு ஸாதநத்வம் இடுசிவப்பு, பலத்வமே ஸ்வாபாவிகாகார மென்று.

---

**நான்காமத்யாயம் இரண்டாம் பாதம் (உத்க்ராந்திபாதம்)**

ஸ்த்தூல தேஹஸ்த்திதி காலத்தில் ஏற்படும் பலமான உத்தரபூர்வாக அச்லேஷ விநாசங்களை முதற்பாதத்தில் கூறிய வ்யாஸர் மரண காலத்தில் ஏற்படும் பலத்தை இப்பாதத்தில் கூறுகிறார்.

இப்பாதமே ஸாங்க்ய மாயாவாதிகளுக்கு அஸங்கதம். மோக்ஷத்தை அஸாத்ய (ஸித்த)மாகக் கூறும் ஸாங்க்யனும், இங்கேயே மோக்ஷம் என்று கூறும் மாயாவாதியும் இவ்வுத்க்ராந்தி பாதத்தில் நிரஸ்தர்கள்.

---

**நான்காமத்யாயம் மூன்றாம் பாதம் (கதிபாதம்)**

மௌகுந்த முக்தி கண்டாபத நிர்ணயம் செய்யப்படுகிறது இப்பாதத்தில் என்று கொள்க.

அநாதிகாலம் ஸம்ஸரித்துக் கிடக்கும் ஸம்ஸாரி ஜீவன் அஜ்ஞாதஸுக்ருத விசேஷ மடியாக மோக்ஷமார்க ப்ரவ்ருத்தனாவதும், கர்மஜ்ஞாந பக்திநிஷ்டையும், வித்யா பேதங்களும், தத்ததிகாரங்களும், பரமாத்மோபாஸநத்தால் விரோதி பாபு

நிவ்ருத்தியும், அர்ச்சராதிமார்க கமநமும், என்றிவை முதலான ஸகலார்த்தங்களையும் நிர்விசேஷ ப்ரஹ்மவாதிகளும் இசைந்துள்ளார்கள். இவையித்தனையும் வ்யாவஹா ரிகங்கள். நிர்விசேஷ ப்ரஹ்ம தாதாதம்யப்ராப்தியே பரமமோக்ஷம் என்று கூறும் கூற்று கேவலம் கோஷமாகலாமத்தனை போக்கி, ஶாரீரகத்தில் அது கூறப்பட்டதன்று. பஞ்சமாத்யாய ம்ருக்யமாம் உத்ஸூத்ரமென்றபடி.

வ்யாஸ தாத்பர்யம் இவ்வளவே. இதுவே ஸ்ரீராமாநுஜ மதம்.

---

நான்காமத்யாயம் நான்காம் பாதம் (முக்திபாதம்)

இப்பாதத்தில் பேடிகா த்வயம்.

அக ஹாநத்தை முதற்பாதத்திலும், ஸ்த்தூல தேஹஹாநத்தை இரண்டாம் பாதத்திலும், ஸூக்ஷ்ம தேஹ ஹாநத்தை மூன்றாம் பாதத்திலும் கூறிய வ்யாஸர் இந்நான்காம் பாதத்தில் முக்தி நிர்ணயம் செய்கிறார்.

இப்பாதத்தில் அதிகரணங்கள் 6. 3+3=6 என்று பிரித்துக்கொள்க. ஸ்வரூபாவிர்பாவம் மோக்ஷம் என்பதனை முதல் மூன்று அதிகரணங்களிலும் ததநுகுண வ்ருத்தி விசேஷத்தை மேல் மூன்று அதிகரணங்களிலும் கூறுகிறார்.

கர்மாங்கமான பக்தியோகத்தால் பரமாத்மாவை ஆச்ரயித்த ஜீவன், அவன் அருளால் நிர்த்தூதபாபனாய், ஸூக்ஷ்மநாடீ விசேஷத்தால் சரீரத்தின் நின்றும் நிர்கதனாய், அர்சசிராதி

மார்க்கத்தால் பரமபதத்தை பராபித்து, ஆவிர்பூதஸ்வ் ஸ்வரூபனுய்ப் பரமனைப் பரிபூர்ணமாக அநுபவித்து. அபுநராவ் ருத்தனுய் வாழ்கின்றுன் என்றறுதியிட்டார் ஶாரீரகத்தில் ஸ்ரீ வேதவ்யாஸர்.

மீமாம்ஸாகாண்ட த்ரயத்திலும் மாயாவாதகந்த ப்ரஸங்க மில்லை என்பர் பரம வைதிக ஸார்வபௌமர்கள்.

எம்பெருமானுர் திருவடிகளே சரணம்.

—ஐ—



ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸங்கதி நிருபணம்

இவ்வாறு பேடிகாவிபாகத்தை ஸ்ரீபாஷ்யஸாரத்தில் நிரு பித்தபடி. நமது ஸித்தாந்தத்திலிசைந்த ஸங்கதிகள் 8. அவை யாவன—சாஸ்த்ர—காண்ட—த்விக—அத்த்யாய—பாத—பேடிகா—அதிகரண—ஸூத்ர ஸங்கதிகள். ஸங்கதியாவது—அபிதாநப்ரயோஜகஸம்பந்தம். உதாஹரணம்—ஸமந்வயாத்யா யத்திலே இவ்வாக்யங்கள் விசாரிக்கப்படுகின்றன. அவற்றுக்கு ஏற்பட்ட முற்பாடு பிற்பாடு முதலியதற்கு அபேக்ஷிதமான ஸம்பந்தம்: அநந்தராபிதாந ப்ரயோஜக ஸம்பந்தம் ஸங்கதி என்பர் தார்கிகர். அது சாஸ்த்ர ஸங்கதிகுச்சேராது. சாஸ்த் ரத்திலே ஸங்கதியேன்றி சாஸ்த்ரத்ரத்துக்குப்பிறகு என்று பொருள் கூடாதிறே. காண்ட ஸங்கதி முதலாக அநந்தாபிதா நம்கூடும். அவற்றிலும் காண்டத்தில் ஸங்கதி த்விகத்தில் ச்ங்கதி அத்யாயத்தில் சங்கதி என்றிவ்வாறு ஸங்கதிகளிருப்ப தால அநந்த்ரா பிதாநமென்பதே ஸங்கதியாகமாட்டா. ஸூத்ர ஸங்கதியை ப்ரக்ருத்யதிகரணம் முதலியவற்றில் ச்ருதப்ரகாசி காசார்யர் நிருபித்துள்ளார். ஆகவே அதிகரண சிந்தாமணி யிவே ஸூத்ரஸங்கதியுள்பட எட்டு ஸங்கதிகள் நிருபித்தருளி ஞர் குமாரகுரு வரதாசார்யர்.

ஸங்கதிகளின் பெயர் மற்றெரு ஆறுவிதமாகவுண்டு.

(1) ஆக்ஷேபஸங்கதி. (2) த்ருஷ்டாந்த ஸங்கதி,
(3) ப்ரத்யுதாஹரண ஸங்கதி, (4) உபோத்காத ஸங்கதி,
(5) அபவாத ஸங்கதி, (6) ப்ரஸங்க ஸங்கதி என்று.

